# தமிழ்க் காப்பியம்

## வளையாபதி, குண்டலகேசி





கழக வெளியீடு

# வளையாபதி
# குண்டலகேசி



★

பெருமழைப் புலவர்
திரு பொ வே சோமசுந்தரனர்
விளக்கவுரையுடன்

★

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.
1977

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ௧௧௭௮

முதற்பதிப்பு : சனவரி 1964
மறுபதிப்புகள் : ஏப்பிரல் 1970; ஆகஸ்டு 1977



VALAIYAAPATI
KUNDALAKESI

அப்பர் அச்சகம், சென்னை-600 001. (1/6)

# பதிப்புரை

தாய்மொழியாய செந்தமிழ் மொழியிற் சிறந்த நூலுள்ளன வெல்லாம் ஆய்ந்து கண்டெடுத்து நன்முறையில் அச்சியற்றி வெளிப்படுத்தி நாட்டுக்கு நலம் விளைப்பதே நம் கழகத்தின் நோக்கமாகும். அந்நோக்கம் நிறைவேற்று முறையில் அரிய பெரிய நூல்கள் ஆண்டுதோறும் புது முறையில் வெளி வருவதைத் தமிழன்பர் பலரும் அறிவர். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களனைத்தும் கழகப் பதிப்பாக வந்துள்ளன காணலாம். சூளாமணி, பெருங் கதை, கல்லாடம் போன்ற அருமையான நூல்களுக்கும் எளிய இனிய உரை விளக்கம் வரைவித்துப் பதித்தனம். ஐம்பெருங் காப்பியங்களிற் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை மூன்றும் கழக வாயிலாக வெளிவந்துள்ளன. வளையாபதி, குண்டலகேசி நூல்கள் முழு வடிவத்திற் கிடைக்கும் என இதுகாறும் எதிர்நோக்கினம். அந்நோக்கம் நிறைவேறாது வறிதே கழிந்தன. வளையாபதி, குண்டலகேசி என்ற நூற் பெயர் நிலைத்திருப்பதற்கும் அந்நூற் கவிகளின் சுவை கற்றோருள்ளத்திற் பதிந்திருப்பதற்கும் இஞ்ஞான்று கிடைத் துள்ள பாக்களையாவது வெளிப்படுத்துவது நலம் எனக் கருதியது கழகம்.

புறத் திரட்டு என்ற நூலைத் தொகுத்த புரவலர் சான்றோர், அந்நூலுள் வளையாபதிச் செய்யுள் எனக் காட்டியவை அறுபத்தாறு, பண்டைக்கால உரையாசிரியர் மேற் கோளாக எடுத்தாண்ட கவிகள் ஆறு, இவ்வெழுபத் திரண்டு கவிகளே வளையாபதிச் செய்யுட்களாகத் தொகுத்தனம். குண்டலகேசி நூற்செய்யுள் எனக் கண்டவை பத்தொன்பதே. இவ்விரு நூற் கவிகளையும் தொகுத்து உரையாசிரியர், பெருமழைப் புலவர் உயர்திரு. பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள்பால் விளக்கவுரை வரைந்து தருமாறு வேண்டிப் பெற்று இற்றைநாள் வெளியிடுகின்றோம். உரையாசிரியர் அவர்களுக்குக் கழகம் என்றும் நன்றி பாராட்டும் உரிமை யுடையது.

வளையாபதி மூலமும் உரையும், குண்டலகேசி மூலமும் உரையும் என இருவகையாகப் பகுத்து ஒரு புத்தகம் ஆக்கினம். எளிய இனிய உரையும் விளக்கமும் அமைந்துள்ளது. செய்யுட்கள் யாவும் நன்கு சீர்பிரித்துக் கற்போர் மனத்தைக் கவருமாறு பெரிய எழுத்திற் பதிக்கப்பட்டுள்ளது. கட்டும் வனப்பு வாய்ந்ததே.

தமிழன்பர் பலரும் வளையாபதியையும், குண்டலகேசியையும் தமிழ்த்தாய்க்கு நல்லணியாகக் கண்டு, கிடைத்துள்ள பொருளைப் போதுமெனப் போற்றி மகிழ்வார்போற் கிடைத்த பாக்களைப் போற்றி வாழ்க!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# அணிந்துரை

"சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி" என்னும் இவ்வைந்து நூல்களையும் 'ஐம்பெருங்காப்பியம்' என்று கூறுவர். இவ்வாறு இவற்றைக் கூறுவதனை நன்னூல் மயிலைநாதருரையிற் காணலாம். இவ்வைம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகத் திகழும் வளையாபதி என்னும் நூல் இக்காலத்தே கிடைத்திலது. அஃது இனிக் கிடைக்கலாம் என்னும் நம்பிக்கையும் இல்லை. ஆயினும் அதனுடைய செய்யுள் சிலவற்றைப் பண்டைக்காலத்து உரையாசிரியப் பெரு மக்கள் தத்தம் உரைக்கு மேற்கோளாக எடுத்தாண்டிருக்கின்றனர். எனவே இவ்வாற்றான் அவ் வளையாபதிச் செய்யுள் ஒரு சில நமக்குக் கிடைத்துள்ளன. இன்னும் புறத்திரட்டு என்னும் நூலைத் தொகுத்த சான்றோர் இவ் வளையாபதிக் காப்பியத்தினின்றும் அறுபத்தாறு செய்யுள்களை அந் நூலின்கட் சேர்த்துள்ளனர். இவ்விருவகையானும் இற்றைநாள் நம் கைக்கெட்டியவை எழுபத்திரண்டு செய்யுள்களேயாம்.

மேற்கூறப்பட்ட செய்யுள்களினின்றும் இந்நூல் ஆருகத சமயம் பற்றி எழுந்த நூல் என்பது புலப்படுகின்றது. இஃதன்றி இந்நூலை இயற்றிய புலவர் பெருமான் யார் என்றுதல், இந்நூலிற் கூறப்பட்ட வரலாறு அல்லது கதை யாதுஎன்றுதல். யாம் அறிந்துகோடற்கு வழியில்லை. கிடைத்திருக்கின்ற செய்யுள்களின் பண்புகொண்டு நோக்குமிடத்து இதனை இயற்றியவர் புலமைப் பண்புமிக்க நல்லிசைப் புலவர் என்று திண்ணமாக விளங்குகின்றது. ஒப்பற்ற புலவராகிய ஒட்டக்கூத்தர் இயற்றியருளிய தக்கயாகப்பரணியின் உரையாசிரியர்ஓரிடத்தே "இவர் (ஒட்டக்கூத்தர்) வளையாபதியை நினைத்தார் கவியழகு வேண்டி" என்று குறிப்பிட்டிருப்பதாலும் இவ் வளையாபதி செய்யுளழகு நிரம்பிய இனியதொரு காப்பியம் என்பதனை வலியுறுத்துகின்றது.

இனி அடியார்க்குநல்லார் இளம்பூரணர் முதலிய உரையாசிரியப் பெருமக்கள் இவ் வளையாபதிச் செய்யுளை மேற்கோளாக எடுத்திருப்பதனாலும் இந்நூல் தமிழ்மரபு இழுக்காதியன்றதொரு நல்லிலக்கியம் என்பதனை அறிவுறுத்துகின்றது; சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதிய அரும்பத உரையாசிரியரும் அடியார்க்குநல்லாரும் இவ் வளையாபதியை ஈரிடங்களிலே குறிப்பிட்டிருக்கின்றனர். அரும்பதவுரையாசிரியர் கானல் வரியில் கஉ-ஆம் செய்யுள் அரும்பதவுரையில் "நீர் கடலிலட லைவன் வரி புழவர்' என 'வளையாபதி'யினுங் கூறினர்" எனவும், அடியார்க்கு நல்லார் கனாத்திறமுரைத்த காதையில் கச-ம்: விளக்கத்தில் "பாசண்டம் தொண்ணூற் றறுவகைச் சமய சாத்திரத் தருக்கக் கோவை; என்னை? 'பண்ணூற் றிறத்தின் பழுதின்றி மேம்பட்ட, தொண்ணூற் றறுவகைக்கோவையும் வல்லவன், விண்ணூடியங்கும் விறலவ ராயினும், கண்ணுறி நோக்கிக் கடுநகை செய்வான்'

என்றார், வளையாபதியினுமாகலின்'' எனவும் ஆய்ச்சியர் குரவையில் ககஆம் அடி விளக்கத்தில் "கொன்றைப் பழக்குழற் கோதையர்'' என்றார் 'வளையாபதியினும்' எனவும் உ௦ஆம் அடியுரை விளக்கத்தில் "அன்றைப் பகற்கழிந் தாளின் றிராப்பகல், கன்றின் குரலும் கறவை மணி கறங்கக், கொன்றைப் பழக்குழற் கோவலராம்பலும், ஒன்றல் சுரும்பு நரம்பென வார்ப்பவும்' என வளையாபதியுள்ளும் கருவி கூறிப் பண் கூறுதலானும்'' எனவும் கூறியிருத்தல் உணர்க.

இனி, தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இளம்பூரண அடிகளார் ௬௦௭ஆம் நூற்பாவிற்கு 'உலகம்...என்றியான்' என இவ் வளையாபதிச் செய்யுளை மேற்கோளாகக் காட்டுகின்றார். யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியர் இச் செய்யுளையும், "நீல நிறத்தனவாய்...... நெஞ்சே'' எனவும், "வித்தகர்......நெஞ்சே'' எனவும் வரும் செய்யுள் களையும் மேற்கோளாக எடுத்துள்ளனர்.

இனி, திருக்குறளில் ஆசிரியர் பரிமேலழகரும்,

"'இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்'' (குறள் - அ௨௨)

என்னுந் திருக்குறள் விளக்கவுரையின்கண் "அவர் மனம் வேறுபடுதல், 'பெண்மனம் பேதின் றொருப்படுப்பே னென்னும், எண்ணி லொருவன்' என்பதனானும் அறிக'' என இவ் வளையாபதிச் செய்யுளை மேற்கோள் காட்டலுமுணர்க.

மேற்கூறியவற்றால் இவ் வளையாபதி என்னும் பெருங்காப் பியத்தைத் தமிழகத்துச் சான்றோர் அனைவரும் பெரிதும் விரும்பிப் பயின்று வந்தனர் என்பது விளங்கும்.

புறத்திரட்டினைத் தொகுத்த புலவர் காலம் வரையில் இவ் வளையாபதி இத் தமிழகத்தில் முழுவுருவத்துடன் இருந்திருத்தல் வேண்டும் என்று தோன்றுகின்றது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இந்நூல் முழுதும் கிடைக்கப் பெறாமை தமிழரின் தவக்குறைவே என்பதில் ஐயமில்லை. ஆயினும், இற்றைநாள் கிடைத்துள்ள இச் செய்யுள்களையேனும் பாதுகாத்து நந்தம் வழித் தோன்றல்களுக்கு வழங்குவது நமது கடமையாகும் என்பது கருதியும் அரிதுணர் செய்யுள்களாகிய இவற்றிற்கு உரையும் எழுதி வெளியிடுதல் தமிழர்க்கு ஆக்கமாம் என்று கருதியும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் அடியேனைக் கருவியாகக் கொண்டு அப் பணியை இந்நூல் வெளியீட்டின் வாயிலாய் இனிதே நிறைவு செய்கின்றனர்.

வாழ்க நங்கன்னித் தமிழ்!

இங்ஙனம்,
உரையாசிரியன்
பொ. வே. சோமசுந்தரன்

# உள்ளுறை





உ

# வளையாபதி

## மூலமும் உரையும்

### கடவுள் வாழ்த்து

க. உலகமூன்று மொருங்குட னேத்துமாண்
டிலகமாய திறலறி வன்னடி
வழுவி னெஞ்சொடு வாலிதி னாற்றவுந்
தொழுவ னொல்வினை நீங்குக வென்றியான்.

(இச் செய்யுள் தொல்காப்பியத்திற்கு இளம்பூரண வடிகளார் வகுத்த உரையின்கட் கண்டது.)

(இதன் பொருள்) உலகம் மூன்றும் - மூன்றுலகத்துள்ளும் வாழும் சான்றோரனைவரும்; ஒருங்கு உடன் ஏத்தும் - ஒருசேர வாழ்த்தி வணங்குதற்குக் காரணமான; மாண் திலகம் ஆய - மாட்சிமை மிக்க திலகமாகத் திகழா நின்ற; திறல் அறிவன் - ஆற்றன் மிக்க முற்றறிவினையுடைய அருகக் கடவுளின்; அடி - திருவடிகளை; தொல்வினை நீங்குக என்று - என்னுடைய பழவினைகள் துவரக்கெடுவனவாக என்று கருதியும்; யான் வழுவு இல் நெஞ்சொடு - யான் காம முதலிய குற்றங்களில்லாத தூய நெஞ்சத்தோடிருந்து; வாலிதின் ஆற்றவும் - அதற்குக் காரணமான நோன்பினைத் தூய்தாகப்பண்ணவும்; தொழுவல் - என் மனமொழி மெய்களாலே தொழுது வழிபடுவேன் என்பதாம்.

(விளக்கம்.) மூன்றுலகத்தும் வாழும் நல்லோர் ஒருங்கே வாழ்த்தி வணங்குதற்குக் காரணமான பெருஞ் சிறப்புடைய அருகக் கடவுளின் திருவடிகளை அடியேன் பழவினை கெடும் பொருட்டும், அவை கெடும் பொருட்டுக் குற்றந் தீர்ந்த நன்னர் நெஞ்சத்தோடிருந்து தூய்தாக அவன் கூறிய நல்லறங்களை மேற்கொண்டொழுகவும் திருவருள் கூர்தல் வேண்டும் என்று வணங்குகின்றேன் என்றவாறு.

## இஃது அருக சரணம்

மூன்றுலகம் என்பது மேலுலகும் நிலவுலகும் கீழுலகுமாம். இவற்றை ஒளியுலகம் நிலவுலகம் இருள் உலகம் என்ப. உலகம் ஈண்டு உயிர்களின் மேற்று. என்னை? ஏத்துதற்குரியன அவையே யாதலின் என்க.

இருள் உலகத்தாரும் அருகனை வணங்குவரே என்னின் வணங்குவர். என்னை? நரகவுலகமாகிய அதன்கண் வீழ்ந்துழல்வோர்க்கும் அவனடிகளையன்றிக் களைகண் பிறிதில்லையாகலின், அங்கும் நல்லறிவு பெற்று வணங்குவர் என்க.

நரகத்துழலும் உயிர்கள் நல்லறிவு பெற்றுத் தந்தீவினைக் கிரங்கி அறமுதலியவற்றைச் செய்ய அவாவுவர் என்பதனை,—

நரகத்தே கிடந்து நலிவோர் கூற்றாக வருகின்ற,

"தேடிப் பொருளைச் சிறுதொழிற்கே
செலுத்தி யுணர்ச்சி தெரியாமல்
பாடிப் பதருக் கிறைத்ததெல்லாம்
பலித்த தெமக்கீங் கென்பர்சிலர்
கேடிப் படிவந் தெமைச்சூழக்
கெடுத்த பாவி யுலகிலின்ன
நாடிப் பிறக்க விடினுமங்ங
னுட்டோ மென்று சிலர்சொல்வர்"

எனவும்,

"என்று பிறவோ மென்றிருந்தோ
பிறந்து படுவ தீதறிந்தால்
அன்று படைத்த பொருளையன்றே
யருள்வோ மறையோர்க் கென்பர்சிலர்
சென்று வரவாங் கெம்மையின்னஞ்
செலுத்திற் புதைத்த திரவியத்தை
யொன்று மொழியா தறம்புரிந்திங்
கோடி வருவோ மென்பர்சிலர்"

எனவும்,

"பிறந்த வுடனே துறந்துசுத்தப்
பிரம முணர்ந்து பிறப்பதனை
மறந்திந் நரகத் தெய்தாமை
வருமோ நமக்கு மென்பர்சிலர்
பிறந்து நிரையத் தழுந்தியிட
ரிவ்வா றுழப்ப தறியாமற்
சிறந்த விவேகர் பெருமான்நற்
செயலைத் தவிர்ந்தோ மென்பர்சிலர்"

எனவும் வரும் மெய்ஞ்ஞான விளக்கத்தானும் உணர்க.

இவ்வாறு தந்தீவினைக் கிரங்கு நரகர் அதன் நீர்வுகருதி இறைவன் அடிகளை ஒருதலையாக ஏத்துவர் என்க.

திலகம் – நெற்றிச்சுட்டி. அறிஞர் தம் நெற்றியிலிடுதற்கேற்ற திலகம் போன்ற அடிகள் எனினுமாம். திறல் அறிவன் – முற்றிவினை உடைய இறைவன்; இதனைக் 'கேவலஞானம்' என்பர். மூவுலகத்துமுள்ள உயிர் முதலிய பொருள்களின் முக்கால நிகழ்ச்சிகளையும் ஒரே சமயத்தில் ஒருங்கே அறியும் ஆற்றலுடைமையின் இறைவன் அறிவினைத் திறல் அறிவு என்றார்.

"உலகுணர் கடவுள்" என்று திருத்தக்கதேவரும் (சீவக-உஎக௫) "உலகம் மூன்று மொருங்குணர் கேவலத் தலகிலாத அநந்த குணக் கடல்" என்று (கடவுள் வாழ்த்து) யசோதரகாவியமுடையாரும் ஓதுத லுணர்க.

இனி, உலகம் மூன்றும் ஒருங்குடன் ஏத்துமாண் திலகமாய திறலறிவன் அடி என்று பொதுவி னோதியதன்றி அருகன் என்னாமையின் அருகக் கடவுளின் அடிகள் என்றுரை கூறியதென்னையோ? எனிற் (சமண சமயத்துப் பேராசிரியர் உரை கூறுமாறு) கூறுதும் :—

உலகத்துச் சான்றோரால் வணங்கப்படுபவர் இன்னாசெய்யாமையும், பொய் கூறாமையும், கள்ளாமையும் காமமில்லாமையும் பற்றின்மையும் முதலாகிய குணங்கள் உடையார் அல்லரோ? இக் குணங்கள் முழுதும் உடையான் அருகக்கடவுளேயன்றி வேறு சமயக் கணக்கர் கூறும் இறைவர்க்கெல்லாம் இக் குணங்களின்மையான் "உலகம் மூன்றும் ஒருங்குடன் ஏத்தும் மாண் திலகம் ஆய திறல் அறிவன்" என்பது அருகக் கடவுளுக்கே பொருந்துவதாயிற்று என்க.

இனி, இறைவன் அடிவணங்குதலின் குறிக்கோள், வழுவில் நெஞ்சொடு வாழ்தின் ஆற்றலே ஆதலின் அதனையே குறித்தார். வழுவில் நெஞ்சம் பெறுதற்கு இருள்சேர் இருவினையும் அகலுதல் இன்றியமையாமையின் "தொல்வினை நீங்கவும்" என்றார். தொல்வினை நீங்க என்றும் எனல் வேண்டிய எண்ணும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. (௧)

சாது சரணம்

௨. துக்கந் துடைக்கும் துகளறு காட்சிய
நிக்கந்த வேடத் திருடி கணங்களை
ஒக்க வடிவீழ்ந் துலகியல் செய்தபி
னக்கதை யாழ்கொண் டமைவரப் பண்ணி.

(இ - ள்.) துக்கந் துடைக்கும் துகள் அறு காட்சிய-பிறவிப் பெருந்துன்பத்தைத் துவரப் போக்குதற்குக் காரணமான குற்ற

அற்ற மெய்க்காட்சியையுடைய; மிக்க வேடத்து இருடிகணங்களை - பதினோராங்குணத்தானத்து நின்ற மிக்க நல்லவர் என்னும் துறவோர் குழுவினை, ஒக்க அடிவீழ்ந்து-மனமொழி மெய்கள் ஒருசேரத் திருவடிகளிலே வீழ்ந்து; உலகியல் செய்தபின்-வணங்கி, உலகத்துச் சான்றோர் செய்யும் கடவுள் வாழ்த்து வகையினைச் செய்தபின்னர்; யாழ் கொண்டு-யாழினைக் கைக்கொண்டு; அமைவரப் பண்ணி-அதனை ஆராய்ந்து சுதி கூட்டிய பின்னர் என்க.

(வி - ம்.) இச்செய்யுள் சிலப்பதிகார வுரையிற் காணப்பட்டது. (சிலப் - ௧; ௧௩. அடியார்க்கு நல்லார் உரைமேற்கோள்.) துக்கம் - பிறவித்துயர். துகள்-அழுக்கு; அவை, காமவெகுளி மயக்கம். காட்சி-மெய்க்காட்சி. இருடிகணம் - துறவோர் குழு. உலகியல், உலகோர் செய்யும் முறைமை. இச் செய்யுள் யாழிசைக்கும் ஒருத்தியின் செயலைக் கூறுகின்றது. இவள் வரலாறு யாதும் தெரிந்திலது அக்கதை என்று ஆசிரியர் சுட்டும் கதையும் இன்னதென்று தெரிந்திலது. யாழைக் கைக்கொண்டு அமைவரப் பண்ணி என்க. அமைவரப் பண்ணுதலாவது, சுதி கூட்டுதல். இதனை,

"......குற்றநீங்கிய யாழ்கையிற் றொழுது வாங்கிப்
பண்ணல் பரிவட்டணை யாராய்தல் தைவரல்
கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ்
நண்ணிய குறும்போக் கென்று நாட்டிய
எண்வகையா லிசையெழீஇப்
பண்வகையாற் பரிவு தீர்ந்து
மரகத மணித்தாள்செறிந்த மணிக்காந்தண் மெல்விரல்கள்
பயிர்வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் மிசைப்படர
வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்
சீருட னுருட்ட றெருட்ட லள்ளல்
ஏருடைப் பட்டடையென விசையோர் வகுத்த
எட்டுவகையி னிசைக்கர ணத்துப்
பட்ட வகைதன் செவியி னோர்த்து"

எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க. (எ : ச - ௧௧)

இனி, இச் சாதுக்களை, "பேதுறு பிறவி போக்கும் பெருந்திருவுருவுக்கேற்ற, கேதறு குணங்கள் டெய்த கொள்கலம் அனைய ராகிச், சேதியின் நெறியின் மேற சிறந்தது சிந்தை செய்யாச், சாதுவர் அன்றி யாரே சரண்பக குகி குவார்" என்று யசோதர காவியமுடையாரும் (௪௬) பாடிப் பரவுதல் உணர்க. (௨)

(மேல்வருஞ்செய்யுளிரண்டும் யாப்பருங்கலவிருத்தியிற்காணப்பட்டன.)

### நெஞ்சறிவுறூஉ

௧. நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
கோலம் குயின்ற குழல்வாழி நெஞ்சே
கோலங் குயின்ற குழலுங் கொழுஞ் சிகையுங்
காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே
காலக் கனலெரியின் வேவன கண்டாலுஞ்
சால மயங்குவ தென்வாழி நெஞ்சே.

(இ - ள்.) நெஞ்சே - என்னெஞ்சமே நீ; நீல நிறத்தனவாய் நெய்கனிந்து - நீல நிறமுடையனவாய் நெய்ப்புமிக்கு; போது அவிழ்ந்து - சூட்டப்பட்ட மலர்கள் மலரப்பட்டு; கோலம் குயின்ற குழல் - ஒப்பனை செய்யப்பட்ட அழகிய கூந்தல் என்று மகளிர் கூந்தலைப் பாராட்டுகின்றனை; கோலம் குயின்ற குழலும் - அவ்வாறு ஒப்பனை செய்யப்பட்ட அக் கூந்தலும்; கொழுஞ்சிகையும் - அதனாலியன்ற கொழுவிய கொண்டையும்; காலக் கனல் எரியின் வேம் - ஈமத்தீயாகிய நெருப்பின்கண் வெந்தழியு மல்லவோ?; காலக் கனல் எரியின் - அவ்வாறு ஈமத்தீயின்கண்; வேவன கண்டாலும் - வெந்தழிவனவற்றை நீ கண்கூடாகக் கண்டுவைத்தும்; சால மயங்குவது என் - அவற்றினியல்போராது பெரிதும் மயங்குவதற்குக் காரணந்தான் என்னையோ?; வாழி நெஞ்சே - நீ வாழ்வாயாக!

(வி - ம்.) நெய்கனிதல் - நெய்ப்புமிகுதல். போது - மலர். கோலம் - ஒப்பனை. குயின்ற - செய்த. வாழி: அசை. சிகை - கொண்டை. காலக் கனல் - ஊழித்தீ; ஈண்டு ஈமத்தீ.

நெஞ்சே நீ மகளிருடைய கூந்தலையும் அதன் ஒப்பனையும் கண்டு பெரிதும் காமுற்று மயங்குகின்றனை; இத்தகைய கூந்தல்களை நாள்தோறும் அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டிருப்பா யல்லையோ? அங்ஙனம் கண்டிருந்தும், அதன்பால் நீ இவ்வளவு மயங்குவானேன்! இம் மயக்கம் "கூராரும் வேல்விழியார் கோலாக லங்கள் எல்லாம், தேராத சிந்தையரைச் சித்திகொளும் அல்லாமல், நோடீள் நிற்கும் நிலையுணர்ந்து நற்கருமம், ஆராய்பவருக்கு அருவருப்பதாய் விடுமே" என்பது குறிப்பு. (௧)

### இதுவுமது

௨. வித்தகர் செய்த விளங்கு முடிகவித்தார்
மத்தக மாண்பழிதல் காண்வாழி நெஞ்சே
மத்தக மாண்பழிதல் கண்டால் மயங்காதே
உத்தம நன்னெறிக்க ணில்வாழி நெஞ்சே
உத்தம நன்னெறிக்கண் நின்றாக்கஞ் செய்தியேல்
சித்தி படர்த றெளிவாழி நெஞ்சே.

(இ - ள்.) நெஞ்சே! வாழி-என் நெஞ்சமே நீ நீடு வாழ்வாயாக!; வித்தகர் செய்த-தொழிற்றிறமையுடைய கம்மியரால் செய்யப்பட்ட; விளங்கு முடி கவித்தார் – விளக்கமுடைய முடிக்கலன் அணிந்த மன்னர்களுடைய; மத்தகம்-சிறந்த தலைகளும்; மாண்பு அழிதல் காண்-ஒருகாலத்தே அச் சிறப்பெல்லாம் அழிந்து பிறரால் இகழப்படுதலை நினைத்துக் காண்பாயாக!; மத்தக மாண்பு அழிதல் கண்டால்-அவ்வாறு அரசர்தம் தலை முதலியனவும் சிறப்பழிந்தொழிதலை ஆராய்ந்து மெய்ம்மையுணரின்; மயங்காதே உத்தம நல்நெறிக்கண் நில்-அவற்றைக்கண்டு மயங்காமல் தலைசிறந்த நன்னெறியிலே நிலைபெற்று நிற்கக் கடவை; உத்தம நல் நெறிக்கண் நின்று ஊக்கஞ் செய்திமேல்-மெய்ம்மையுணர்ந்தவழி, தலைசிறந்த நல்லொழுக்கத்தின்கண் மேலும் முயன்றொழுகுவாயாயின்; சித்தி படர்தல் தெளி-நீ வீட்டுலகத்தினை எய்திப் பேரின்புற்றிருத்தல் ஒருதலை என்றுணர்ந்துகொள்ளக் கடவை; நெஞ்சே வாழி-என்னெஞ்சமே நீ நீடு வாழ்வாயாக! என்பதாம்.

(வி - ம்,) வித்தகர்-தொழிற்றிறமை மிக்கவர். வித்தகர் செய்த முடி, விளங்கு முடி எனத் தனித்தனி கூட்டுக. மத்தகம் தலை. உத்தம நன்னெறி என்றது, நல்லொழுக்கத்தினை. சித்தி-வீடு பேறு.

இனி, இவ்விரண்டு செய்யுட் கருத்தோடு,

"வண்டுவாம் வார்குழலும் வாளெயிறும் பூண்முலையும்
தொண்டைவாய் நன்னலமும் தோளுந் துடியிடையும்
கண்டுவாங் காமுகரும் யாமும் கணநரியும்
விண்டுவாக் கொண்டுணரின் வேறுவே றுமன்றே''

எனவும்,

"கரையவா வாங்குங் கயமகன் கைத்தூண்டில்
இரையவாப் பன்மீ னிடருறுவ தேபோல்
நுரையவா நுண்டுகிலு மேகலையுஞ் சூழ்ந்த
வரையவாய்ப் பட்டார்க்கு மாழ்துயரே கண்டீர்''

எனவும்,

"மட்டார் மலர்புனைவும் வாணெடுங்கண் மையணிவும்
பட்டார் கலையுடையும் பல்வளையும் பைந்தோடு
நட்டாரை யெல்லா நரகுக்கே யுய்க்குநாய்க்
கொட்டார்த்தார் செய்யுங் கோலங்கள் வண்ணம்''

எனவும்,

"ஆடினுய் நான மணிந்தாய் கலன்மாலை
சூடினு யேனுஞ் சுணங்கார் வனமுலையா
யூடினு யாக வொழுக்கூற்றைப் பல்பண்டம்
மூடினுய் தோலின் முகம னுரையேனே"

எனவும்,

"மின்போ னுடங்கிடையும் வேயேய் திரடோளு
மென்றே யிவைமகிழ்ந்தீங் கென்முன்னே வந்தாயாற்
புன்ருேலும் பல்லென்பும் போர்த்த புறங்காட்டு
என்றே யுறைவ வவற்ருன் மருள்வேனே"

(தருமவுரை - ௧௧௬ - ௧௨௩)

எனவும் வரும் நீலகேசிச் செய்யுள்களும் நினைவு கூரற்பாலன.

இவ்வாறு உடம்பின் வாலாமையை நினைந்து நினைந்து அதன்பாற் பற்றறுப்பதனைச் சமண சமயத்தினர் 'அசுசியநுப்பிரேக்ஷை' என்று கூறுப. பௌத்தர் 'அசுப பாவனை' என்ப. (௮)

(இனி வருகின்ற செய்யுள்கள் புறத்திரட்டிலிருந்தெடுக்கப்பட்டவை.)

மக்கள் யாக்கையும் செல்வமும் பெறுதல் அரிதெனல்

௯. வினைபல வலியி னுலே வேறுவே றியாக்கை யாகி
நனிபல பிறவி தன்னுட் டுன்புறூஉ நல்லுயிர்க்கு
மனிதரி னரிய தாகுந் தோன்றுத ருேன்றி னுலு
மினியவை நுகர வெய்துஞ் செல்வமு மன்னதேயாம்.

(இ-ள்.) பலவினை வலியினுலே - பல்வேறு வகைப்பட்ட தீவினைகளின் ஆற்றலாலே; வேறுவேறு யாக்கை ஆகி - பலவேறு வகைப்பட்ட உடம்புகளை யுடையனாகி; நனி பல பிறவி தன்னுள் - மிகவும் பலவாகிய பிறப்புகளிலே புகுந்து அவ்வப் பிறப்புகளிலெல்லாம்; துன்புறூஉம் - துயர மெய்துகின்ற; நல் உயிர்க்கு - நல்ல நம்முயிர்க்கு; மனிதரில் தோன்றுதல் அரியது ஆகும் - மக்கள் பிறப்பிலே பிறத்தல் மிகவும் அரியதொரு செயலேயாம்; தோன்றினுலும் - ஒரோவழி அரிதாய அம் மக்கள் பிறப்பிலே பிறந்தாலும்; இனியவை நுகர எய்தும் செல்வமும் அன்னதே ஆம் - அம் மக்கட் பிறப்பின்கண் இனிய பொருள்களை நுகர்தற்கு இன்றியமையாததாய் வருகின்ற செல்வந்தானும்; அம் மக்கட் பிறப்புப் போன்றே பெறுதற்கரிய தொன்றேயாம். ஆகவே மக்கட் பிறப்பும் மாண்புடைத்தன்று என்பதாம்.

(வி - ம்.) உயிரின் பிறப்புகள் வேறுபடுதற்குக் காரணம் வினை வேறுபாடேயாதலின் பலவினை வலியினுலே வேறுவேறு யாக்கையாகி என்ருர்; இதனை,

"விண்ணோ ருருவி னெய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் மறிக்கினு மறிக்கும்
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்
விலங்கின் யாக்கை விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்
ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது
செய்வினை வழித்தா யுயிர்செலு மென்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை''

எனவரும் இளங்கோவடிகளின் மொழியானு முணர்க.

(௨௮ : ௧௬௮ - ௭௮)

இனி, நரககதி விலங்குகதி மக்கட்கதி தேவகதி என்னும் நால்வகைப் பிறப்பினூடும் ஒவ்வொன் றன்கண்ணும் எண்ணிறந்த பிறப்பு வேறுபாடுகள் உண்மையின், 'நனிபல பிறவி' என்றார். இனி, தேவகதியையுள்ளிட்ட எல்லாப் பிறப்பும் துன்பத்துக்கே ஏதுவாதல் பற்றி, 'பிறவி தன்னுள் துன்புறூஉம் நல்லுயிர்' என்றார். இனி,

"இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்" —குறள், ௯௪௰

என்பவாகலின் துன்புறூஉம் நல்லுயிர் என உயிர்க்கு நன்மையை அடை புணர்த்தார். இனி உயிர்க்குப் பரிந்து நல்லுயிர் என்று இரங்கினார் எனினுமாம்.

இனி, மனிதரிற் றோன்றுதல் அரியதாகும் என மாறுக.

இனி, மக்களாய்ப் பிறந்தாலும் செல்வம் பெற்றாலொழிய இவ்வுலகத்தின்பம் யாதொன்றும் எய்துவதின்மையான் அரிதிற் பிறந்த அப்பிறப்பும் துன்பத்திற்கே ஏதுவாதலின் பொருளையே விதந்தெடுத்து "இனியவை நுகர எய்தும் செல்வமும் அன்னதேயாம்'' என்றார். என்னை ?

தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும், பொருளின் மாண்பினை,

"அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்'' —குறள், ௭௫௪

எனவும்,

"அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு'' —குறள், ௭௫௭

எனவும்,

"ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு'' —குறள், ௭௬௰

எனவும்,

> "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
> கிவ்வுலக மில்லாகி யாங்கு" —குறள், ௨௪௭

எனவும் பாராட்டிக் கூறுதலுணர்க.

பொறிகளா னுகருமின்பமும் அறத்தால் வருமெய்யின்பமும், வீடு பேற்றின்பமும் ஆகிய எல்லா இன்பங்களுக்கும் செல்வம் ஏதுவாதல் பற்றிப் பொதுவாக "இனியவை நுகர எய்தஞ் செல்வம்" என்றார். அன்னது என்றது முற்கூறியபடி அரிது என்றவாறு. (௨)

இதுவுமது

௩. உயர்குடி நனியுட் டோன்ற லூனமில் யாக்கை யாதன்
மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்ல ராதல்
பெரிதுண ரறிவே யாதல் பேரறங் கோட லென்றுங்
கரிதிவை பெறுத லேடா பெற்றவர் மக்க ளென்பார்.

(இ - ள்.) ஏடா-தோழனே!; நனி உயர்குடியில் தோன்றல் - ஓரோவழி மக்கட்பிறப்பிற் பிறந்த வழியும் மிகவுமுயர்ந்த குடியிலே தோன்றலும்; ஊனம் இல் யாக்கை ஆதல் - உயர்குடியிலே தோன்றிய வழியும், கூன் குருடு செவிடு மூடம் முதலிய குறைகளில்லாத நல்லுடம்பு பெறுதலும்; மயர்வு அறு கல்வி கேள்வித் தன்மையால் வல்லர் ஆதல்-மயக்கமறுதற்குக் காரணமான கல்வியறிவும் கேள்வியறிவும் பெறுமாற்றால் வன்மையுடையராதலும்; பெரிது உணர் அறிவே ஆதல்-அவ்வாறு கல்வியானும் கேள்வியானும் அறிவு வலியராய விடத்தும் அவ்வறிவு மெய்யுணரும் அறிவாதலும்; பேர் அறம் கோடல் - அங்ஙனம் அறிவு சிறந்துழியும் சிறந்த நல்லறத்தை மேற்கொண்டொழுகுதலும்; என்று ஆங்கு இவை அரிது-என்று கூறப்படுகின்ற இப் பேறுகள் எல்லாம் எய்துதல் அரிதேயாம்; பெற்றவர் மக்கள் என்பார்- அறிஞராய இவை எல்லாம் ஒருங்கே பெற்றவர்களே மக்கட் பிறப்புடையார் என்று மதிக்கத் தகுந்தவர் ஆவர் என்பதாம்.

(வி - ம்.) நனி உயர் குடியுட் டோன்றல் என மாறுக. செப்பம், நாண், ஒழுக்கம், வாய்மை, நகை, ஈகை, இன்சொல், இகழாமை, ஒழுக்கம் குன்றாமை, பண்பிற்றீராமை, சலம்பற்றிச் சால்பில செய்யாமை, பணிவுடைமை, இன்னோரன்ன மாந்தர்க்கணி நலனுய நலமெல்லாம் உயர் குடிப்பிறப்புடையார்மாட்டு இயல்பானுளவாகலும் ஏனையோர் மாட்டு இலவாகலும் காண்டலின், அந் நற்பண்புகள் எல்லாம் ஒருங்குடையார்க்கன்றிப் பிறவிப் பயன் எய்துதல் அரிதாகலின், அவ் வுயர்குடிப்பிறப்பும் பெறற்கரும் பேறென்றார்.

ஊனம் - செவிடு குருடு முதலிய உறுப்புக் குறைபாடுகள். மயர்வு – மயக்கம்.

> "நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
> னுண்மை யறிவே மிகும்" —குறள், ௩௭௩

என்பது பற்றி, கல்வி கேள்வியில் வல்லுநராய விடத்தும் உணர் அறிவுடையராதல் அரிதென்றார். ஈண்டு உணர் அறிவு என்றது மெய்யுணர்வினை. "கற்றனர் ஞான மின்றேல் காமத்தைக் கடக்கலாமோ?" என்னும் கம்பர் மொழியினும் ஞானம் என்பதுமது.

பேரறம் என்றது ஈண்டு ஆருகதசமயவறங்களை. இவை பெற்றவர் மக்கள் எனவே பெறுதார் மக்களாய்ப் பிறந்து வைத்தும் பயன் பெறுதவிலர் என்றாராயிற்று.

மக்களாகப் பிறப்பதன் அருமையை :

"பரவை வெண்டிரை வட்கடற் படுநுகத் துளையுட்
டிரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி
அரச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதால்
பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே"

"விண்டு வேய்நர லுன்விளை கானவ ரிடனும்
கொண்டு கூர்ம்பனி குலைத்திடு நிலைக்களக் குறும்பும்
உண்டு நீரென வுரையினு மரியன வொருவி
மண்டு தீம்புனல் வளங்கெழு நாடெய்த லரிதே"

"வில்லின் மாக்கொன்று வெண்ணிணத் தடிவிளிம் படுத்த
பல்லி லுர்களும் படுகடற் பரதவர் முதலா
எல்லை நீங்கிய விழிதொழி லிழிகுல மொருவி
நல்ல தொல்குலம் பெறுதலு நரபதி யரிதே"

"கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாள்
அருவி போற்றொடர்ந் தருதன வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையா
துருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே"

"காம னன்னதோர் கழிவனப் பறிவொடு பெறினும்
நாம நாற்கதி நவைதரு நெறிபல வொருவி
வாம னூனெறி வழுவறத் தழுவின ரொழுகல்
ஏம வெண்குடை யிறைவமற் றியாவது மரிதே"

எனவரும் சீவகசிந்தாமணியா னன்குணர்க. (முத்தி - கஙக-௭.) (௬)

## கற்புடை மகளிர்

௭. நாடு மூரு நனிபுகழ்ந் தேத்தலும்
பீடு றும்மழை பெய்கெனப் பெய்தலும்
கூட லாற்றவர் நல்லது கூறுங்காற்
பாடு சான்மிகு பத்தினிக் காவதே.

(இ - ள்.) கூடல் ஆறு அவர்-ஒத்த அன்பினால் மனமிசைந்து கூடி வாழுகின்ற இல்லற நெறியினை யுடையோராகிய தலைவன் தலைவியருள்ளைத்து; நல்லது கூறுங்கால்-நல்ல சிறப்பினை ஆராய்ந்து கூறுமிடத்து; நாடும் ஊரும் நனி புகழ்ந்து ஏத்தலும்-தாம் பிறந்த நாடும் தாம் வாழுகின்ற ஊரும் நனி மிகவும் புகழ்ந்து பாராட்டுதலும்; பீடு உறும் மழை - பெருமை மிக்க மழையானது; பெய்க எனப் பெய்தலும்-பெய்க என்று ஏவிய துணைமானே பெய்தற்குக் காரணமான தெய்வத்தன்மையும்; பாடுசால் பத்தினிக்கு ஆவது - அவ்விருவருள்ளும் பெருமைமிக்க கற்புடைய தலைவியாலாவனவேயாம் என்பதாம்.

(வி - ம்.) கூடல்-ஆறு. ஆணும் பெண்ணும் அன்பால் இணைந்து வாழுகின்ற இல்வாழ்க்கை நெறி. எனவே, கூடலாற்றவர் என்பது தலைவன் தலைவியர் என்பது பெற்றாம்.

நாடும் ஊரும் புகழ்கின்ற புகழ்ச்சி இருவருக்கும் பொதுவாயினும் அப் புகழுக்குக் காரணமாயிருப்பது தலைவியே யன்றித் தலைவன் அல்லன் என்பது கருத்து. என்னை?

"புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை" —குறள், ௫௯

எனவும்,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்" —குறள், ௫௬

எனவும்,

"இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதெ
னில்லவள் மாணாக் கடை" —குறள், ௫௩

எனவும்,

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்" —குறள், ௫௨

எனவும் தெய்வப்புலவர் திருவள்ளுவனாரும் இல்லறத்தாலெய்தும் புகழ்க்குக் காரணம் கற்புடைய வாழ்க்கைத் துணைவியே என்பதுபட ஓதுதலு முணர்க.

இனி, மனையறம் தெய்வத் தன்மையுடையதாய்ப் பொலிவதற்கும் கற்புடைய மகளிரே காரணம். தெய்வத்தன்மை தலைவிக்கே சிறந்துரிமையுடையதாம். அத்தெய்வத் தன்மையுடைமையாலே அத்தகைய மகளிர் வாழும் நாடே சிறப்புடையதாம் என அவருடைய தெய்வத் தன்மைக்கு ஒன்று எடுத்துக்காட்டுவார்,

'மழை பெய்கெனப் பெய்தலும்' என்றார். இத்தகைய சிறப்புத் தலைவனுக் கின்மையுமுணர்க. இக் கருத்தினை இந் நூலாசிரியர் பிறருக்குநளினின்றும் எடுத்தாளுகின்றனர். அது வருமாறு:—

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை" —குறள், ௫௫

என்னும் அருமைத் திருக்குறளே அஃதாம். இதற்கு ஆசிரியர் பரிமேலழகர், "தெய்வந்தான் ஏவல் செய்யுமென்பதாம், இதனாற் கற்புடையவளதாற்றல் கூறப்பட்டது" என்பர்.

இன்னும், இவ்வினிய செய்யுட் கருத்தோடு, கண்ணகியார் மாண்பினை,

"என்னொடு போந்த இளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புல ரவாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி
இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடென்னும்
அத்தகு நல்லுரை அறியா யோநீ"

எனக் கூறி அடைக்கலங் கொடுக்கின்ற கவுந்தியடிகளாரின் மணிமொழிகளையும் ஒப்புநோக்குக.

இன்னும் பத்தினிப் பெண்டிரின் தெய்வத்தன்மையை,

"அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்" கம்ப - சூளா - ௧௮

எனவரும் வைதேகியின் வீரவுரையானும் தெளிக. (எ)

கற்பில் மகளிர்

அ. பள்ள முதுநீர்ப் பழகினு மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறாஉங்
கள்ளவிழ் கோதையர் காமனே டாயினு
முள்ளம் பிறிதா யுருகலுங் கொண்ணீ.

(இ - ள்.) மீன் இனம்-மீன் கூட்டம்; முது பள்ளநீர்ப் பழகினும் - பழைதாகிய ஆழமான நீர்நிலையில் வாழ்ந்தாலும்; புதியது வெள்ளம் காணின் - புதியதாகிய வெள்ளம் வரும்பொழுது

அதனைக் கண்டால்; விருப்புறாஉம் - தனது பழைய நீர்நிலையை வெறுத்து அப்புதிய வெள்ளத்தே புகுவதற்குப் பெரிதும் விரும்பும்; அங்ஙனமே, தேன் அவிழ் கோதையர் - தேன் துளிக்கின்ற மலர் மாலையணிந்த மகளிர்; காமனோடு ஆயினும் - காமவேளையே கணவனாகப் பெற்று அவனோடு வாழ்வாராயினும்; உள்ளம் பிறிதாஉருகலும் - புதிய ஆடவரைக் காணுமிடத்து மனமாறுபட்டு அவரைத் தழுவ வினைத்து மனமுருகு மியல்புடையராதலும்; நீ கொள் - நீ குறிக்கொண்டு அவரை விரும்புதலொழிக என்பதாம்.

(வி - ம்.) பள்ளமுதுநீர்ப் பொய்கை - சிறப்புடைய கணவனுக்குவமை. மீனினம் - மகளிர்க்குவமை. புதியது காணின் என வுவமைக்குக் கூறியதனைப் புதியரைக் காணின் எனப் பொருளுக்குங்கொள்க. இது பொதுவாக மகளிரின் மனவியல்பு கூறியபடியாம்.

இனி இச் செய்யுளோடு,

"ஏந்தெழின் மிக்கான் இனையா விசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்"

எனவும்,

"முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார்
நிறையும் நெடுநாணும் பேணார்—பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டோ பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு"

எனவும்,

"கற்பின்மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர்—மற்றுத்தம்
கேள்வற்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார்" நீதிநெறி. அஎ, அக, அச

எனவும் வரும் குமரகுருபர அடிகளார் அருண்மொழியும்,

"அன்புநா ணாக இன்சொ லலர்தொடுத் தமைத்த காத
லின்பஞ்செய் காமச் சாந்திற் கைபுனைந் தேற்ற மாலை
நன்பகற் சூட்டி வின்னா தொழுகினு நங்கை மார்க்குப்
பின்செலும் பிறர்க ணுள்ளம் பிணையனார்க் கடிய தன்றே"

எனவும்,

"பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடைய வல்ல வோராயிர மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றுற்போன் மெலிந்துபின்
[னிற்கு மன்றே"

(௧௨௧ - ௬௭)

எனவும் வரும், சீவகசிந்தாமணிச் செய்யுள்களும்;

"மின்னினு நிலையின் றுள்ளம் விழைவுறின் விழைந்த யாவும்
துன்னிடும் மனத்தின் றூய்மை சூழ்ச்சியு மொழிய நிற்கும்
பின்னுறு பழியிற் கஞ்சா பெண்ணுயிர்ப் பெருமை பேறு
என்னுமிம் மொழிகட் கந்தோ விலக்கிய மாயி னாளே"

எனவரும் யசோதர காவியச் செய்யுளும் (கஇ) ஒப்புநோக்கற் பாலன.

ஈண்டுக் கூறப்படும் இயல்பு கற்பில்லாத மகளிரினியல்பே யாகும். மற்றுக் கற்புடை மகளிரின் மாண்பு மேலே கூறப் பட்டது. (௮)

இதுவுமது

௧. உண்டியுட் காப்புண் டுறுபொருட் காப்புண்டு
கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலமென்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே.

(இ - ள்.) கற்றறிந்தோர் - கற்றுப் பொருளியல்பினை அறிந்த சான்றோர்; உண்டியுள் காப்பு உண்டு - மக்கள் உண்ணும் உணவுகள் கெடாதபடி காத்துக்கோடற்கு வழியுண்டு; உறு பொருள் காப்பு உண்டு - மிக்க பொருள்களைக் கள்வர் கவராதபடி காத்துக்கோடற்கும் வழிகள் உளவாம்; விழுப்பொருள் கண்ட கல்விக்குக் காப்பு உண்டு - செல்வப் பொருளினும் சிறந்ததாக வுணரப்பட்ட கல்வியறிவு மறந்துபோகாதபடி காத்துக்கோடற்கும் வழியுண்டு; பெண்டிரைக் காப்பது இலம் - ஆனால் மகளிர் கற்பழியாமல் யாம் காத்துக்கோடற்கோ யாதொரு வழியுங் கண்டிலம்; என்று, கண்டு மொழிந்தனர் - என்று அம் மகளிரியல்பை ஆராய்ந்து கூறியுள்ளனர் என்பதாம்.

(வி - ம்.) உணவினை மூடியிட்டுக் காத்தல் கூடும். பொருளைக் கருவூலம் முதலியவற்றில் வைத்துக் காத்தல் கூடும்; கற்றவற்றை மீண்டு மீண்டும் ஓதுமாற்றால் மறவாமற் காத்தல் கூடும். இவற்றைப் போல மகளிர் கற்பழியாதபடி கணவன் முதலியோரால் காத்தற்கு வழியில்லை என்று கற்றறிந்தோர் கூறியுள்ளனர் என்றவாறு.

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை" குறள், ௫௭

என்பது பொய்யாமொழி. (௧)

இதுவுமது

௧௦. எத்துணை யாற்று ளிடுமண னீர்த்துளி
புற்பனி யுக்க மரத்திலை நுண்மயி
ரத்துணை யும்பிற ரஞ்சொலி னார்மனம்
புக்கன மென்று பொதியறைப் பட்டார்.

(இ - ள்.) ஆற்றுள் இடுமணல் எத்துணை-ஆற்றினுள்ளே சேர்க்கப்பட்ட எக்கரின்கண் உள்ள மணல் எத்தனையுண்டு?; நீர்த்துளி எத்துணை-அந்த யாற்று வெள்ளத்தின்கண் நீர்த் துளிகள் எத்தனையுண்டு?; உக்க புற்பனி எத்துணை-புல்லின்மேற் பெய்த பனித்துளி எத்தனையுண்டு?; மரத்து இலை எத்துணை-மரங்களின்பா லமைந்த இலைகள் எத்தனையுண்டு?; நுண்மயிர் எத்துணை-உயிரினங்களின் உடலிலமைந்த நுண்ணிய மயிர்கள் எத்தனையுண்டு; அத்துணையும்-அத்தனைபேர்; பிறர் அஞ்சொலி னார் மனம் புக்கனம் என்று-பிறர் மனையாட்டியாராகிய அழகிய சொல்லையுடைய கற்பிலா மகளிருடைய; மனம் புக்கனம் என்று பொதியறைப்பட்டார்-மனத்திலே புகுந்தேம் என்று மகிழ்ந்து தீவினைக் காளாகிப் பிறவியாகிய சிறையிலே அகப்பட்டனர் என்பதாம்.

(வி - ம்.) கற்பிலாமகளிர் கண்களாகிய வலையிலகப்பட்டு, அவர் தம்மைக் காதலிக்கின்றனர் என்று மகிழ்ந்து அவ்வழி யொழுகித் தீவினை செய்து, பிறவியாகிய சிறையிடைப்பட்டோர் இவ்வுலகின்கண் எண்ணிறந்தோர் என்பதாம்.

எத்துணை என்பதனை யாண்டும் கூட்டுக.

ஆதலால் கற்பில்லா மகளிரைக் காண்டலும் கூடாது என்பது குறிப்பென்க.

இதனாலன்றோ வள்ளுவப் பெருந்தகையார் பிறர்மனை நோக்கா மையே பேராண்மையென்று பேசுவராயினர்? (௧௦)

இதுவுமது

௧௧. தனிப்பெயற் றண்டுளி தாமரை யின்மேல்
வளிப்பெறு மாத்திரை நின்றற் றொருவ
னளிப்பவற் காணுஞ் சிறுவரை யல்லாற்
றுளக்கிலர் நில்லார் துணைவளைக் கையார்.

(இ - ள்.) வளை துணைக்கையார்-வளையலணிந்த இரண்டாகிய கைகளையுடைய கற்பிலா மகளிர் நெஞ்சம் ஒருவன்பால் நிலைத்து நிற்பது; தண்பெயல் தனித்துளி-குளிர்ந்த மழையினது ஒரு துளியானது; தாமரையின்மேல்-தாமரையிலையின் மேலே; வளி பெறும் மாத்திரை-காற்று வந்து வீசப்பெறும் வரையில் நின்

றற்று - நிலைத்து நின்றாற் போல்வதாம்; அளிப்பவன் ஒருவன் காணும் சிறுவரை அல்லால் - என்னை? அம் மகளிர் தாமும் தம்மை அளிசெய்யும் புதியவன் ஒருவனைக் காணப்பெறும் அச் சிறிய பொழுதளவே முன்னர்த் தாம் காமுற்றவன்பால் மனம் வைத்து நிற்பது அல்லாமல்; துளக்கலர் நில்லார் - மனந்துளங்காது நிற்பதிலர் ஆதலான், என்பதாம்.

(வி - ம்.) தனித்துளி என இயைக்க. தாமரையிலையின்மேல் வீழ்ந்த மழைத்துளி காற்று வீசப் பெறுமளவும் ஓரிடத்தே நிற்கும். காற்று வீசியவுடன் நிலைபெயர்ந்தியங்குவதுபோலக் கற்பிலாமகளிர் நெஞ்சமும் தான் காமுற்றவன்பால் புதியவன் ஒருவனைக் காணும் வரையில் நிற்கும். அவனைக் கண்டவுடன் அவன்பாற் சென்றழுந்தும் என்றவாறு. இக் கருத்தினை,

"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்'' —குறள், அ௨௨

எனவரும் திருக்குறளினும், அக் குறட்கு ஆசிரியர் பரிமேலழகர் "இடம்பெற்றுழிப் பெண்பாலார் மனம்போல வேறுபடும்'' என உரை கூறுவதினும் மேலும் அதன் விளக்கவுரையின்கண் "அவர் மனம் வேறுபடுதல் பெண் மனம் பேதின் ஒருப்படுப்பே னென்னும்— என்னில் ஒருவன் என்பதனானும் அறிக'' என்று இவ் வளையாபதிச் செய்யுள் பிறிதொன்றனை எடுத்துக்காட்டுதலினும் காண்க. (௧௧)

மக்கட் பேறு

௧௨. பொறையிலா வறிவு போகப்
புணர்விலா விளமை மேவத்
துறையிலா வனச வாவி
துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி
நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும்
சேயிலாச் செல்வ மன்றே.

(இ - ள்.) சேய் இலாச் செல்வம்-மகப்பேறில்லாதவருடைய செல்வம்; பொறை இலா அறிவும்-பொறுமையில்லாதவருடைய அறிவுடைமையும், போகப்புணர்வு இலா இளமை-இன்பந்தரும் புணர்ச்சிபெறாத இளம் பருவமும்; மேவத்துறை இலா வனச வாவி-இறங்குதற்குத் துறையில்லாத தாமரைக்குளமும்; துகில் இலாக் கோலத்தூய்மை- ஆடையில்லாத ஒப்பனையினது தூய தன்மையும்; நறை இலா மாலை-மணமில்லாத மலர்மாலையும்; கல்வி நலமிலாப் புலமை-நூல்கள் பலவும் கற்றிலாத புலமைத்

தன்மையும்; நல் நீர்ச் சிறை இலா நகரம் - நல்ல நீர்நிலைகள் இல்லாத நகரமும்; போலும் - போன்று சிறிதும் பயனற்றதாகும் என்பதாம்.

(வி - ம்.) சேய்-மகவு. சேயிலாச் செல்வம் பொறையிலா அறிவு முதலியவற்றைப் போன்று பயனற்றதாம் என்றவாறு.

போகம் - இன்பம். புணர்வு - காதலர்க் கூட்டரவு. வனசம் - தாமரை. ஆடையுடாது அணிகள் மட்டும் அணியப்பட்ட கோலம் என்க. கோலம்-ஒப்பனை. நறை-மணம். கல்வி நலமிலாப் புலமை என்றது, இயற்கையினமைந்த நுண்மாணுழை புலத்தினை,

“ கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளா ரறிவுடை யார் ” 	—குறள், ௪௦௪

என்புழி வள்ளுவர் ‘ஒட்பம்’ என்பதுமது.

இனி, இதனோடு—

“ படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே ” 	—புறநா, ௧௮௮

எனவரும் பாண்டியன் அறிவுடைநம்பி அருமைச் செய்யுளும்,

“ பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர் ” 	—நளவெண்பா, உ௪௪

எனவரும் புகழேந்தியார் பொன்மொழியும்,

“ கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு ” 	—நீதிநெறி, ௮௪

எனவரும் குமர குருபரவடிகளார் அருண்மொழியும்,

“ மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு ” 	—குறள், ௬௦

எனவரும் பொய்யில் புலவன் பொருளுரையும் வீணவிற் கொள்ளற் பாலன. (௪௨)

அடக்கமுடைமை

௪௩. ஆக்கப் படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்விக்கும்
காக்கப் படுவன விந்திரிய மைந்தினும்
நாக்கல்ல தில்லை நனிபேணு மாறே.

(இ - ள்.) ஆக்கப் படுக்கும் - ஒருவனுடைய நாவினிற் றோன்றுஞ் சொல் அவனைச் செல்வ முதலிய பேறுகள் உடையனாக உயர்த்தவும் உயர்த்தும்; அருந்தளைவாய்ப் பெய்விக்கும் - அல்லது உய்தற்கரிய சிறைக்கோட்டத்துட் செலுத்தினும் செலுத்தும்; போக்கப் படுக்கும் - அங்ஙனமே இன்ப வாழ்க்கைக்கிடமாகிய போகபூமியுட் பிறப்பித்தலும் செய்யும்; புலை நரகத்து உய்விக்கும் - அல்லது இழிவுடைய நரகத்தின்கண் செலுத்தினுஞ் செலுத்தும்; காக்கப்படுவன - ஆதலால் மாந்தர் தம்மறிவாற் காத்தற்குரியனவாகிய; இந்திரியம் ஐந்தினும் - பொறிகள் ஐந்தனுள்ளும்; நனி பேணும் ஆறு - மிகவும் விழிப்புடனிருந்து பாதுகாத்துக்கொள்ளும்படி; நாக்கு அல்லது இல்லை - நாவினையன்றிப் பிறிதொன்றில்லை, என்பதாம்.

(வி - ம்.) மக்கட்கு ஆக்கந்தருவதும் நாவே. அவரைச் சிறைக்கோட்டம் புகுவிப்பதும் அதுவே; துறக்கத்துச் செலுத்துவதும் அதுவே, நரகத்தில் வீழ்த்துவதும் அதுவே ஆதலால், மெய் முதலிய பொறிகளுள் நாவே பெரிதும் விழிப்புடன் பேணற் பாலது என்றவாறு.

"யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" —குறள், ௧௨௭

என வரும் திருக்குறளும் நோக்குக.

"நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று" —குறள், ௬௪௧

எனவும்,

"ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு" —குறள், ௬௪௨

எனவும்,

"திறன் அறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்" —குறள், ௬௪௪

எனவும் வரும் அப் பொய்யில் புலவர் பொருளுரையும் காண்க.

" கற்பன வூழற்ருர் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றாத்தைவா யங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்"

எனவும்,

" தன்னே வியப்பிப்பான் றற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்ருல்—தன்னே
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம்"

எனவும்,

" பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்"

எனவும் வரும் குமரகுருபரர் மணிமொழிகளும்,

" படிறும் பயனிலவும் பட்டி புரையும்
வசையும் புறனு முரையாரே யென்று
மசையாத வுள்ளத் தவர்"

எனவரும் ஆசாரக்கோவையும்,

இன்னோரன்ன எண்ணிறந்த அறிவுரைகள் நாநலமும் தீங்கும் பற்றி நல்லிசைப் புலவர்களால் ஓதப்பட்டிருத்தல் அந் நா காக்கும் காப்பே தலை என்பதனை உணர்த்துகின்றன. அவையெல்லாம் அறிந்துகொள்க.

இவையெல்லாம் நாவினது செயல் வகைபற்றி எழுந்தன. இனி, இச் செய்யுளில் நாவினை ஐம்பொறிகளுள் ஒன்றென்றலின், நாவினால் நுகரும் சுவை கருதி ஊன் முதலியன நுகர்ந்து நரகத்து வீழ்தலும் நல்லுணவே உண்டு துறக்கம் புகுதலும் பிறவும் நாவான் விளையும் தீமையும் நலங்களுமே யாகலால் இவ்வாற்ருனும் நாவடக்கம் இன்றி யமையாமையுங் கொள்க. (கட)

அறமனை காத்தல்

கச. தார நல்வதந் தாங்கித் தலைநின்மின்
ஊரு நாடு முவத்த லொருதலை
வீர வென்றி விறன்மிகு விண்ணவர்
சீரி னேத்திச் சிறப்பெதிர் கொள்பவே.

(இ-ள்) தாரம் தாங்கி - மாந்தர்காள்! நீவிர் நுங்கள் காதன் மனைவிமாரைப் பேணி; நல்வதம் தலை நின்மின் - நல்ல

விரதங்களை மேற்கொண்டு வாழுமின்; ஊரும் நாடும் உவத்தல் ஒருதலை - அவ்வாறு வாழ்வீராயின் நீவிர் வாழும் ஊரேயன்றி எல்லா நாட்டு மக்களும் நுங்கள் வாழ்வினைக் கண்டு மகிழ்வது ஒருதலையாம்; வீரவென்றி விறல்மிகு விண்ணவர் - அதுவுமின்றி, வீரத்தாலுண்டாய வெற்றிப் பெருமைமிக்க தேவர்களும்; சீரின் ஏத்தி - நுங்கள் புகழ் காரணமாக நும்மைப் பாராட்டித் தொழுது; சிறப்பெதிர் கொள்ப - சிறப்ப நும்மை எதிர்கொண்டழைப்பர், என்பதாம்.

(வி-ம்.) தாரம்-மனைவி. ஈண்டு அறநெறியால் மணந்துகொண்ட மனைவிமார் என்க. "அறமனை காமின் அல்லவை கடிமின்" என இளங்கோவடிகளாரும் அறிவுறுத்துதல் உணர்க. நல்வதம் - நல்லவிரதங்கள். அவற்றை,

"பெருகிய கொலையும் பொய்யும் களவொடு பிறன்ம னைக்கண்
தெரிவிலாச் செலவு சிந்தை பொருள்வயிற் றிருகு பற்றும்
மருவிய மனத்து மீட்சி வதமிவை யைந்தோ டொன்றி
ஒருவின புலைசு தேன்க ளொருவுத லொழுக்க மென்றுன்"

எனவரும் யசோதர காவியத்தாலுணர்க. இவற்றை அணுவிரதம் என்ப. இனி, இளங்கோவடிகளார்,

"தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்!
பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்!
தெய்வந் தெளிமின்! தெளிந்தோர்ப் பேணுமின்!
பொய்யுரை யஞ்சுமின்! புறஞ்சொற் போற்றுமின்!
ஊனூண் துறமின்! உயிர்க்கொலை நீங்குமின்!
தானஞ் செய்ம்மின்! தவம்பல தாங்குமின்!
செய்ந்நன்றி கொல்லன்மின்! தீநட் பிகழ்மின்!
பொய்க்கரி போகன்மின்! பொருண்மொழி நீங்கன்மின்!
அறவோ ரவைக்கள மகலா தணுகுமின்!
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்!
பிறர்மனை அஞ்சுமின்! பிழையுயி ரோம்புமின்!
அறமனை காமின்! அல்லவை கடிமின்!
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்!
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லும் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வி ரீங்கு."

என விரிவகையாலறிவுறுத்துந் நல்லறங்களையே இச் செய்யுள் தொகை வகையால் "தாரம் நல்வதம் தாங்கித் தலைநின்மின்!" என விளம்புகின்றதென்க. இது முறை நிரனிறை. 'தார நல்விதம்' என்பதும் பாடம். (கச)

விரதத்தின் விரிவகை, பிறர்மனை நயவாமை முதலியன

கரு. பெண்ணின் ஆகிய பேரளுர்ப் பூமியுள்
எண்ண மிக்கவ ரெண்ணினு மெண்ணிலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினு மேதில்பெண் ணீக்குமின்.

(இ-ள்.) பேரளுர்ப் பூமியுள் - பெரிய துன்பமுழத்தற் கிடனான நரகருலகத்தின்கண்ணே; பெண்ணின் ஆகிய எண்ணம் மிக்கவர் - பிறர் மனையாட்டிமாராகிய மகளிர் காரணமாகத் தீவினைவுகள் மிகுந்த ஆடவர்கள்; எண்ணினும் எண்ணிலார் - எண்ணுமிடத்தும் எண்ணிலாதவர் ஆவர்; பின்னி நின்ற பெருவினை மேல்வரும் - நும்முயிரைப் பிணித்து நின்ற பெரிய தீவினைகள் மேலும் மேலும் வருவனவாம்; என்னதாயினும் - ஆதலால் நுங்கட்கு என்ன நலம் உண்டாவதா யிருந்தாலும்; ஏதில் பெண்ணீக்குமின் - பிறமகளிரை விரும்புதல் ஒழிமின் என்பதாம்.

(வி - ம்.) பேரளுர்ப்பூமி என்றது நரகருலகினை; நரகத்தில் வீழ்ந்து நலிபவருள் பிறர் மனைவிமாரை விரும்பித் தீவினை செய்தோரே எண்ணிறந்தவர். பிறர்மனை நயத்தலே மாபெருந்தீவினை; அத் தீவினை மேல்மேல் வருகின்றபிறவிகளினும் நும்மைத்தொடர்ந்துவந்து நலிவது திண்ணம். ஆதலால், உங்கட்கு இப்பொழுது எத்துணையின்பம் வந்தாலும் பிறர்மனை நயவாதே கொண்மின்! என்றவாறு. "அறன் கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை, நின்றாரிற் பேதையா ரில்" என்பது பற்றிப் பிறர்மனை நயத்தலைப் பெருவினை என்றார்.

இனி, இத் தீவினையே எல்லாத் தீவினைகளுக்குங் காரணமாதல் பற்றிப் பெருவினை மேல்வரும் என்றார் எனினுமாம். என்னை ?

"முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்
கடியப் பட்டன வைந்துள வவற்றிற்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமந் தம்பால்
ஆங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோரேன
நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள்
நீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்"

எனவரும் மணிமேகலையும் நோக்குக. (உஉ - கசக - கசு.)

இனி,

“பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்” —குறள், கசசு

எனவும்,

“நலக்குரியார் யாரெனி னுமநீர் வைப்பிற்
பிறர்க்குரியா டோடோயா தார்” —குறள், கசகூ

எனவும், வரும் திருக்குறள்களையும் சிந்திக்க.

இனிக் கம்பநாடர், இராமன் கூற்றாக.

“ஈர மாவது மிற்பிறப் பாவதும்
வீர மாவதுங் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவது மற்றொரு வன்புணர்
தார மாவதைத் தாங்குந் தருக்கதோ?”

என, ஓதுதலுமுணர்க.

இனி, பிறர்மனை நயத்தற்கண் அறம்பொருளே யன்றி அவர் விரும்பும் இன்பந்தானும் இல்லையே! அஃதொரு நோயேயாம் எனக் குமரகுருபரவடிகளார்,

“பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே ஆயினு மாக—சிறுவரையும்
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்”

எனக் கூறுகின்ற மெய்ம்மொழியும் உளங்கொள்க. (கரு)

இதுவுமது

கசு. பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லிநீர்
உய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழுநாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன்மின்.

(இ - ள்.) பொய்யன்மின் - பொய்கூறாதீர்கள்; புறங்கூறன்மின் - புறங்கூறாதீர்கள்; யாரையும் வையன்மின் - எத்தகையோரையும் இகழ்ந்து கூறாதீர்கள்; வடிவு அல்லன சொல்லி நீர் உய்யன்மின் - அழகல்லாதனவற்றைக் கூறுமாற்றாலே உடலோம்பாதீர்கள்; உயிர்கொன்று உண்டு வாழும் நாள் செய்யன்மின் — பிறவற்றின் உயிரைக் கொன்று அவற்றின் ஊனையுண்டு நுங்கள் வாழ்நாளை ஆக்கிக்கொள்ளாதீர்கள்; சிறியாரொடு - கயமாக்களோடு; தீயன்மின் - கேண்மை கொள்ளாதீர்கள் என்பதாம்.

(வி - ம்.) பொய் குறளை கடுஞ்சொல், இழிதகவுடைய சொற்கள் இவற்றைச் சொல்லாதீர். வடிவு-அழகு. சொல்லிற்கழகு-வாய்மை

யுடைத்தாதல். எனவே, பொய் என்றுயிற்று. பொய்கூறி உய்யன் மின் எனவே பொய்க்கரி கூறி உடலோம்ப வேண்டா! என்றவாறு யிற்றும். பொய்யாவது-நன்மை பயவாத நிகழாதது கூறலும், தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் ஆமென்க. எனவே, பிறிதோருயிர்க்குத் தீங்கு பயக்கும் சொற்களைக் கூறுதொழிக என்றவாறு. என்னை?

"வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்" —குறள், உகக

எனவும்,

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்" —குறள், உகஉ

எனவும் வள்ளுவர் ஓதுமாற்றுல் பொய்ம்மையினியல் உணர்க.

இனி, புறங்கூறலாவது-காணுதவழிப் பிறரை யிகழ்ந்துரைத்தல். இது பெருந்தீவினை என்பதனை வள்ளுவர் பெருமான்,

"அறங்கூறு னல்ல செயினு மொருவன்
புறங்கூறு னென்ற லினிது" —குறள், கஅக

என்பதனுல், தீவினை பலவற்றுள்ளும் இது மேம்பட்டது என்பத னுலும்,

"அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை" —குறள், கஅஉ

எனவும்,

"புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்" —குறள், கஅங

எனவும்,

"கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னேக்காச் சொல்" —குறள், கஅச

எனவும் வரும் மூன்று குறள்களானும் அத் தீவினையின் கொடுமையை விளக்குதலானும் உணர்க.

வைதல் - இகழ்ந்துரைத்தல். யாரையும் என்றது - எளியோ ராயினும் என்பதுபட நின்றது. வாழுநாள் செய்தல் - வாழ்நாளை வளர்த்துக் கோடல். தீயன்மின்-நட்புருதேகொண்மின். இஃதோர் அருஞ்சொல் ஆயினும், இதன் பொருள் இன்னதே என்பது, சிறியா ரொடு தீயன்மின் என்றதனுற் பெற்றும். 'தீயன' என்ற பாட வேறு பாடுள்ளது. அதனைக் கொள்ளின் தீயன செய்யன்மின் எனக் கொள்க. சிறியார் - சிற்றின மாக்கள். அவராவார்: நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லையென்போரும், விடரும் தூர்த்தரும் நடரு முள்ளிட்ட குழு. இத்தகையோர் கேண்மை அறிவைத்திரித்து இருமையுங் கெடுக்குமாகலின் சிறியாரொடு தீயன்மின் என்றூர்.

இதனை,

"நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு"                    —குறள், சருஉ

எனவும்,

"மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானு
மின்னா னெனப்படுஞ் சொல்"                    —குறள், சருங

எனவும்,

"மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு"                    —குறள், சருச

எனவும்,

"நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்"

எனவும் வரும் திருக்குறள்களா லுணர்க. (கசு)

இதுவுமது

கஎ. கள்ளன் மின்களவாயின யாவையும்
கொள்ளன் மின்கொலை கூடி வருமறம்
எள்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையும்
நள்ளன் மின்பிறர் பெண்ணொடு நண்ணன்மின்.

(இ - ள்.) களவு ஆயின யாவையுங் கள்ளன்மின் - களவு என்று கருதப்படுகின்ற தொழில் வாயிலாய் எப்பொருளையும் கவர்தல் செய்யாதொழிமின்; கொலைகூடி வரும் அறம் கொள்ளன் மின் - உயிர்க்கொலையோடு கூடிவருகின்ற அறங்களை மேற்கொள்ளா தொழிமின்; இலர் என்று எண்ணி எள்ளன்மின்-வறியவர் என்று நினைத்து யாரையும் இகழாதிருமின், யாரையும் நள்ளன்மின் - ஆராயாமல் யாரையும் நட்புக் கொள்ளா தொழிமின், பிறர் பெண் ணொடு நண்ணன்மின்-பிறர் மனைவியர்பாற் செல்லாதொழிமின் என்பதாம்.

(வி-ம்.) களவு என்று பிறரால் கருதப்படும்படி எப்பொருளையும் கொள்ளாதொழிக! என்றவாறு. கொலை கூடிவரும் அறம் என்றது, வேதியர் வேத வேள்விகளை. சிறு தெய்வங்கட்கு உயிர்ப்பலி செய்து வழிபடுதல் முதலியனவுமாம். யாரையும் நள்ளன்மின் என்றது, ஆராய்ந்து நல்லாரை நட்டலன்றிக் கண்டவரோடெல்லாம் நட்புச் செய்யற்க என்றவாறு.

இனி இதன்கண், கள்ளன்மின் களவாயின யாவையும் என்பதனை,

"கள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு" —குறள், உ௮௧

எனவும்,

"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்" —குறள், உ௮உ

எனவும் வரும் குறள் முதலியவற்றானு முணர்க. கொலை கூடி வரும் அறம் கொள்ளன்மின் என்பதனை,

"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்" —குறள், ௩௨௧

எனவும்,

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று" —குறள், உ௫௯

எனவும் வருந் திருக்குறள்களானும்,

"கொலையற மாமெனுங் கொடுந்தொழின் மாக்கள்
அவலப் படிற்றுரை" (மணி - ௯. ௬௨ - ௩.)

எனவரும் மணிமேகலையானும், ஏனையவற்றை முற்கூறிப் போந்த மேற்கோள்களானு முணர்க. (௧௭)

உண்டி கொடுத்தலின் உயர்வு

௧௮. துற்றுள வாகத் தொகுத்து விரல்வைத்த
தெற்றுக் கஃதென்னி னிதுவதன் காரணம்
அற்றமில் தான மெனைப்பல வாயினும்
துற்றவிழ் ஒவ்வாத் துணிவென்னு மாறே.

(இ - ள்.) துற்று உளவாகத் தொகுத்து விரல் வைத்தது- (துறவியாகிய) நான் சோற்றினை மிகுதியாக ஏற்றுக் கையிலேந்தி வருதல் கண்டு; அஃதெற்றுக்கெனின்-அங்ஙனம் செய்ததற்குக் காரணம் என்னையோ? என்பாராயின், அற்றம் இல் தானம் எனைப்பல ஆயினும்-குற்றமில்லாத தானப்பொருள்கள் எத்துணையும் பலவாயவிடத்தும்; துற்று அவிழ் ஒவ்வாத் துணிவு என்னும் ஆறே - அவையெல்லாம் உண்ணும் சோற்றிற்கு நிகராகா என்பது தெளிவான முடிவு. இது அதன் காரணம் - இதுவே அங்ஙனம் செய்தற்குக் காரணமாம் என்பதாம்.

(வி - ம்.) வளையாபதி என்னும் பெருங்காப்பியங் கூறும் கதையினை யாம் சிறிது மறிகின்றிலேம் ஆயினும் இச் செய்யுள் யார் கூற்று எந்தச் செவ்வியிற் கூறப்பட்டிருக்கலாம் என்று ஊகித்துணர்ந்து இங்ஙனம் உரை கூறினும்.

தற்று - சோறு. உளவாக - மிகுதியாக. விரல்: ஆகுபெயர், கை. ஒரு துறவி தன் பலிக்கலத்தில் நிரம்பச் சோறு ஏற்றுவருவானைக் கண்ட ஒருவன் நீ இங்ஙனம் மிகவும் சோறு தொகுத்து வருதற்குக் காரணம் என்னை? என வினவினனாக, அதற்குக் காரணங் கூறுபவன் தானங்களுள் வைத்து உண்டி கொடுத்தலே தனியுயர்ந்தது ஆகலின் யானும் காணார் கேளார் கான்முடப்பட்டோர் முதலியவர்க்குத் தானம் வழங்கவே இவ்வாறு ஏற்று வருகின்றேன் காண்! என விடை கூறினன் என்க. (இஃது ஊகமாத்திரமே)

அற்றம்-குற்றம். தானப் பொருள்களுள் உண்டியே தலைசிறந்ததென்பதனை,

"ஆற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோர்
ஆற்றா மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"

(மணி - ௧௧ - ௯௨ - ௯௬)

என்பதனாலும், துறவிகள் சோறு மிகவுமிரந்து ஏனையோர்க்கு வழங்கும் வழக்கமுடையர் என்பதனை,

"ஐயக் கடிஞை கையி னேந்தி
மைய றுசிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணுந ரில்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி
யுண்டொழி மிச்சிலுண் டோடுதலை மடுத்துக்
கண்படை கொள்ளுங் காவலன் றானென்"

எனவரும் ஆபுத்திரன் வரலாற்றானுமுணர்க. (௧௪)

## அருளுடைமை

௧௧. ஆற்று மின்னரு ளாருயிர் மாட்டெலாந்
தூற்று மின்னறந் தோநனி துன்னன்மின்
மாற்று மின்கழி மாயமு மானமும்
போற்று மின்பொரு ளாவிவை கொண்டுநீர்.

(இ - ள்.) நீர் ஆர் உயிர் மாட்டெலாம் அருள் ஆற்றுமின் - நீயிர் அரிய உயிரினங்களிடத்தெல்லாம் அருள் செய்வீராக!; அறம் தூற்றுமின் - நல்லறங்களை நாடோறும் மாந்தர்க்குக் கூறுவீராக!; தோம் நனி துன்னன்மின் - தீவினைகளைப் பொருந்தாது மிகவும் ஒழிவீராக!; மாயமும் கழி மானமும் போற்றுமின் - வஞ்

சினையும் மிகையார மானத்தையும் விலக்குவீராக!; இவை பொருளாக் கொண்டு போற்றுமின் - இவ்வறங்களை உறுதிப் பொருளாகக் கருதிப் பேணி வாழ்வீராக!; என்பதாம்.

(வி - ம்.) எவ்வுயிர்க்கும் அருள் செய்க! அறங்களையே யாவர்க்கும் அறிவுறுத்துக! தீவினையை அஞ்சுக! வஞ்சகத்தையும் மாண்பிறந்த மானத்தையும் விலக்குக. இவ்வறங்களையே பொருளாகப் பேணி நல்வாழ்வு வாழ்வீராக! என்றவாறு.

(வி - ம்.) அருள்-தொடர்பு பற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண் மேலும் செல்வதாகிய இரக்கம்.

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள" —குறள், உசக

எனவும்,

"நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை" —குறள், உசஉ

எனவும்,

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல்" —குறள், உசங

எனவும்,

"மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை" —குறள், உசச

எனவும்,

"அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி" —குறள், உசரு

எனவும்,

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு" —குறள், உசஎ

எனவும் வருகின்ற திருக்குறள்களான் அருளறத்தின் மாண்புணர்க.

சாற்றுமின் என்றது, யாண்டும் யாவர்க்கும் அறிவுறுத்துமின் என்பதுபட நின்றது. தோம் - குற்றம்; தீவினை.

இனி, தீவினையை நயந்து செய்யற்க வென்பார் தனிதுன்னன்மின்-தீவினை தீயவே பயத்தலான் அதனைத் தன்றுமையே உயிர்க்குறுதியாயிற்று என்றார்.

இதனை,

"அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்" —குறள், உ௰

என்பதனாலும், உணர்க.

இன்னும்,

"தீயவை செய்தார் கெடுத லிழறன்னை
வியா தடியுறைந் தற்று" —குறள், உ০அ

எனவும்,

"தன்னைத்தான் காதல னுயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்" —குறள், உ০க

எனவும்,

"தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்" —குறள், உ০உ

எனவும் வருந் திருக்குறள்களையும் நினைக.

மாயம் - வஞ்சம்; பொய்யுமாம். கழிமானம் என மாற்றுக. கழி மானம் - மாண்பிறந்த மானம். அஃதாவது—

அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம் முன்னோர் தந்தை தாயரென்றிவரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தே விடுதலும் முதலாயின. பொருளா: ஆக்கச்சொல்லீறு கெட்டது. செய்யுள் விகாரம். (கக)

இதுவுமது

உ০. பொருளை பொருளாப் பொதிந்தோம்பல் செல்லா
தருளைப் பொருளா வறஞ்செய்தல் வேண்டும்
அருளைப் பொருளா வறஞ்செய்து வான்கண்
இருளிவியல் பெய்தாத தென்னோ நமரங்காள்.

(இ - ள்.) நமரங்காள் - எஞ்சுற்றத்தீரே!; பொருளைப் பொருளாப் பொதிந்து ஓம்பல் செல்லாது-செல்வப் பொருளை மிகவும் ஈட்டுதலே மாந்தர்க்கு உறுதிப்பொருளாவது என்று கருதி அவற்றைக் கட்டிவைத்துக் காத்திராமல்; அருளைப் பொருளா அறஞ்செய்தல் வேண்டும் - அருளையே உறுதிப்பொருளாகக் கருதி அப் பொருளாலே நல்லறங்களைச் செய்தல் வேண்டும். அஃதே அறிவுடைமையாம்; அருளைப் பொருளா அறஞ்செய்து - நீர் பொருளீட்டுகின்றீராயினும், அருளையே உறுதிப் பொருளாக வுணர்ந்து அப் பொருளாலே அறங்களைச் செய்து; வான்கண்-அவ்வறத்தின் பயனுமாகிய மேனிலையுலகவாழ்வினைப் பெற்று; இருள்இல் இயல்பு எய்தாதது என்-அந்த ஒளியுடைய பண்பினையுடைய முதலாமைக்குக் காரணம் என்னையோ? இன்னே அறஞ் செய்மின்! என்பதாம்.

(வி - ம்.) பொருள்-செல்வப்பொருள். அவை பொன் மணி நெல் முதலியன. பொருளாக எனல் வேண்டிய ஆக்கச்சொல் ஈரிடத்தும்

ஈறு தொக்கன; செய்யுள் விகாரம். பொருளாக - உறுதிப் பொருளாக. பொதிதல்- மறைத்து வைத்தல். ஓம்பல் செல்லாது-ஓம்பாமல் என்னும் ஒரு சொன்னீர்மைத்து. அருளே யேனிலையுலகில் ஒளியுடைய வாழ்க்கை நல்கும் உறுதிப் பொருளாக வுணர்ந்து என்க. வான் : ஆகுபெயர், மேனிலையுலகம். அறம் : விருந்தோம்பல் ஈதல் முதலியன. இருள் இல் இயல்பு - ஒளியுடைய தன்மையுடைய அமர வாழ்வு. இன்னே அறஞ் செய்மின் என்பது குறிப்பெச்சம்.

''அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள'' —குறள், உசக

என்பதனால் அருட்செல்வம் பொருட்செல்வம் என்னும் இரண்டனுள் மெய்யாய செல்வம் அருட் செல்வமே என்பதும்,

''நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை'' —குறள், உசஉ

என்பதனால் ஆருயிர்த் துணையாவது அருட்செல்வமே ஆதலால் அஃதே பெறற்பாலது என்பதும், உணர்க.

''அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்'' —குறன், உசங

என்பதனால் அருளுடையோர் வான்கண் இருளில் இயல்பு எய்துதல் ஒருதலை ஆகவும் அத்தகைய பேரின்ப வாழ்க்கையை நீயிர் பெற முயலாமை என்னையோ? என்றவாறு. இனி, பொருளால் வரும் பயன் அருளுடையராகி ஈதலே ஆவதனை,

''தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே'' —புறநா, கஅக

எனவரும் நக்கீரனர் மொழியானுணர்க. (உ0)

புலான் மறுத்தல்

உக. தகாதுயிர்கொல் வானின் மிகாமையிலை பாவம்
அவாவிலைபி லுண்பான் புலால்பெருகல் வேண்டும்
புகாவலைவி லங்காய்ப் பொருதுபிற வூன்கொன்
றவாவிலையில் விற்பானு மாண்டதுவே வேண்டுமால்.

(இ - ள்) அவா விலையில் உண்பான் - ஊனுண்ணும் அவாவினாலே அதனை விலை கொடுத்து வாங்கித் தின்பவன்றானும்; புலால் பெருகல் வேண்டும் - அந்த ஊனுணவு நாடோறும் மிகுதியாக வருதலையே விரும்புவான்; வலைவிலங்கு புகா ஆய்ப் பொருது - தான் வலையிற் பிடித்த விலங்குகளை தனக்கு உணவாகவும் அத்துணையின் அமைதியுறாமல்; விலை அவாவில் - மேலும் விலைப் பொருள் பெறுகின்ற அவாக் காரணமாக; பிற கொன்று ஊன் விற்பானும் - பிற வுயிரினங்களைக் கொன்று அவற்றின் ஊன்களைக் கொணர்ந்து விற்பவனும்; ஆண்டதுவே வேண்டும் - அவ்விடத்து அவ்வூன் மிகுதியுங் கிடைப்பதனையே விரும்புவான்; உயிர்கொல் வானின் பாவம் மிகாமை இலை - ஆதலால் உயிரைக் கொல்பவனிடத்துப் போலவே தீவினை இவர்களிடத்தும் மிகுவதாம்; தகாது - ஆகவே விலைப்பாலில் ஊன் கொண்டுண்ணல் அறவோர்க்குத் தகாத செயலாம் என்றவாறு.

ஊன் உண்ணும் அவாவினாலே ஊன் உண்பவன் அவ்வூன் உணவு மிகுதியாகக் கிடைத்தலையே விரும்புவான். ஆகவே, அவன் கொலைக்குடன்பட்டானாகிக் கொன்றவனே ஆகின்றான். என்னை? ஊன் விற்பவனும் அங்ஙனமே ஊன் மிகுதியாகக் கிடைப்பதனையே விரும்பிக் கொல்கின்றான். ஆதலால், கொல்பவனுக்குத் தீவினை மிகுவது போலவே உண்பவனுக்கும் மிகுதல் ஒருதலை. ஆதலால் ஊனுண்ணல் தகாது என்பதாம். 'ஆண்டருகல் வேண்டும்' என்பது பாடவேறுபாடு.

இனி,

"தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்" —குறள், ௨௫௬

என வள்ளுவனார் கூறுதலும் காண்க. இனி, இக் கருத்தினை,

"வெற்றுடம் புண்பதும் வேலின் விழிந்தவை
தெற்றென வுண்பதுந் தீமை தருமென்னை
யொற்றை நின்றுடுனை யூறு படுத்தவங்
குற்றமன்றே சென்று கூடுவ தேடா' —நீலகேசி, ௩௩௨

என்றற்றொடக்கத்து நீலகேசிச் செய்யுள்களானும் அவற்றிற்கு வாமன முனிவர் வகுத்துள்ள உரைப்பகுதிகளானும் நன்குணர்க.

இன்னும்,

"உகுநெற் பலகூட்டி யுண்டி முடிப்பான்
மிகுநெல் லுதிர்வதனை வேண்டும்—தகவுடையோ
ருண்ணப் படுமுடைமை யுண்பானுயிர் மரண
மெண்ணுத வாறுண்டே யிங்கு"—ஷைஉரை மேற்கோள், ௨௧

எனவரும் வெண்பாவானும் உணர்க. (௨௧)

## ஊனுண்போரின் இழிதகைமை

௨௨. பிறவிக் கடலகத் தாராய்ந் துணரின்
தெறுவதிற் குற்ற மிலார்களு மில்லை
யறவகை யோரா விடக்கு மிசைவோர்
குறைவின்றித் தஞ்சுற்றந் தின்றன ராவார்.

(இ - ள்.) பிறவிக்கடல் அகத்து ஆராய்ந்து உணரின் - உயிரினங்கள் பிறப்புற்றுழலாநின்ற கடல்போன்ற இப் பேருலகத்தின்கண் ஆராய்ந்து காணுமிடத்து; தெறுவதின் குற்றம் இலார்களும் இல்லை - பிறவுயிரைக் கொல்வதனாலுண்டாகும் தீவினையில்லாதவர் ஒருவரேனும் இலராவர்; அறவகை ஓரா விடக்கு மிசைவோர் - ஆயினும், அறமுறைகளை ஆராய்ந்துணராமல் ஊன் தின்பவர்; குறைவு இன்றித் தம் சுற்றம் தின்றனர் ஆவார் - அவருள்ளும் யாதோரளவுமின்றித் தம்முடைய மனைமக்கள் முதலிய சுற்றத்தாரைக் கொன்றுதின்ற அத்துணைக் கொடுவினையாளரே யாவர் என்பதாம்.

(வி - ம்.) உய்ந்து கரையேற ஒண்ணாதபடி விரிந்த இடத்தலின் பிறவியைக் கடல் என்றார். வள்ளுவனாரும் 'பிறவாழி' என்பதுணர்க.

பிறவியுட்பட்டுழல்வோர் தம் வாழ்நாளில் யாதோருயிரையும் கொல்லாத தூயராகவே வாழ்வது யாவராலும் இயலாததொன்றேயாம். உலகின்கண் கண்ணாற் காணப்படாத சிற்றுயிர்களும் கொதுகு எறும்பு போல்வனவும் யாண்டும் நிறைந்திருத்தலால் தெரிந்தோ தெரியாமலோ இவற்றைக் கொல்லாதவர் யாருமிலர். அங்ஙனமிருப்பினும், ஆறறிவு படைத்த மாந்தர் அறமுணர்ந்து கொலைவினை ஒரீஇ வாழல் வேண்டும் அன்றோ? ஊன் உண்பவர் 'யாவரும் கேளிர்' என்னும் மெய்யுணர்வின்மையாலே தமக்கு நெருங்கிய உறவுடைய உயிரினங்களைக் கொன்று அவற்றின் ஊனைத் தின்கின்றனர். இவ்வாற்றால் இவர் தம் மனைவி மக்களைத் தின்பவர் போன்று பெருந்தீவினையாளரே என்பதில் ஐயமில்லை என்பதாம்.

"கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து" —குறள், ௩௨௯

எனவும்,

"அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை" —குறள், ௩௧௫

எனவும், வருந் திருக்குறள்களையும் நோக்குக.

"யாதும் ஊரே யாவருங் கேளிர்" என்னும் கணியன்பூங்குன்றனார் மணிமொழியால் எல்லாவுயிர்களும் நெருங்கிய உறவுப் பண்புடையனவே என்பதனை யுணர்க. இம் மெய்யுணர்வின்மையால் மாந்தர் ஊன் தின்கின்றனர் என்றிரங்கியபடியாம். (௨௨)

## செவியறிவுறூஉ

௨௯. உயிர்க ளோம்புமி னூன்விழைந் துண்ணன்மின்
செயிர்க ணீங்குமின் செற்ற மிகந்தொரீஇக்
கதிக ணல்லுருக் கண்டனிர் கைதொழு
மதிகள் போல மறுவிலிர் தோன்றுவீர்.

(இ - ள்.) உயிர்கள் ஓம்புமின்-எல்லாவுயிர்களையும் அருள் கூர்ந்து காப்பாற்றுவீராக!; ஊன் விழைந்து உண்ணன்மின்-பிறவுயிரினங்களின் ஊனை விரும்பி உண்ணற்க; செற்றம் இகந்து ஒரீஇ-வெகுளியைத் துவர விலக்கி; செயிர்கள் நீங்குமின்-காம முதலிய குற்றங்களினின்றும் நீங்கி வாழுவீராக; கதிகள் நல்லுருக் கண்டனிர்-இவ்வாறு வாழ்வீராயின் மேல்வரும் பிறப்புகளிலே மேனிலை யுலகங்களிலே தேவர் முதலியோராய் அழகிய உருவங்களை அடைந்து; கைதொழு மதிகள் போல-உலகத்தார் கை குவித்துத் தொழுகின்ற குளிர்ந்த பிறைத் திங்கள் போன்று; மறுவிலிர் தோன்றுவீர்-குற்றமில்லாதவர்களாய் அருள் நிரம்பிப் புகழொடு விளங்குவீர் என்பதாம்.

(வி - ம்.) உயிர்களை ஓம்புதலாவது சோர்ந்தும் கொலைவராமல் குறிக்கொண்டு உயிர்களைப்பாதுகாத் தொழுகுதல். இவ்வறமே நூலோர் தொகுத்த அறங்களுள் தலைசிறந்த அறமாதல் பற்றி முற்பட ஓதினர். என்னை?

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை" —குறள், ௩௨௨

எனவரும் திருக்குறளும் நோக்குக. வேள்வி முதலியவற்றிற் கொன்று ஊனுகர்தல் நல்லறமே என்னும் மடவோரும் உளர் ஆகலின் நீயிர் விழைந்து எவ்வாற்றானும் ஊனுண்ணற்கொழிமின், உண்பீராயின் நரகத்து வீழ்ந்து நலிகுவிர் என்பார் விழைந்து ஊன் உண்ணன்மின் என்றார். இதனை,

"நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை" —குறள், ௩௨௮

எனவும்,

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு" —குறள், ௨௫௫

எனவும் வரும் குறள்களானு முணர்க.

செற்றம்-வெகுளி. செயிர் காம முதலிய ஆறுவகைக் குற்றங்களும் ஆம். தீவினை பிறத்தற்கெல்லாம் வெகுளியே தலைசிறந்த காரணமாகலின், செயிர்கள் நீங்குமின் என்றொழியாது அதனைத் தனித்தெடுத்தும் ஓதினர். இவ்வாறெல்லாம் நாடோறும் நல்லறம்பேணி வாழுதிராயின்

யீர் ஒளியுலகில் அழகிய தேவயாக்கை பெற்றுத் திகழுவீர் என்று அவற்றின் பயனையும் உடனோதினர். என்னை ?

> "சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
> காக்க மெவனோ வுயிர்க்கு" —குறள், ௩௧

எனவும்,

> "அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
> மறத்தலி னூங்கில்லை கேடு" —குறள், ௩௨

எனவும் வரும் திருக்குறள்களையும் நோக்குக. (௨௩)

## தவத்தின் மாண்பு

௨௪. பொருளொடு போகம் புணர்த லுறினும்
அருளுதல் சான்ற வருந்தவஞ் செய்ம்மின்
இருளில் கதிச்சென் றினியிவண் வாரீர்
தெருள லுறினுந் தெருண்மி னதுவே.

(இ - ள்.) பொருளொடு போகம் புணர்தலுறினும்-நீங்கள் நல்லாற்றினின்று பொருளீட்டுந் தொழிலி லீடுபட்டிருந்தாலும் இல்லறத்திலே மனைவிமாரொடு இன்பம் நுகர்ந்து வாழ்வீராயினும்; ஆருக !; அருளுதல் சான்ற அருந்தவஞ் செய்ம்மின் - பிறவுயிர்களுக்கு அருள் செய்தலே மிக்க, செயற்கரிய தவவொழுக்கத்தையும் மேற்கொள்ளக் கடவீர்; இருள் இல் கதிச்சென்று - மயக்கமில்லாத உயர்பிறப்பெய்தி; இவண் இனி வாரீர் - இந் நிலவுலகத்தே இன்னும் வந்து பிறவாப் பெருமையை எய்துவீர்; தெருளல் உறினும் - நீங்கள் பல்லாற்றான் ஆராய்ந்து தெளிந்தாலும்; அதுவே - அத்தவமே முடி பொருளாம்; தெருண்மின் - தெரிந்து கொண்மின்; என்பதாம்.

(வி - ம்.) அறநெறி நின்று பொருளீட்டுதலும் மகளிரொடு புணர்ந்தின்புற்றிருத்தலும் தவவொழுக்கத்திற்கு இடையூறுகள் ஆக மாட்டா. பொருள்களின்பால் பற்றின்மையும் காமவின்பத்தின்பால் அழுந்தாமையும், உற்றநோய் நோன்றலும் உயிர்க்குறுகண் செய்யாமையுமே மெய்யாய தவமாகலின் இவ் வொழுக்கமுடையீராய் வாழக்கடவீர். இவ்வாழ்க்கை நும்மை மேன்மேலும் உயர்பிறப்பிற் செலுத்தி வீடுபேற்றினையும் நல்கும் என்றவாறு.

இதனை,

> "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
> யற்றே தவத்திற் குரு" —குறள், ௨௬௧

எனவும்,

"தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்" —குறள், உசஅ

எனவும்,

"மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்" —குறள், உஅ0

எனவும் வருந் திருக்குறள்களானும் உணர்க.

இன்னும் சைவர் முதலிய பிற சமயத்தாரும் இங்ஙனமே கூறுதலை,

"தேசமிட்ம் காலந்திக் காசனங்க ளின்றிச்
செய்வதொன்று போல்செய்யாச் செயலதனைச் செய்தங்
கூசல்படு மனமின்றி யுலாவ னிற்ற
லுறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தல்
மாசதனிற் றூய்மையினின் வறுமை வாழ்வின்
வருத்தத்திற் றிருத்தத்தில் மைதுனத்திற் சினத்தி
னிசையினின் வெறுப்பினிவை யல்லாது மெல்லா
மடைந்தாலு ஞானிகட்டா மரனடியை யகலார்"
—சிவ - சித்தி, உஅ௫

எனவும்,

"நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்துந் தாகமுதற் றவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பின்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்."
—சிவ - சித்தி, ௩0அ

எனவும்,

"சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்க ளிவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுவெ னிம்மையிலே யுயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே

ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களி வையரோ
டனுபவித்தங் கிருந்திடினு மகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலு
நுழைவர்பிறப் பினின்வினை கள்நுங்கி டாவே''

எனவும் வருகின்ற சிவஞான சித்தியார் (உஅஎ) முதலியவற்றாலும், உணர்க. (உச)

இதுவுமது

உ௫. தவத்தின் மேலுறை தவத்திறை தனக்கல தரிதே
மயக்கு நீங்குதல் மனமொழி யொடுமெயில் செறிதல்
உவத்தல் காய்தலொ டிலாதுபல் வகையுயிர்க் கருளை
நயத்து நீங்குதல் பொருடனை யனையது மறிநீ.

(இ-ள்.) தவத்தின்மேல் உறை - தவவொழுக்கத்தின் கட்டுமே நின்று உயிர் வாழ்தல்; தவத்து இறை தனக்கு அலது அரிது - அத் தவவொழுக்கத்திற் கெல்லாம் தலைவனாயிருக்கின்ற அருகக் கடவுளுக்குக் கைகூடுவதல்லது நம்மனோர்க்கு மிகவும் அரியதொரு செயலேயாகும்; ஆயினும், நம்மனோர்க்குத் தவமாவது; மயக்கு நீங்குதல் - மயக்கம் நீங்கிப் பொருளியல் புணர்தலும்; மனம் மொழியொடு மெயில் செறிதல் - மனமும் மொழியும் உடம்புமாகிய மூன்று கருவிகளையும் அடக்கி அறமாகிய சிறைக் கோட்டத்தின் கண்ணிருத்தல்; உவத்தல் காய்தலொடு இலாது - விரும்புதலும் வெறுத்தலுமாகிய குணங்களோடிராமல்; பல்வகை உயிர்க்கு அருளை நயந்து - பல்வேறு வகைப்பட்ட உயிரினங்களிடத்தும் அருள் கூர்தலையே விரும்பி; பொருள் தனை நீங்குதல் - பொய்ப் பொருள்களின்பாற் பற்றுவையாது ஒழிதல்; அனையதும் நீ அறி - ஆகிய இவற்றை மேற்கோடலேயாம். அத் தவத்தினையும் நீ நன்குணர்ந்துகொள்ளக் கடவை! என்பதாம்.

(வி-ம்.) தவம் செயற்கரிய தொன்றெனக் கருதி அதனை விட்டு விடவேண்டா! தவத்தோர்க்குக் கூறப்பட்ட முழுவிலக்கணங்களும் தவத்தோர்க்கெல்லாம் இறைவனாகிய அருகக் கடவுளுக்கே பொருந்துவதாம். ஆயினும், அஃது அருமையுடைத்தென்று அசாவவாமை வேண்டும். அத் தவம் நம்மனோர் ஆற்றுமளவிற்கு எளியதாகுமாம். அஃதாவது—

பொருளல்லவற்றைப் பொருளாகக் கருதும் மயக்கம் நீங்குதலும், மனமொழி மெய்களை அடக்கித் தீதொரீஇ நன்றின்பாலுய்த்தலும், விருப்பு வெறுப்பற்றிருத்தலும், பொய்ப் பொருள்களைப் பற்றிக் கிடவாமையும், எவ்வுயிர்க்கும் அருளுடையராயிருத்தலும் ஆகிய இவ்வொழுக்கமே நம்மனோர்க்குத் தவமாம். ஆதலால் இவற்றை மேற்கோடல் யாவர்க்கும் கூடும் அன்றோ என்றவாறு.

இவற்றை; விரலே,

''பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானு மாணுப் பிறப்பு'' —குறள், ௩௫௧

எனவும்,

''இருணீங்கி இன்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு'' —குறள், ௩௫௨

எனவும்,

''அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு'' —குறள், ௩௪௩

எனவும்,

''நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்'' —குறள், ௩௭௯

எனவும்,

''வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது'' —குறள், ௩௭௭

எனவும்; (குறிப்பு - இவ்விரண்டும் விருப்பு வெறுப்பினீங்கற்கு வேண்டுவன)

''அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்கு
இவ்வுலக மில்லாகி யாங்கு'' —குறள், ௨௪௭

எனவும் வரும் திருக்குறள்களானுமுணர்க. (௨௫)

இணைவிழைச்சு

௨௬. எண்ணின்றி யேதுணியு மெவ்வழி யானு மோடும்
உண்ணின்று ருக்கு முரவோருரை கோட லின்றும்
நண்ணின்றி யேயு நயவாரை நயந்து நிற்குங்
கண்ணின்று காம நனிகாமுறு வாரை வீழ்க்கும்.

(இ - ள்.) காமம்-காமமானது; எண் இன்றியே துணியும்-ஆராய்தல் சிறிது மின்றியே செயல் செய்யத் துணியும்; எவ்வழி யானும் ஓடும்-நல்வழி தீயவழி என்று நாடுதலின்றி எந்தவழி யினும் விரைந்துசெல்லும்; உள் நின்று உருக்கும்-தான் விரும்பிய வாறு இன்பந் துய்த்தற்கிடையூறு நேர்ந்தவிடத்து நெஞ்சத்தின் கண்ணின்று நலிந்து உள்ளத்தையும் உடம்பினையும் மெலிவிக்கும்; உரவோர் உரைகோடல் இன்று ஆம்-அறிஞர் கூறும் அறவுரை களைச் சிறிதும் பேணுதலும் இல்லையாகும்; நண்ணின்றியேயும் -

தன்பால் கேண்மையில்லாமலும் தன்னைச் சிறிதும் விரும்பாமலு மிருப்பவரையும் பெரிதும் விரும்பி அவ் விருப்பத்தை விடாது நிற்கும்; எனி காமுறுவாரை-தன் உக்துதலாலே மிகவும் இணை விழைச்சினை விரும்புவாரை; வீழ்க்கும்-தீவினைக்கண் வீழ்த்தி விடும்; ஆதலால், கண் இன்று-அக் காமத்திற்குக் கண்ணில்லை என்பர் உலகோர் என்பதாம்.

(வி - ம்.) எண்-ஆராய்ச்சி. எண்இன்றியே துணியும் என்றது இதனைச் செய்தால் அதன் விளைவு இன்னதாகும் என்று ஆராய்ச்சி யின்றி யாது நிகழினும் நிகழுக வென்று காரியஞ் செய்யத் துணியும் என்பதாம்.

காமத்தின் பண்பு இன்னதாதலை இராமாயண முதலிய காப்பியங் களிற் காண்க. உலகியலினும் யாண்டுங் காணலாம். எவ்வழியானும் ஓடும்என்றது முறைநோக்காமல் யாவரிடத்தும்செல்லும்என்றவாறு. காமம் இத்தகைய இழிகுணமுடைத்தென்பது கருதியன்றோ, ஆசிரியர் குமரகுருபர அடிகளார்,

"கொலையஞ்சார் பொய்ந்நாணுர் மானமு மோம்பார்
களவொன்ரே ஏனையவுஞ் செய்வார்—பழியொடு
பாவமிஃ தென்னுர் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்" —நீதிநெறி விளக்கம், ௭௬

என்றோதுவாராயினர்.

இனி, காமங் கதுவப்பட்ட நெஞ்சம் அறிஞர் அறவுரை கொள் ளாமல் எவ்வழியானும் ஓடும் என்பதனை,

"..................நன்னுதன் மடந்தையர்
மடங்கெழு நோக்கின் மதமுகந் திறப்புண்டு
இடங்கழி நெஞ்சத் திளமை யானை
கல்விப் பாகன் கையகப் படாஅ
தொல்கா வுள்ளத் தோடும்" —சிலப், ௨௬ : ௩௫ - ௬

எனவரும் இளங்கோவடிகளார் இன் மொழியானுமுணர்க.

நண் - நண்ணுதல் - அஃதாவது நெருங்கி நட்புக்கொள்ளுதல். தம்மை விரும்பாதவரையும் நயந்து நிற்கும் என்பதனை, கைக்கிளை ஒழுக்கத்தான் உணர்க. அஃதாவது:—

"காமஞ் சாலா விளமை யோள்வயி
னேமஞ் சாலா விடும்பை யெய்தி
நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெருஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே"

எனவரும் தொல்காப்பியத்தாறுணர்க. (அகத் - சூ. ௫௦)

இராமாயணம் முதலிய காப்பியங்களில் இராவணன் முதலிய காமுகர் செயல்களாலும்,

உண்ணின்றுருக்கும் என்பதனை,

"இணரார் நறுங்கோதை எல்வளையாள் கூட்டம்
புணராமற் பூசல் தரவும்—உணராது
தண்டா விழுப்படர் நலியவும்
உண்டால் என்னுயிர் ஓம்புதற் கரிதே"

—புறப் - வெண் - உ௬உ

எனவரும் ஆண்பாற் கைக்கிளையானும்,

'பிறைபுரை வாணுதல் பிரரும்ப மென்றேன்
இறைபுனை யெல்வளை யேக—நிறைபுணையா
யாம நெடுங்கடல் நீந்துவேன்
காம வெள்ளெரி கனன்றகஞ் சுடுமே"

எனவரும் பெண்பாற் கைக்கிளையானும்,

"கூலத்தா ருலக மெல்லாங் குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க
நீலத்தா ரரக்கன் மேனி நெய்யின்றி யெரிந்த தன்றே
காலத்தால் வருவ தொன்றோ காமத்தாற் கனலும் வெந்தீச்
சீலத்தா லவிவ தன்றிச் செய்யத்தா னுவ துண்டோ"

எனவரும் கம்பர் கூற்று முதலிய காவியச் செய்யுள்களாலுமுணர்க.

"காமத்திற்குக் கண்ணில்லை" என்பது ஒரு மூதுரை.

காமுறுவாரை நரகத்தில் வீழ்க்கும் எனினுமாம். (உ௬)

இதுவுமது

உஎ. சான்றோ ருவர்ப்பத் தனிநின்று பழிப்ப காணார்
ஆன்றுங் கமைந்த குரவர்மொழி கோட லீயார்
வான்றுங் கினின்ற புகழ்மாசு படுப்பர் காமன்
தான்றுங் கிவிட்ட கணைமெய்ப்படு மாயி னக்கால்.

(இ - ள்.) காமன் தான் தாங்கிவிட்ட கணை மெய்ப்படும் ஆயின் அக்கால் - காமவேள் தன் கையிலேந்திக் கருப்புவில்லிற் றொடுத்து எய்துவிட்ட மலர்க்கணை காமுகர் மார்பிற் பட்டபொழுது; சான்றோர் உவர்ப்ப - பெரியோர்கள் தம்மை வெறுத்தொதுக்கா நிற்பவும்; தனி நின்று - தமக்குப் பற்றுக்கோடானவரையும் இழந்து தனித்து நின்று; பழிப்ப காணார் - இவ்வுலகம் தம்மைப் பழி

தூற்றலும் அறிவாராய்; ஆன்று ஆய்ந்து அமைந்த குரவர் மொழி கோடலீயார் - கல்வி கேள்விகளானிரம்பி அமைந்திற்றமைய அடங்கிய தம்மாசிரியருடைய மொழிகளையும் ஏற்றுக்கொள்ளாராய்; வான் தாங்கி நின்ற புகழ் மாசுபடுப்பர் - தான் பிறந்த குடியினுடைமையும் தம்முடைமையுமாகிய பெருமைமிக்க புகழையும் கெடுத்தொழிவர். அத்துணைத் தீயதாம் காமம் என்பதாம்.

(வி - ம்.) இது, காமத்தால் வரும் கேட்டினை அறிவுறுத்தியதாம். காமத் தீவினையுடையோரை அவர்க்குப் பற்றுக்கோடாகிய சான்றோர் முதலியவர் வெறுத்தொதுக்கலின் தனித்து நிற்றல் வேண்டிற்று.

ஆன்று - கல்வி கேள்விகளாலே நிரம்பி என்க. குரவர் - நல்லாசிரியர் முதலியவர். கோடலீயார் : ஒரு சொல். (வினைத் திரிசொல்) கொள்ளார் என்னும் பொருட்டு.

தான்றோன்றிய உயர்குடிப் பெரும்புகழ் என்பது தோன்ற வான் றாங்கி நின்ற புகழ் என்றார். (உஎ)

### இதுவுமது

உஅ. மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்
பூவென் றெருக்கி னிணர்சூடுப புன்மை கொண்டே
பேயென் றெழுந்து பிறரார்ப்பவு நிற்பர் காம
நோய்நன் கெழுந்து நனிகாழ்க்கொள்வ தாயி னக்கால்.

(இ - ள்.) காமநோய் நன்கு எழுந்து நனிகாழ் கொள்வது ஆயின் அக்கால் - மாந்தருக்குக் காமப்பிணி நன்றாகத் தோன்றி மிகவும் முதிர்வதானால் அப்பொழுது; மா என்று உரைத்து மடல் ஏறுப - குதிரை என்று கூறிக்கொண்டு பனைமடலாலே குதிரையுருவஞ் செய்து நாணம் விட்டுப் பலருங் காண அதன்மேல் ஏறுநிற்பர்; பூ என்று எருக்கின் இணர் சூடுப - மணமாலை என்று கூறிக்கொண்டு எருக்கமலர்க் கொத்தினையும் சூடிக்கொள்வர்; புன்மை கொண்டு - இவ்வாறு இழிதகவுடையன செய்துகொண்டு; பிறர் பேய் என்று எழுந்து ஆர்ப்ப - தம்மைக் கண்ட பிறரெல்லாம் இஃதொரு பேயென்று கூறி எழுந்து ஆரவாரிக்கும்படி; மன்று தோறும் நிற்ப - அம் மடன்மாவை ஊர்ச்சிறாரா லிழுப்பித்து மன்றமிருக்குமிடந்தோறும் அதனை யூர்ந்து சென்று ஊரவர் அறிய நிற்பர்; இத்துணையும் செய்விக்கும் காமம் கண்டீர்! என்பதாம்.

(வி - ம்.) ஒரு தலைவன் தான் காமுற்ற தலைவியை மணத்தற்கு அவளுடைய சுற்றத்தார் முதலியோரால் இடையூறு நேர்ந்தவிடத்து இவ்வாறு மடலேறுதல் பண்டைக்காலத்து நந்தமிழகத்து நிகழ்ந்த நிகழ்ச்சியாம் இந்நிகழ்ச்சி இழிதகவுடையதாகலின் காமத்தினிழிதகைமைக்கு இதனை இவ்வாசிரியர் குறிக்கின்றார். காமங் காழ்கொண்டவர் இங்ஙனம் மடன்மாவூரும் வழக்க முண்மையை,

"ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே"
—தொல் - அகத் - டுக

எனவும்,

"மடன்மா கூறும் இடனுமா ருண்டே" —ஷை களவி - கக

எனவும் வருந் தொல்காப்பியத்தானும்,

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்தோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனனு லிவ்விருந்த
சான்றீர் நுமக்கொன் றறிவுறுப்பென் மன்ற
துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டு துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்று விடும்பைக் குயிர்ப்பாக
விங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவென் பாய்மா நிறுத்து;
யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;
உய்யா வருநோய்க் குயலாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா;
காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
னுணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை;
காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா;

அகையெரி யானுதென் னுருபி ரெஞ்சும்
வகையினு னுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
நகையாற் றலைக்கொண்ட நெஞ்சு;
அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யித்தவிம் மா;
ஆங்கதை,
அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழி யான்றோ
ருள்ளிடப்பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலகம் முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே''

எனவரும் கலித்தொகையானும் (கடுக) நன்குணர்க.

இனி இச் செய்யுளோடு,

''மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே''

எனவருங் குறுந்தொகைச் செய்யுள் (கள) ஒப்பு நோக்கற்பாலது.

(உ௮)

இதுவுமது

உக. நக்கே விலாவிறுவர் நாணுவர் நாணும் வேண்டார்
புக்கே கிடப்பர் கனவுநினை வையு மேற்பர்
துற்றூண் மறப்ப ரழுவர்நனி துஞ்ச லில்லார்
நற்றோள் மிகைபெ ரிதுநாடறி துன்ப மாக்கும்.

(இ-ள்.) நக்கே விலா இறுவர்-காமுகரின் இழிசெயலைக் கண்டு மேலோர்கள் நகைத்து நகைத்துத் தம் விலாவென்பொடிந்து போவர்; நாணுவர்-மற்றுச் சான்றோர் தாமும் அவர்பொருட்டு நாணுவிப்பர்; நாணும் வேண்டார்-மற்று அக் காமுகரோ நாணத்தை ஒரு பொருளாகக் கருதமாட்டார்; (கைவிட்டொழிவர்) புக்கே கிடப்பர்-காமுகரெல்லாம் கற்பில்லா அம் மகளிர் இல்லத்தே புகுந்து அவ்விடத்தேயே சோம்பித் துயின்று கிடப்பர்; கனவும் நினைவும் ஏற்பர்-அத்துயிலினூடும் மனவமைதியின்றிக் கனாக் காண்டலையும் துயில் கலைந்துழி அம் மகளிரை நினைதலையுமே தொழிலாகக் கொள்பவராவர்; துற்று ஊண் மறப்பர்-உண்ணும்

டணவினையும் மறந்தொழிவர்; அழுவர்-அவரால் கைவிடப்படின் அழாநிற்பர்; கனிதுஞ்சல் இல்லார்-கன்கு துயிலுதல் தானுமில ராவார்; கற்றோருள் மிகை பெரிது காடு அறி துன்பம் ஆக்கும்-இவ் வாறு அம் மகளிருடைய அழகிய தோள்கள் காமுகருக்கு உலகத் தாரெல்லாம் கண்கூடாகக் காணத் தகுந்த மாபெருந் துன்பத்தை யுண்டாக்கும்; ஆதலால் அம் மகளிர் கேண்மை கைவிடற்பாலது, என்பதாம்.

(வி - ம்.) காமுகக் கயவருடைய இழிசெயலைக் கண்டுழித் தம் பழி நோக்காக் கயமாக்கள் விலாவிறும்படி விழுந்து விழுந்து சிரிப்பர்; பிறர் பழியும் தம்பழிபோற் கருதும் சான்றோரோ நாணமெய்துவர். இங்ஙனமாகவும் காமுகரோ நாணுதலிலர் என்பார் நக்கே விலா விறுவர் நாணுவர் நாணும் வேண்டார் என்றார். இவற்றிற்குத் தம் பழி நோக்காக் கயமாக்கள் என்றும், சான்றோர் என்றும், காமுகர் என்றும் ஏற்றபெற்றி எழுவாய்கள் வருவித்தோதுக.

பிறரை எள்ளி விலாவிறச் சிரிப்பர் என்பதனால், கயமாக்கள் என்பதும் நாணுவர் என்றதனால், சான்றோர் என்பதும், நாணும் வேண்டார் என்பதனால் காமுகர் என்பதும் பெற்றாம். கயமாக்கள் தாம் பழியுடையராய் வைத்தும் பிறர்பழி கேட்டுழி நகைத்து நாடறியச் செய்யுமியல்புடைய ரென்பதனை,

''அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்'' —குறள், ௧௦௭௬

என்பதனானும், சான்றோர் பிறர் பழியைத் தம் பழிபோற் கருதி நாணுவர் என்பதனை,

"பிறர்பழியுந் தம்பழியும் நாணுவர் நாணுக்
குறைபதி யென்னு முலகு" —குறள், ௧௦௧௫

என்பதனானும் உணர்க.

இனி, காமுகர் நாணும் வேண்டார் என்பதனை,

'ஒண்டொடி, நாணிலன் மன்ற விவன்
ஆயின் ஏஎ!
பல்லார் நக்கெள்ளப் படுமட்ன் மாவேறி
மல்லனூ ரங்கட் படுமே'' —கலி, ௬௪

எனவரும் மடலேறுவார் செயலினும்,

"ஏஎ இஃதொத்தன் நாணிலன் தன்னொடு
மேவே மென்பாரையும் மேவினன் கைப்பற்றும்''

எனவரும் மிக்க காமத்து மிடலுடையார் ஒழுக்கத்தினும் (கலி. ௬௨) காண்க.

இனி, புக்கே கிடப்பர் என்றது, நல்லாடவர்க்குரிய அறக்கடமைகளைக் கைவிட்டு அப் புன்மகளிர் இல்லில் நுழைந்து சோம்பித்துயின்று கிடப்பர் என்பதுபட நின்றது. இங்ஙனம் கொள்வதெல்லாம் சொல்லாற்றலாற் போந்த பொருள் என்றுணர்க.

துற்றாண் : வினைத்தொகை. துற்றுதல் - உண்ணல். அழுவர் என்றமையால் அம் மகளிரால் புறக்கணிக்கப்பட்டபொழுது என்பது பெற்றாம்.

நற்றேரள் என்றது குறிப்பு மொழி; இடக்கரடக்கல்;

நாடறி துன்பம் என்றது, அழுதலும் துஞ்சலிலாமையும் முதலியன. நாடு: ஆகுபெயர். ஆதலால் அம் மகளிர் கேண்மை யொழிக! என்பது குறிப்பெச்சம். 'அழிவர்' என்பதும் பாடம். (உக)

இதுவுமது

௩௦. அரசொடு நட்டவ ராள்ப விருத்தி
அரவொடு நட்டவ ராட்டியு முண்பர்
புரிவளை முன்கைப் புனையிழை நல்லார்
விரகில ரென்று விடுத்தனர் முன்னே.

(இ - ள்.) அரசொடு நட்டவர்-கேண்மை கோடற்கெலாத வேந்தரோடு கேண்மை கொண்டோர், விருத்தி ஆள்ப-அவ்வேந்தர் உவந்து வழங்கும் வாழ்வூதியத்தைப் பெற்றின்புறுதல் கூடும்; அரவொடு நட்டவர்-அஞ்சதகு பாம்போடு பழகுவோர் தாமும்; ஆட்டியும் உண்பர்-அப் பாம்பினை ஆட்டுந் தொழிலால் வருவாய் பெற்று உண்டு மகிழ்தல் கூடும்; புரிவளை முன்கைப் புனை இழை நல்லார்-முறுக்குடைய சங்கவளையலணிந்த முன்கையினையும் அணிகின்ற அணிகலன்களையுமுடைய புல்லிய ஒழுக்கமுடைய மகளிரோ; விரகு இலர்-நல்வாழ்க்கைக்குச் சிறிதும் உதவாத விலர்; என்று முன்னே விடுத்தனர்-என்றுணர்ந்து சான்றோர் பண்டுதொட்டே அவர் கேண்மையைக் கைவிட்டொழிந்தனர் - என்பதாம்.

(வி - ம்.) அரசர்பாலும் பாம்பினிடத்தும் கற்பிலா மகளிர்பாலும் கேண்மை கோடல் தீங்கு பயப்பதாம். ஒரோவழி அரசரோடு கேண்மை கொள்பவர் அகலாது அணுகாது தீக்காய்வார்போல விழிப்புடன் ஒழுகின் அவ்வரசனால் ஊதியம் பெற்று இன்புறுவர். பாம்போடு விழிப்புடன் பழகுவோரும் அதனை ஆட்டி வருவாய் பெற்று வாழ்தல் கூடும். கற்பிலாக் கயமகளிரோடு கேண்மை கொள்வார்க்குக் கேடு விளைவது ஒருதலை. ஒரு சிறிதும் அம் மகளிர் ஆக்கஞ் செய்வாரலர் என்பதாம். இக் கருத்தினை,

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று" —குறள், ககூ

எனவும்,

"தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்" —குறள், ௯௧௬

எனவும்,

"நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்" —குறள், ௯௧௭

எனவும் வருந் திருக்குறள்களான் உணர்க.

அக நலமாகிய அன்புடைமையும் கற்புடைமையு மின்மை தோன்ற "புரிவளை முன்கைப் புனையிழையார்" எனப் புறநலத்தையே விதந்தெடுத்தோதினர். (௯0)

கள்ளாமை

௯௧. பீடில் செய்திக ளாற்கள விற்பிறர்
வீடில் பல்பொருள் கொண்ட பயனெனக்
கூடிக் காலொடு கைகளைப் பற்றிவைத்
தோட லின்றி யுலையக் குறைக்குமே.

(இ - ள்.) களவில்-மறைவாக; பிறர் வீடு இல் பல்பொருள் - பிறமாந்தர் கைவிடுதலில்லாத பல்வேறு பொருள்களையும்; பீடு இல் செய்தியில்-பெருமையில்லாத கன்னமிடுதல் முதலிய தொழில்களாலே; கொண்ட பயன் என-நீ களவுகொண்டதன் பயன் இஃதேயாம் என்று சொல்லி; பற்றி-செங்கோன் மன்னவன் கள்வரைத் தன் மறவர்களால் பிடிப்பித்து; ஓடல் இன்றி காலொடு கைகளைக் கூடி-தப்பி ஓடிவிடாதபடி அவர்தம் கால்களையும் கைகளையும் கூட்டித் தளையிட்டு; உலையக் குறைக்கும்-அவர் நெஞ்சம் பதறும்படி துணிப்பன், என்பதாம்.

(வி - ம்.) களவுசெய்யுங் குற்றத்திற்குக் கைகால்களைக் குறைத்தக் கொல்லுதல் பழைய காலத்து மன்னர் வழக்கம். இதனைச் சிலப்பதிகாரத்தாலும் உணர்க. இனி, வள்ளுவனார்,

"கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்வார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு" —குறள், ௨௯0

என்றோதந் திருக்குறளாலும் பண்டு கள்வரைக் கொல்லுதலே தக்க வொறுப்பென அரசர் கருதிய துணரலாம். மேலும், இக் குறளானும் களவினால் வரும் கேடுணர்க. "கள்வனைக் கோறல் கடுங்கோலன்று வெள்வேற் கொற்றம்" என்பது பாண்டியன் நெடுஞ்செழியன் கூற்று. (சிலப் - வழக்குரை - ௬௪ - ௫.)

இன்னும்,

“களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்” —குறள், உ௮௪

என்பதனானும் களவினால் வருந் தீமையை யுணர்க. (௬௧)

## பொய்யாமை

௬௨. பொய்யி னீங்குமின் பொய்யின்மை பூண்டுகொண்
டைய மின்றி யறநெறி யாற்றுமின்
வைகல் வேதனை வந்துற லொன்றின்றிக்
கௌவை யில்லுல கெய்துதல் கண்டதே.

(இ - ள்.) பொய்யில் நீங்குமின் - பொய் கூறுவதினின்றும் அகலுங்கள்; பொய்யின்மை பூண்டுகொண்டு - பொய்யாமை என்னும் அணிகலனை எப்பொழுதும் அணிந்துகொண்டு; வைகல் நெறி அறம் ஆற்றுமின்-நாடோறும் நன்னெறியிலே நின்று நல்லறங்களை ஒல்லும் துணையும் செய்யக் கடவீர்; வேதனை ஒன்று வந்து உறல் இன்றி-இவ்வாறு அறஞ்செய்து வாழுபவர் தம் வாழ்நாளிற் றமக்கொரு துன்பமேனும் வருதலின்றி இம்மையினும் இனிது வாழ்ந்து மறுமையினும்; கௌவை இல் உலகு எய்துதல்-துன்பமில்லாத துறக்க நாட்டினை அடைதல் ஒருதலை என்னும் உண்மை; கண்டது-திறவோர்தம் மெய்க் காட்சியாம்; என்பதாம்.

(வி - ம்.) பொய்யின் நீங்குமின் என்றொழியாது அவ்வொழுக்கத்தைக் கடைப்பிடித்தொழுகுமின் என்பார் மீண்டும் பொய்யின்மை பூண்டு கொண்டென்றார். பொய்யின்மை பூண்டு கொண்டென்றமையான் அதனை அணிகலனாக உருவகித்தமை பெற்றாம். பொய்யின்மை எனினும் வாய்மை எனினும் ஒக்கும். பொய்யாமை அறங்களுட் சிறந்த தென்பதனை,

“யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற” —குறள், ௩௦௦

எனவும்,

“எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு” —குறள், உ௯௯

எனவும்,

“பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று” —குறள், உ௯௭

எனவும்,

“பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்” —குறள், உ௯௬

எனவும் வரும் அருமைத் திருக்குறள்களானு முணர்க.

இனி, பொய்யாமையும் ஓர் அறமாகவும் அஃதின்றி எவ்வறஞ் செய்யினும் பயன்படாமை கருதி அதனைத் தனித்தெடுத்து முற்பட வோதி ஏனையவற்றைத் தொகுத்துக் கூறினர். என்னை ?

"மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற" —குறள், ௩௪

எனவரும் பொய்யாமொழியும் காண்க.

வைகல் அறநெறி ஆற்றுமின் என மாறுக. என்னை ?

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்" —குறள், ௩௮

என்பதூஉம் காண்க.

அறம் ஆற்றுமின் என்புழி அறம் - விருந்தோம்பல் முதலியன.

மனத்தின்கண் மாசிலராய் அறஞ் செய்து வாழ்வோர் இம்மையினும் இனிது வாழ்வர்; மறுமையினுந் துறக்கம் புகுவர் என்பார், வேதனை வந்துறவின்றிக் கௌவையிலுலகு எய்துதல் கண்டதே என்றார். இதனை,

"சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு" —குறள், ௩௧

எனவருந் திருக்குறளானுமுணர்க.

கண்டது என்றது திறவோராற் காணப்பட்ட உண்மை என்பது பட நின்றது. (௩௨)

இதுவுமது

௩௩. கல்வி யின்மையுங் கைப்பொருள் போகலு
நல்லில் செல்லல்க ளானலி வுண்மையும்
பொய்யில் பொய்யொடு கூடுதற் காகுத
லைய மில்லை யதுகடிந் தோம்புமின்.

(இ - ள்.) பொய்யொடு கூடுதற்கு - பொய்கூறி உயிர் வாழும் வாழ்க்கையின்கண்; கல்வி இன்மையும் - கல்வியாலுண்டாகும் அறிவுப் பொருளில்லாமையும்; கைப்பொருள் போகலும் - கையிலுள்ள செல்வப் பொருள் அழிவும் ; நல்இல் செல்லல்களால் நலிவு உண்மையும்-நன்மையில்லாத துன்பங்களாலே வருந்துதலும்; ஆகுதல்-உண்டாதல்; பொய் இல்-முக்காலும் வாய்மையேயாம்; ஐயம் இல்லை-ஐயஞ் சிறிதும் இல்லை; அது கடிந்து ஓம்புமின் - ஆதலால், அப் பொய் கூறுதலை ஒழித்து நும்மைப் பாதுகாத்துக் கொள்வீராக! என்பதாம்.

(வி - ம்.) பொய் கூறுமியல்புடையார்க்குக் கல்விநலம் கைகூடாது; கைப்பொருளுக்குங் கேடுவரும்; எப்பொழுதும் துன்பங்கள் வந்தவண்ணமிருக்கும் ஆதலால்; பொய் கூறுதொழிமின் என்றவாறு.

"போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கோ ணகையினுர் வாய்ச்சேரா—தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்'' —நீதிநெறி விளக்கம், ௨௪

என்பதனுனும் கல்வி நலம் புலங்கெட்ட புல்லறிவுடைய பொய்யர் பாற் சேராமை யுணர்க.

வாய்மை அறங்களுட் சிறந்ததாதல் போன்று பொய்ம்மை தீவினைகளுட் சிறந்ததாதலின், பொய்யராகிய தீவினையாளர்க்கு இடையருது துன்பங்கள் வந்தண்ணமிருக்கும் என்பார், 'நல்வில் செல்லல்களால் நவிவுண்டாம்' என்றார். என்னை?

"தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்'' —குறள், ௨௦௨

எனவரும் பொன்மொழியும் காண்க. (௧௩)

## கோல்லாமை

௧௪. உலகுடன் விளங்கவுயர் சீர்த்திநிலை கொள்ளின்
நிலையில்கதி நான்கினிடை நின்றுதடு மாறும்
அலகிறுய ரஞ்சினுயி ரஞ்சவரும் வஞ்சக்
கொலையொழிமி னென்றுநனி கூறினர றிந்தார்.

(இ - ள்) அறிந்தார் - மெய்யுணர்வுடைய சான்றோர் உலகினரை நோக்கி நமரங்காள்! நீயிர்; உலகு உயர்சீர்த்தி உடன் விளங்க நிலை கொள்ளின் - இவ்வுலகுள்ள துணையும் அதனோடிணைந்து நிற்கும் உயரிய புகழொடு நின்று நிலவுதல் வேண்டுவீராயினும்; நிலை இல் கதி நான்கின் இடை நின்று-அல்லது நிலையுதலில்லாத நால்வகைப் பிறப்பின்கட்பட்டுத் தடுமாறும்; அலகில் துயர் அஞ்சினும்-துன்புற்று நெஞ்சு தடுமாறுதற்குக் காரணமான எண்ணிறந்த துயரங்களை அஞ்சி வீடுபெற விழைதிராயினும்; உயிர் அஞ்ச வரும் வஞ்சக் கொலை ஒழிமின்-உயிரினங்கள் பெரிதும் அஞ்சும்படி நிகழுகின்ற கொலைத்தொழிலை ஒழித்து விடுவீராக!; என்று நனி கூறினர் - என்று மிகவும் வற்புறுத்துக் கூறிப்போந்தனர்; ஆதலால் கொலைவினையை ஒழிப்பீராக! என்பதாம்.

(வி - ம்.) இம்மைப் பயனையும் வீடுபேற்றினையும் ஒருசேர அளிக்கவல்லது கொல்லாமை என்னும் நல்லறம் ஒன்றேயாகும். ஆதலால் எல்லீரும் அவ்வறத்தினைக் கடைப்பிடித் தொழுகுமின்! என்றவாறு.

இனி, கொல்லாமை என்னும் அறமே அறங்களிலெல்லாம் தலை சிறந்ததென்பதனையும் அவ்வறமே இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் வீடுபேற்றினையும் ஒருசேரத் தரவல்லதென்பதனையும், திருக்குறளின் கொல்லாமை என்னும் அதிகாரத்திற்கு ஆசிரியர் பரிமேலழகர்,

"இது (கொல்லாமை) மேற்கூறிய அறங்கள் எல்லாவற்றினுஞ் சிறப்புடைத்தாய்க் கூறாத வறங்களையும் அகப்படுத்து நிற்றலின் இறுதிக்கண் வைக்கப்பட்டது" என்று கூறும் முன்னுரையாம் பொன்னுரையாலும்; தெய்வப்புலமைத் திருவள்ளுவனார்—

"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும்" —குறள், ௩௨௧

எனவும்,

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" —குறள், ௩௨௩

எனவும்,

"நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி" —குறள், ௩௨௪

எனவும், ஓதுந் திருக்குறள்களானு முணர்க.

இனி, கொல்லாமை என்னுமிவ்வறம் வீடுபேறும் நல்கும் என்பதனை, அப் பொய்யில் புலவர்,

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று" —குறள், ௩௨௬

என வோதுந் திருக்குறளானும், அதற்கு ஆசிரியர் பரிமேலழகர்:—

"மிகப் பெரிய அறஞ்செய்தாரும் மிகப் பெரிய பாவஞ் செய்தாரும் முறையானன்றி இம்மை தன்னுள்ளே அவற்றின் பயன் அனுபவிப்பரென்னும் அறநூற் றுணிபு பற்றி, இப் பேரறஞ் செய்தான்றானும், கொல்லப்படான்; படானாகவே, அடியிற் கட்டிய வாழ்நாள் இடையூறின்றி எய்துமென்பார், 'வாழ் நாள் மேற் கூற்றுச் செல்லா' தென்றார்; செல்லாதாகவே கால நீட்டிக்கும்; நீட்டித்தால் ஞானம் பிறந்து உயிர் வீடுபெறுமென்பது. இதனான் அவர்க்கு வருநன்மை கூறப்பட்டது" என வகுக்கும் நல்லுரையானும் நன்கு தெளிக.

கதி-பிறப்பு. துயர் அஞ்சி என்றது துயர் அஞ்சி வீடுபேறு எய்தி நிலைகொள்ள நினையின் என்பதுபட நின்றது. இம்மைப் பயன் கூறினமையின் மறுமையிற் றுறக்கம் புகுதலும் கொள்க. (௩௪)

## செல்வ நிலையாமை

௩௫. வெள்ள மறவி விறல்வேந்தர் தீத்தாயங்
கள்வரென் றிவ்வாறிற் கைகரப்பத் தீர்ந்தகலும்
உள்ளி லுறுபொருளை யொட்டா தொழிந்தவ
ரெள்ளும் பெருந்துயர்நோ யெவ்வ மிகப்பவே.

(இ - ள்.) வெள்ளம் மறலி விறல்வேந்தர் தீ தாயம் கள்வர் என்று - செல்வமானது வெள்ளமும் மறலியும் வெற்றியுடைய வேந்தரும் நெருப்பும் தாயத்தாரும் கள்வரும் என்று கூறப்படுகின்ற; இ ஆறில் கைசோப்பத் தீர்ந்து அகலும் - இந்த ஆறு வழிகளானும் உடையவனது கையினின்றும் மறைவாக ஒழிந்து போகும் இயல்புடையதாம்; உள் இல்பொருளை ஒட்டாது - ஆதலால் உள்ளீடற்ற பொய்மாகிய பொருளைப் பற்றாமல்; ஒழிந்தவர் - துறந்த சான்றோர்; எள்ளும் பெருந்துயர் நோய் எவ்வம் - பிறர் இகழ்தற்குக் காரணமான பெரிய துயரங்களைச் செய்யும் பிறவிப்பிணியாகிய துன்பத்தை; இகப்ப - நீங்கியுய்வர் என்பதாம்.

(வி - ம்.) பொருள் முயன் றீட்டிய விடத்தும் நம்மை விட்டகலுதற்குப் பலவேறு வழிகளையும் உடைத்தாம் ஆகவே அதனை ஈட்டல் பயனின்றாம். பொய்யாகிய அப்பொருளின்பாற் பற்று விட்டவர்களே பேரின்பம் எய்துபவர் ஆவர் என்பதாம்.

இனிச் செல்வம் நிலையாத்தன்மை யுடைத்தென்பதனை,

"அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்"

எனவரும் திருக்குறளானும்,

"முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய
பாலடிசின் மகளி ரேந்த
நல்ல கருனையா னுன்வாயும்
பொற்கலத்து நயந்துண் டார்கள்
அல்ல லடையா வட்கிடுமி
னேட்டகத்தென் றயில்வார்க் கண்டும்
செல்வ நமரங்கா ளினையன்மின்
செய்தவமே நினைமின் கண்டீர்!"

எனவும்,

"அம்பொற் கலத்து ளடுபா
லமர்ந்துண்ணு வரிவை யந்தோ
வெம்பிப் பசிநலிய வெவ்வினையின்
வேருயோ ரகல்கை யேந்திக்
கொம்பிற் கொளவொசிந்து பிச்சை
யெனக்கூறி நிற்பாட் கண்டு
நம்பன்மின் செல்வ நமரங்காள்
நல்லறமே நினைமின் கண்டீர்!"

எனவும்,

"வண்ணத் துகிலுடுப்பின் வாய்விட்
டழுவதுபோல் வருந்து மல்குல்
நண்ணுச் சிறுகூரை யாகமோர்
கைபாக முடுத்து நாளும்
அண்ணுந் தடகுரீஇ யந்தோ
வினையேயென் றழுவாட் கண்டும்
நண்ணன்மின் செல்வ நமரங்காள்
நல்லறமே நினைமின் கண்டீர்!"

(சீவக - உசஉக - ஈ - இ.)

எனவரும் விசயை கூற்றானும் உணர்க. பொருளல்லனவாகிய பொய்ப் பொருள் என்பார் 'உள் இல் பொருள்' என்றார். (கூ௦)

இதுவுமது

கூக. ஒழிந்த பிறவற னுண்டென்பா ருட்க
வழிந்து பிறரவாம் வம்பப் பொருளை
இழந்து சிறிதானு மெய்தா தொழிந்தா
ரழிந்து பெருந்துயர்நோய்க் கல்லாப் பவரே.

(இ - ள்.) ஒழிந்த பிற அறன் உண்டு என்பார் - பொருளை ஈட்டுதலிலேயே முயன்றா இனி இப் பொருளால் யாம் செய்யக் கடவனவாய் எஞ்சிய பிற அறச் செயல்களும் உண்டு அவற்றை இனியேனும் செய்குவம் என்று கருதுமின்றவர்; உட்க-வெகுதும் அஞ்சும்படி; அழிந்து-அவரிடத்தினின்றும் அழிந்துபோய்; பிற ஆம்-பிறருடைய கைப்பொருளாய் விடுகின்ற; வம்பப் பொருளை - புதுமையையுடைய செல்வத்தை; இழந்து-போகூழானே இழப் பெய்தி; சிறிதானும் எய்தாது ஒழிந்தார் - அச் செல்வத்தின் பயனைச் சிறிதேனும் எய்தப் பெறாத மாந்தர்; அழிந்து-நெஞ் சழிந்து; பெருந்துயர் நோய்க்கு-அவ்விழப்பாலுண்டான பெரிய துன்பமாகிய வறுமை நோயால்; அல்லாப்பவர்-வாழ்நாள் முழுதும் மனஞ்சுழன்றா கிடப்பவரே ஆவர், என்பதாம்.

(வி - ம்.) பொருளீட்டுந் துணையும் நல்லோரும் அறஞ்செய்யார், யாம் இப் பொருளால் செய்ய வேண்டிய அறங்களும் உள இனி அவற்றைச் செய்வாம் என்று எண்ணியிருக்கும் போதே அவர் அஞ்சும்படி அப் பொருள் அழிந்து பிறர் பொருளாய்விடும்; இத்தகைய நிலையாமையுடைய பொருளை ஈட்டி அறஞ் சிறிதேனுஞ் செய்யாது அழிந்தொழிந்தவர் பின்னர் வாணாள் முடியும் துணையும் மனம் வருந்திச் சுழன்று கிடப்பர் இத்தகையர் அளியர் என்றிரங்கியபடியாம்.

ஆசிரியர் திருவள்ளுவனாரும்,

"நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை" —குறள், ௩௩௧

எனவும்,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று" —குறள், ௩௩௨

எனவும் அறிவுறுத்தலுணர்க. (௩௬)

இதுவுமது

௩௭. இன்மை யிளிவா முடைமை யுயிர்க்கச்சம்
மன்னல் சிறிதாய் மயக்கம் பெரிதாகிப்
புன்மை யுறுக்கும் புரையில் பொருளைத்
துன்னு தொழிந்தார் துறவோ விழுமிதே.

(இ - ள்.) இன்மை இளிவாம்-ஒருவனுக்குப் பொருளின்மையாகிய நல்குரவு தானும் பெரிதும் இழிவைத்தருவதாம்; உடைமை-மற்றும் அப் பொருட்பேறு தானும்; உயிர்க்கு அச்சம் - அவனுயிர்க்கே பெரிதும் அச்சத்தைத் தருவதாகும்; மன்னல் சிறிது ஆய் - மேலும் அப் பொருள் ஒருவன்பால் நிலைபெற்றிருக்கும் பொழுது தானும் மிகவுஞ் சிறியதாகி; மயக்கம் பெரிதாகி - அஃதில்லையாயினும் உண்டாயினும் இரண்டு பொழுதினும் மயக்கம் மிகவுஞ் செய்வதாகி; புன்மையுறுக்கும்-மாந்தர்க்குக் கீழ்மையையே யுண்டாக்கு மியல்புடைய; புரை இல் பொருளை-மேன்மையில்லாத பொருள்களை; துன்னுது - பற்றுதலின்றி, ஒழிந்தார் - அம் மயக்கொழிந்த சான்றோரது; துறவு விழுமிது-துறவொழுக்கமானது மிகவும் சிறப்புடையதாம், என்பதாம்.

(வி - ம்.) பொருளில்லாவிட்டாலும் இழிவுதரும். அதனைப் பெற்ற பொழுதோ உயிர்க்கே அச்சந்தருவதாம். பெற்றுழியும் அது நிலைத்திருத்தலுமில்லை. அதனைப் பெற்றபொழுதும் மாந்தர்க்கு மயக்கமே மிகும். இழந்தபொழுதும் மயக்கமே செய்யும். இங்ஙனம் எவ்வாற்றானும் மாந்தர்க்குக் கீழ்மையே தருகின்ற பொய்ப்பொருளைப் பற்றாமல் மயக்கொழிந்த சான்றோருடைய துறவொழுக்கமே உலகின்கண் மிகவும் சிறப்புடைய செயலாம் என்றவாறு.

இன்மை-நல்குரவு. இளிவரவு-இழிவு. உடைமை-பொருட்பேறு. கள்வர் அரசர் முதலியோரால் கொலையுண்ணவும் கவிவுறவும் செய்யுமாகலின், உடைமையுயிர்க்கச்சம் என்றார். மன்னல் - நிலைபெறுதல். பொருள் சகடக்கால் போன்று மாறி வருதலால் நிலைபேறு சிறிதாய் என்றார். புன்மை - காம வெகுளி மயக்கங்கட்கு ஏதுவாம் கீழ்மை. புரை - உயர்வு.

இனி, இன்மை இளிவாம் என்பதனை,

"இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்" —குறள், ௧௦௪௪

எனவும்,

"இல்லாரை யெல்லா மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு" —குறள், ௭௫௨

எனவும் வருந் திருக்குறள்களானும், மன்னல் சிறிதாகி என்பதனை,

"அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்" —குறள், ௩௩௩

எனவரும் திருக்குறளானும் உணர்க. 'துறவோ விழுமிது' என்பதனை,

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு" —குறள், ௨௧

எனவும்,

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று" —குறள், ௨௨

எனவும்,

"இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு" —குறள், ௨௩

எனவும் வருந் திருக்குறள்களானு முணர்க. (௩௭)

இதுவுமது

௩௮. ஈண்ட லரிதாய்க் கெடுத லெளிதாகி
நாண்ட லரிதாய் நடுக்கம் பலதரூஉ
மாண்பி லியற்கை மருவி லரும்பொருளை
வேண்டா தொழிந்தார் விறலோ விழுமிதே.

(இ - ள்.) ஈண்டல் அரிது ஆய் - வந்து சேருவது மிகவும் அரியதாகி; கெடுதல் எளிதாகி - அழிந்துபோவது மிகவும் எளியது ஆகி; நாண்டல் அரிதாய் - நிலைப்பித்துக் கோடலும் அரிதாகி; நடுக்கம் பல தரூஉம் - பலவேறு துன்பங்களையும் தருகின்ற; மாண்பு இல் இயற்கை - மாட்சிமையில்லாமையையே இயல்பாக உடைய; மருவு இல் - பொருத்தமற்ற; அரும்பொருளை - பெறுதற்கரிய இவ்வுலகப் பொருள்களை; வேண்டாது ஒழிந்தார் - விரும்பாது துறந்த சான்றோருடைய; விறல் - வெற்றியே; விழுமிது - உலகின்கண் பெறக்கிடந்த வெற்றிகளுள் வைத்துத் தலைசிறந்த வெற்றி என்பதாம்.

(வி - ம்.) ஈண்டல்-ஓரிடத்தே குவிதல். நாட்டல் எனற்பாலது எதுகை நோக்கி நாண்டல் என மெலிந்து நின்றது. நாட்டல் – நிலைநிறுத்துதல். நடுக்கம்: ஆகுபெயர். மருவு - பொருந்துதல். விறல்-வெற்றி. பொறிகளை வெல்லுதலே வெற்றிகளிற் றலைசிறந்த வெற்றியாதலின், பொருள்களின்பாற் பற்றொழிந்த துறந்தார் விறலோ விழுமிது என்றார். (௩அ)

இதுவுமது

௩௯. இல்லெனின் வாழ்க்கையு மில்லையுண் டாய்விடிற்
கொல்வர் கயவர் கொளப்பட்டும் வீடுவர்
இல்லையுண் டாய்விடி னிம்மை மறுமைக்கும்
புல்லென்று காட்டும் புணர்வது மன்றே.

(இ - ள்.) இல் எனின் வாழ்க்கையும் இல்லை - இவ்வுலகின் கண் ஒருவனுக்குப் பொருள் இல்லையானால் அவனுக்கு நல்வாழ்க்கையும் இல்லையாய்விடும்; உண்டு ஆய்விடின் - மற்றுப் பொருள் உண்டாகுமானாலும்; கயவர் கொல்வர்-கள்வர் முதலிய கொடியவர்கள் அதனைக் கைப்பற்றும் பொருட்டு அப்பொருளுடையானைக் கொன்று விடுவர்; கொளப்பட்டும் வீடுவர்-கொல்லாமல் பொருளை மட்டும் கவர்ந்துகொண்ட விடத்தும் பொருளுடையோர் ஏக்கத்தாற் றாமே உயிர் நீப்பர்; இல்லை உண்டாய்விடில் - அல்லதூஉம் ஒருவனுக்குப் பொருள் இல்லாமையாகிய வறுமை யுண்டாய் விட்டாலோ; இம்மை மறுமைக்கும் புல் என்று காட்டும்-இம்மையினும் மறுமையினும் அவ் வறியவனுடைய வாழ்க்கை பயனற்றதாய்ப் பொலிவிழந்து காணப்படும்; புணர்வதும் அன்றே - அப் பொருள் தானும் ஒருவன் விரும்பியபொழுது அவன்பால் வந்து சேர்வதுமில்லை; ஆகவே இத்தகைய பொருளின்பாற் பற்றுவையாது துறந்துபோதலே சிறப்பாம் என்பதாம்.

(வி-ம்.) பொருளில்லாமையானும் துன்பம். உண்டாயவிடத்தும் சாதல் முதலிய பெருந்துன்பமே யுண்டாம். அப் பொருளில்லாத வழி இம்மை மறுமை வாழ்க்கைகள் புற்கென்றுவிடும். ஆதலால் அதன்கட் பற்றுவையாது துறந்து போதலே நன்று. துறப்போர்க்கு வீட்டின்பம் உண்டாதல் ஒருதலை என்பதாம்.

பொருளில்லையாயின் வாழ்க்கையுமில்லை என்பதனை,

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு" —குறள், ௨௪௭

எனவரும் திருக்குறளானுமுணர்க.

பொருளுடையார் கள்வர் முதலியோரரற் கொலையுண்ணலும் பொருளையிழந்துழித் தாமே ஏங்கி உயிர் விடுதலும் உலகியலிற் காண்க.

வறுமையுடையோர் உணவின்மை முதலியவற்றாற் றன்புறுதலும், அறமுதலியன செய்யமாட்டாமையின் துறக்கம் புகமாட்டாமையும், பிறவும்,

''இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது'' —குறள், ௧௦௪௧

எனவும்,

''இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்'' —குறள், ௧௦௪௨

எனவும் வரும் திருக்குறள்களானும் உணர்க.

ஈதல் முதலிய நல்லறம் பல செய்தார்க்கன்றித் துறக்கவுலக வாழ்வு கிடையாதாகலின் இன்மை மறுமை வாழ்க்கையையும் கெடுக்கும் என்பது கருத்து. (௩௯)

இளமை நிலையாமை

௪௦. வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக்
கோற்கண் ணெறிகாட்டக் கொல்கூற் றுழையதா
நாற்ப திகந்தா நரைத்தூதும் வந்ததினி
நீத்த றுணிவா நிலையா திளமையே.

(இ - ள்.) வேல்கண் மடவார் விழைவு ஒழிய-நெஞ்சமே வேல்போலும் கண்களையும் மடப்பத்தையும் உடைய மகளிர் நம்மை விரும்பாது புறக்கணிப்பவும்; யாம் விழைய - யாம்மட்டும் அம் மகளிரை விரும்பவும்; கோல்கண் நெறிகாட்ட-கோலாகிய கண்ணே இனி நமக்கு வழிகாட்டும் கருவியாகவும்; கொல் கூற்று உழையது ஆம்-கொல்கின்ற கூற்றுவனிடத்திற்கு அணுமையதாமே; நாற்பது இகந்தாம்-நாற்பதியாட்டை யகவையினையும் கடந்தொழிந்தோம்; நரைத்தூதும் வந்தது-சாக்காட்டினை யறிவிக்கின்ற மறலியின் தூதாகிய நரையும் வந்துற்றது; இளமை நிலையாது-இளமை நிலைத்திராதென் றுணர்ந்து கொண்டோமன்றோ?; இனி நீத்தல் துணிவாம்-இனியேனும் துறந்துபோதலைத் துணிவோமாக! என்பதாம்.

(வி - ம்.) இது மெய்யுணர்வுடையோனொருவன் தன்னெஞ்சிற்குக் கூறியது. வேற்கண் மடவார் நம்மை விழையாராகவும் யாம் மட்டும் அவரை விழைதல் நாணுத்தகவுடைத் தென்பான், மடவார் விழைவு ஒழிய யாம் விழைய நாற்பது இகந்தாம் என்றான். கட்பொறி ஒளியிழந்து போயின வென்பான் கோற்கண் நெறிகாட்ட என்றான். நாற்பது-நாற்பதியாட்டை யகவை. நரை சாவினை முற்பட வுணர்த்துமோர் அறிகுறியாகலின், அதனை மறலியின் தூதுவனாக உருவகித்தான். யாம் சாவினை மிகவும் நெருங்கி வந்துவிட்டோம் என்றிரங்குவான், கொல்கூற் றுழையதாம் நாற்பது என்றான். நீத்தல்-துறந்து போதல். இனி இதனோடு,

''மைதிரண்ட வார்குழன்மேல் வண்டார்ப்ப
மல்லிகைமேன் மாலை சூடிக்
கைதிரண்ட வேலேந்திக் காமன்போற்
காரிகையார் மருவச் சென்றார்

ஐதிரண்டு கண்டங் குரைப்பவோர்
தண்டூன்றி அறிவிற் றள்ளி
நெய்திரண்டாற் போலுமிழ்ந்து நிற்கு
மிளமையோ நிலையா தேகாண்!''

எனவரும் சீவகசிந்தாமணியும் (உகஉக),

''நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று'' —நீதிநெறி விளக்கம், க

எனவரும் குமரகுருபரவடிகளார் மணிமொழியும் நினைவு கூரற்பாலன.

இது நெஞ்சிற்குக் கூறும் வாய்பாட்டால், இவ்வாறு அறமுதலிய வற்றை அறிதலின்றிப் பயன்படாமல் மூப்பதற்கு முன்பே இளமைப் பருவத்தே தவமும் தானமும் நிகழ்த்தி உய்வீராக! வென்று செவியறிவுறுத்தபடியாம். (௪0)

இதுவுமது

௪க. இளமையு நிலையாவா லின்பமு நின்றவல்ல
வளமையு மஃதேபோல் வைகலுந் துன்பவெள்ள
முளவென நினையாதே செல்கதிக் கென்றுமென்றும்
விளைநில முழுவார்போல் வித்துநீர் செய்துகொண்மின்.

(இ - ள்.) இளமையும் நிலையா-இன்ப நுகர்தற்குரிய இளமைப் பருவமும் நிலைத்திராது; (நீரிற் குமிழிபோல அழிந்துபோம்); இன்பமும் நின்ற அல்ல-நுகரும் இன்பங்கள் தாமும் நிலைத்து நிற்கு மியல்புடையனவல்ல; வளமையும் அஃதேபோல்-அவ்வின்பத்திற் குக் காரணமான செல்வங்களும் நிற்பனவல்ல; வைகலுந் துன்ப வெள்ளம்-அவ்வின்பம் நிலையாததோடு வாழ்க்கையின்கண் நாடோ றும் துன்பமே மிகுதியாகவும் உள்ளன; உள என நினையாதே - ஆதலால் இளமையும் இன்பமும் வளமையும் நம்பாலுளவென்று செம்மாந்திராமல்; விளைநிலம் உழுவார் போல்-விளைகின்ற நன்செயை உழுகின்றவேளாண்மாக்கள் எதிரியாண்டிற்கு அவ்விளைவி னின்று விதை கொள்ளுமாறு போலே; நீர்-நீவிரும்; செல்கதிக்கு என்றும் என்றும் - நாடோறும் இனிச்சென்று பிறக்கின்ற பிறப் பிற்கு ஆக்கமாக; வித்து- அறமாகிய வித்தினை; வீழ்நாள் படாமல்; செய்து கொண்மின்-செய்து கொள்ளக் கடவீர்! என்பதாம்.

(வி - டு.) நீயிரிளமை முதலியவற்றால் மகிழ்ந்து வாளா விருந்து விடாமல் இப்பொழுதே அறமுதலியன செய்து செல்லுந் தேயத்துக்கு ஆக்கஞ் செய்து கொண்மின். அவ்விளமை முதலியன அழிந்துவிடும் என்றவாறு.

இதனோடு,

"இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்"

—சிலப், ௩௦ - ௨௦௦

எனவரும் இளங்கோவடிகளார் செவியறிவுறூஉவும் நினைக.

இன்னும்,

"வேற்றுவர் இல்லா நுமருக்கே
செல்லினும் வெகுண்டீர் போல
ஆற்றுணக் கொள்ளா தடிபுறத்து
வைப்பிரே யல்லிர் போலும்
கூற்றங் கொண்டோடத் தமியே
கொடுநெறிக்கட் செல்லும் போழ்தின்
ஆற்றுணக் கொள்ளீர் அழகலா
லறிவொன்று மிலிரே போலும்" —சீவக, ௨௯௩௦

எனவருந் திருத்தக்க முனிவர் செய்யுளும் குறிக்கொள்க. (௪௧)

துறவு

௪௨. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்புமிகை யவையுள் வழிப்
பற்றா வினையாய்ப் பலபல யோனிக
ளற்றா யுழலு மறுத்தற் கரிதே.

(இ-ள்.) பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு-பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்கு; உடம்பும் மிகை-அதற்குக் கருவியாகிய உடம்புதானும் மிகையாம்; மற்றும் தொடர்ப்பாடு எவன்-அங்ஙனமானபின் மேலே இவையில்லனவும் சில தொடர்ப்பாடு உளவாதல் என்னும்; அவை உள்வழி-அவையிற்றின் தொடர்ப்பாடுளவாய விடத்து; பற்றா வினையாய்-மேலும் மேலும் அவற்றின்பாற் பற்றுண்டாகி அப்பற்றுக் காரணமாக வினைகளுமுண்டாகி; பலம் பல யோனிகள்-உயிர்தானும் அவ் வினைகள் காரணமாக எண்ணிறந்த பிறவிகளிடத்தும்; அற்றா ஆய்-முன்போலவே பிறந்து; உழலும்-இன்ப துன்பங்களிற் கிடந்துழலா நிற்கும்; அறுத்தற்கு அரிது-இவ்வாறு வளர்ந்துவிட்ட பற்றினை மீண்டும் அறுத்தற்கு இயலாது கண்டீர்! என்பதாம்.

(வி-ம்.) இச்செய்யுளில், 'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை" (குறள், ௩௪௫) என்னும் திருக்குறள் முழுதும் அமைந்திருத்தலுணர்க.

இனி, இத் திருக்குறட்கு, விளக்கம்போல எஞ்சிய அடிகளும் அமைந்திருத்தலுமுணர்க. இனி, இத் திருக்குறட்கு ஆசிரியர் பரிமேலழகர் கூறுகின்ற விளக்கவுரையும் ஈண்டுக் கருதற்பாற்று. அது வருமாறு :—

"உடம்பென்ற பொதுமையான் உருவுடம்பும் அருவுடம்பும் கொள்ளப்படும்; அவற்றுள் அருவுடம்பாவது : பத்துவகை யிந்திரிய வுணர்வோடும் ஐவகை வாயுக்களோடும் காம வினைவிளைவுகளோடும் கூடிய மனம் இது நுண்ணுடம் பெனவும்படும். இதன் கட் பற்று நிலையாமை யுணர்ந்த துணையான் விடாமையின் விடுதற்குபாயம் முன்னர்க் கூறுப. இவ் வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை யுணர்ந்து இவற்றை கட்டினை இறைப் பொழுதும் பொறாது வீட்டின்கண் விரைதலின் 'உடம்பு மிகை' யென்றார். இன்பத் துன்பங்களான் உயிரோடு ஒற்றுமை யெய்துதலின், இவ்வுடம்புகளும் யானெனப்படும். இதனால் அகப்பற்று விடுதல் கூறப்பட்டது" எனவரும். (௬௨)

இதுவுமது

௬௩. உற்ற வுதிர மொழிப்பான் கலிங்கத்தை
மற்றது தோய்த்துக் கழுவுத லென்னொக்கும்
பற்றி னாகிய பாவத்தை மீட்டும்
பற்றொடு நின்று பறைக்குறு மாறே.

(இ - ள்.) பற்றினன் ஆகிய பாவத்தை மீட்டும் பற்றொடு நின்று பறைக்குறும் ஆறு-ஒருவன் தனது பற்றுடைமை காரணமாக எய்திய தீவினையை மீண்டும் அப் பற்றுடையனாகவே நின்று தேய்த்தொழிக்கும் முயற்சி; என் ஒக்கும்-எதனை ஒக்கும் என்று வினவின்; உற்ற உதிரம் ஒழிப்பான்-ஒருவன் தன்னுடையிலுற்ற குருதிக் கறையினைப் போக்குவதற்கு; கலிங்கத்தை-அந்த ஆடையினை மீண்டும்; அதுதோய்த்துக் கழுவுதல் ஒக்கும்-அந்தக் குருதியிலேயே போகட்டுக் கழுவுவதனையே ஒப்பதாம் என்பதாம்.

(வி - ம்.) பற்றுடைமையாலுற்ற துன்பம் போக்க முயல்பவர் மீண்டும் வேறு பொருள்களைப் பற்றுமாற்றாற் போக்க முற்படுதல் ஆடையிற்பட்ட குருதிக் கறையைப் போக்குபவர் மீண்டும் அவ்வாடையைக் குருதியிலேயே தோய்ப்பது போன்று பேதைமையுடைத்து ஆதலால், பற்றறுப்போர் விடல்வேண்டும் வேண்டியதெல்லாம் ஒருங்கு என்றவாறு.

இதனை,

"இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து" —குறள், ௩௪௪

என்பதனானும் உணர்க. மேலும், பற்றினைப் பற்றவார்க்குத் துன்பங்கள் இடையறாது வரும் என்பதனை,

"பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு" —குறள், ௩௪௭

என்பதனானும் உணர்க. (௬௩)

## இதுவுமது

௪௪. தானஞ் செய்திலந் தவமு மன்னதே
கானந் தோய்நில விற்கழி வெய்தின
நானந் தோய்குழ னமக்குய்த லுண்டோ
மானந் தீர்ந்தவர் மாற்றம்பொய் யல்லவால்.

(இ - ள்.) நானம் தோய்குழல் - புழுகணிந்த கூந்தலையுடைய நங்காய்!; தானம் செய்திலம் - யாமோ கழிந்த நம் வாழ்நாளிலே ஈதல் முதலிய நல்லறங்களைச் செய்திலேம்; தவமும் அன்னது - முதுமைப் பருவமெய்தியும் தவவொழுக்கமும் மேற்கொண்டிலேம்; மானம் தீர்ந்தவர் - மாண்பிறந்த மானமுதலிய குற்றங்களினின்றும் விலகிய சான்றோர்; மாற்றம் பொய்யல்ல - கூறிய அந் நல்லறங்கள் பொய்ம்மையுடையன அல்லவே; கானம் தோய் நிலவில் கழிவெய்தினம் - அந்தோ அரிது பெறுமிம் மக்கட் பிறப்பில் நமக்குற்ற வாழ்நாள் எல்லாம் காட்டில் எறித்த நிலாப் போல வறிதே கழியப் பெற்றேம்; நமக்கு உய்தல் உண்டோ - இனி நமக்கு உய்தியுண்டாகுமோ என்செய்கேம்! என்பதாம்.

(வி - ம்.) இது வாழ்நாளிற் பெரும்பகுதியைக் காமநுகர்ச்சியிலே கழித்துக் காமஞ் சான்ற கடைக்கோட்காலைத் தன் வாழ்க்கைத் துணைவியை நோக்கி ஒரு காமுகன் இரங்கிக் கூறியதென்க.

இல்லிருந்து வாழ்ந்தேம் ஆயினும் அறஞ் செய்திலேம். முதுமையும் வந்து பெரும்பகுதி கழிந்தது. தவமும் செய்திலேம். இப்பொழுதோ இன்ப நுகரும் ஆற்றலும் இழந்தேம். சான்றோர் கூறிய நல்லறம் பொய்யன்று. அங்ஙனமாகவும் அவற்றையும் மதித்தொழுகினேமல்லேம். சாவு அணுகிவிட்டது; இனி யாம் என் செய்தும். நமக்கு எய்திய வாழ்நாள் காட்டில் பொழிந்த நிலாவொளிபோலப் பயனற்றதாய் முடிந்தது என்று இரங்கியபடியாம்.

இவனுடைய இவ்விரங்கன் மொழிகளோடு,

"நட்புநா ரற்றன நல்லாரு மஃகினர்
அற்புத் தளையு மவிழ்ந்தன—உட்காணாய்
வாழ்தலி னூதிய மென்னுண்டாம் வந்ததே
ஆழ்கலத் தன்ன கலி'' (நாலடி, ௧௨)

எனவரும் வெண்பாவையும் நினைக.

நிலவிற்கு : உருபுமயக்கம். மானந்தீர் கொள்கையார் என்றும் பாடம்.

இனி நல்லோர் கூறிய நல்லறங் கொள்ளாத வாழ்நாள் எல்லாம் வீணாக்கி மடிந்து நரகிற் கிடந்துழல்வோர் கூற்றாக வருகின்ற,

''பெண்டிர் மக்கள் கிளைஞ ரிவர் பின்னுக் குதவி யென்றெண்ணிக்
கண்ட ரறத்தை விட்டவராற் கட்டன்பட் டிறுத்தோ மென்பர்சிலர்
உண்ட ருடுத்தீர் சுற்றத்தீ ருற்ற வேளைக் கொருவரும் வந்
தண்ட ரந்தோ வும்மை நம்பி யான திதுவோ வென்பர் சிலர்''

எனவும்,

''தேடிப் பொருளைச் சிறுதொழிற்கே
செலுத்தி யுணர்ச்சி தெரியாமற்
பாடிப் பதருக் கிறைத்ததெல்லாம்
பலித்த தெமக்கீங் கென்பர்சிலர்
கேடிப் படிவந் தெமைச்சூழக்
கெடுத்த பாவி யுலகிலின்ன
நாடிப் பிறக்க விடினுமங்ங
னுடோ மென்று சிலர்சொல்வார்''

எனவும்,

'என்று மிறவோ மென்றிருந்தோ
மிறந்து படுவ தீதறிந்தா
லன்று படைத்த பொருளையன்றே
யருள்வோ மறையோர்க் கென்பர்சிலர்
சென்று வரவாங் கெம்மையின்னஞ்
செலுத்திற் புதைத்த திரவியத்தை
யொன்று மொழியா தறம்புரிந்திங்
கோடி வருவோ மென்பர்சிலர்''

எனவும்,

''பிறந்த வுடனே துறந்துசுத்தப்
பிரம முணர்ந்து பிறப்பதனை
மறந்திந் நரகத் தெய்தாமை
வருமோ நமக்கு மென்பர்சிலர்
இறந்து நிரையத் தழுந்தியிட
ரிவ்வா றுழப்ப தறியாமற்
சிறந்த விவேகர் பெருமான்றன்
செயலைத் தவிர்ந்தோ மென்பர்சிலர்''

எனவும் வருகின்ற கையறுநிலைச் செய்யுள்களும் விளைவித் கொள்ளற் பாலனவாம்; (மெஞ்ஞான விளக்கம்-கo-க-ச-இ.) (சச)

## மெய்யுணர்தல்

௪௦. பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி
ஒருவந்த முள்ளத் துவத்த லொழிமின்
வெருவந்த துன்பம் விடுக்குந் திறலோ
னொருவ னுலகிற் குளனென்னு மாறே.

(இ - ள்.) வெருவந்த துன்பம் - அச்சம் வருதற்குக் காரணமான துன்பத்தினின்றும்; விடுக்கும் திறலோன் ஒருவன் உளன் என்னும் ஆறு-விடுவிக்கும் பேராற்றலுடைய இறைவன் ஒருவனே உளன் என்னும் மெய்யுணர்வு பெறுமின்; பலர் என்று எண்ணி—உலகிற்கு இறைவராவார் பலர் என்று எண்ணியும்; பருவந்து—துன்பம் வந்துற்ற காலத்தே இவை பிறரால் வந்ததென்று கருதி வருந்தி; உள்ளத்து உவத்தல்-இன்பம் வந்த காலத்து இவை யாம் தேட வந்தனவென்று கருதி உள்ளத்தே மகிழ்ந்தும் வாழ்வதனை; ஒருவந்தம் ஒழிமின்-ஒருதலையாக விட்டொழிவீராக என்பதாம்.

(வி - ம்.) உலகிலுயிர்களைத் துன்பத்தினின்றும் விடுதலை செய்யும் கடவுள் ஒருவனே என்றுணர்மின்! பலர் உளர் என்று கருதி வருந்தாதொழிமின். இன்பம் வந்தகாலத்தே களிப்புறுதொழிமின். எல்லாம் ஊழின் செயலென மெய்யுணர்வோடு வாழக்கடவீர்! என்பதாம்.

இன்பதுன்பங்கள் ஊழால் வருவன ஆதலின் அவை வருங்காலத்து மகிழ்தலும் வருந்துதலும் பேதைமை என்பது கருத்து. இறைவன் ஒருவனே உளன்; அவனடி பற்றினவரே இன்ப மெய்துவர்; இறைவர் பலருளர் என்று கருதி, அவ்வழியிலுழல்வோர் துன்பமேயுறுவர் என்பார், சாலப் பலரென்றெண்ணி பருவந்து என்றார். பருவந்தும் உழத்தலும் எனல் வேண்டிய உம்மைகள் தொக்கன. ஒருவந்தம்-ஒருதலையாக.

இனி இச் செய்யுளோடு,

"யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்

பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே''

எனவரும் கணியன் பூங்குன்றனார் செய்யுளும் கருத்தட் பதித்தற் பாலது. (௬௭)

பழவினை

௬௮. உய்த்தொன்றி யேர்தந் துழவுழு தாற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குற லென்னொக்கும்
மெய்த்தவ மில்லான் பொருளொடு போகங்கட்
கெய்த்துழந் தேதா னிடர்ப்படு மாறே.

(இ - ள்.) மெய்த்தவம் இல்லான் - முற்பிறப்பிலே செய்த வாய்மையான தவத்தினை இல்லாதவன்; பொருளொடு போகங்கட்கு-செல்வம் பெறுதற்கும் அவற்றானின்பம் நுகருதற்கும்; உழந்து எய்த்து-பெரிதும் முயன்று இளைத்து; இடர்ப்படும் ஆறு - துன்புறும் வகை; என் ஒக்கும் (என்னின்) - எதனை ஒக்கும் என்னின்; வித்து இன்றி-முற்படச் சேர்த்துக் கொள்ளற் பொன்ற விதை சிறிதுமில்லாமலே; ஏர் தந்து-உழவெருது கலப்பை முதலிய கருவிகளைக் கொணர்ந்து; உழவு ஒன்றி-உழவுத் தொழிலிலே பொருந்தி; உய்த்து-எருதுகளைச் செலுத்தி; ஆற்றவும் உழுது-மிகவும் ஆழமாக உழுது; பைங்கூழ் விளைக்குறல்-பசிய பயிரை விளைக்க முயல்வதனையே ஒக்கும் என்பதாம்.

(வி - ம்.) பொருளும் போகமும் முற்செய் தவமுடையார்க்கே ஆகும். அத் தவமில்லாதார் அவற்றைப் பெற முயல்வது வீணாம் என்றவாறு. எனவே, வீடு பெறுதற்கன்றி இம்மை வாழ்விற்கும் தவமே காரணம் ஆகும். ஆதலின், எல்லோரும் தவவொழுக்கம் மேற் கொள்ளல் வேண்டும் என்றாராயிற்று.

இதனை,

''ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்'' —குறள், உ௬௪

எனவும்,

''வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்'' —குறள், உ௬௫

எனவும்,

''இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்'' —குறள், உ௭0

எனவும், வருந் திருக்குறள்களானும்,

''மேலைத் தவத்தளவே யாகுந் தான்பெற்ற செல்வம்''

என்பதனானுமுணர்க. (௬௮)

பொருண் மாண்பு

௭௯. குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைக ளழிபசி தீர்க்கும்
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருள்தரப் புன்கண்மை யுண்டோ.

(இ - ள்.) குலந்தரும்-பொருளானது மக்களுக்கு உயர்ந்த குடிப்பெருமையை யுண்டாக்கும்; கல்வி கொணர்ந்து முடிக்கும்-கல்விச் செல்வத்தைப் பிற விடங்களினின்று கொடுவந்து நிறைவுறச் செய்யும்; அலந்த கிளைகள் அழிபசி தீர்க்கும்-வறுமையானலிந்த தம் சுற்றத்தாருடைய மிக்க பசியைத் தீர்த்துய்யக் கொள்ளும்; ஆதலாலே, நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகி-நிலம் பிளந்து போகும்படி வெப்பமுற்ற நெடிய பாலை நிலத்தினைக் கடந்து சென்றேனும்; புலம்பு இல் பொருள் தர-துயரின்மைக்குக் காரணமான பொருளை மாந்தர் ஈட்டிக் கொணரின்; புன்கண்மை உண்டோ-பின்னர் அவர்பால் துன்பம் உண்டாகுமோ? ஆகாது. ஆதலின் மாந்தர் அப் பொருளின் இத்தகைய சிறப்புகளை யுணர்ந்து அதனை நிரம்ப ஈட்டிக் கோடல் வேண்டும் என்பதாம்.

(வி - ம்.) பொருள் மாந்தர்க்கு உயர்குடிப் பெருமையைத் தரும்; அறிவுச் செல்வத்தையும் வரவழைத்துக் கொடுக்கும்; உற்றார் உறவினர் பசிப்பிணியைப் போக்கி அவரை யுய்விக்கும், ஆதலால் மாந்தர் பாலை நிலங்கடந்தும் திரைகடலோடியும் அப் பொருளை நிரம்ப ஈட்டுதல் வேண்டும் என்றவாறு.

பிறநாடுகளிற் சென்றும் பொருளீட்டல் வேண்டும் என்பார் நிலம்பக வெம்பிய நீள் சுரம் போகிப் புலம்பில் பொருள்தரப் புன்கண்மையுண்டோ என்றார். போகியும் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது. நீள்சுரம் போகி என்றமையால் திரைகடலோடியும் என்றும் கூறிக்கொள்க. இப் பொருண் மாண்பிற்கு,

"இம்மியன நுண்பொருள்க ளீட்டிநிதி யாக்கிக்
கம்மியரு மூவர்கவி ரேடைநுதல் சூட்டி
அம்மிதந் தாழ்ந்துகரை விழ்ந்ததறஞ் சால்தென்
றும்மைவினை நொந்துபுலந் தூடலுணர் வன்றே"

எனவும்,

"உள்ளமுடை யான்முயற்சி செய்யவொரு நாளே
வெள்ளநிதி வீழும்வினை யாததனி னில்லை
தொள்ளையுணர் வின்னவர்கள் சொல்லிமடி கிற்பின்
எள்ளுநர்கட் கேக்கழுத்தம் போலவினி தன்றே"

எனவும்,

"செய்கபொருள் யாருஞ் செறுவாரைச் செறுகிற்கும்
எஃகுபிறி தில்லையிருந் தேயுயிரு முண்ணும்
ஐயமிலை யின்பமற னேடவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருண்மற் றல்லபிற பொருளே"

எனவும்,

"தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன
ஓங்குகுல நையவத னுட்பிறந்த வீரர்
தாங்கல்கட னாகுந்தலை சாய்க்கவரு தீச்சொல்
நீங்கன்மட வார்கள்கட னென்றெழுந்து போந்தான்"

எனவரும் சிதத்தன் நல்லுரைகளையும் இதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர்,

"சிதத்தன் தான் போய்ப் பொருள்தரக் கருதினான்; அங்ஙனம் கருதிக் கம்பியருங் களிறேறுவர்! ஆதலால் முயற்சியே நன்றென்று கருதாது வாழாதார் வாழக் காண்டலின் முயற்சி வேண்டா அறமே யமையுமென்று கருதி முற்பிறப்பில் நல்வினை செய்யப் பெற்றிலேமென்று நொந்து அம் முயற்சியை வெறுத்துக் கலாய்த்திருத்தல் அறிவன்று; அதுவேயுமன்றி உள்ளமுடையான் முயற்சியைச் செய்ய ஒருநாளே விதி திரளும்; அவ் விதியாலே எல்லாத் துப்புரவுகளுமுளவாம்; அங்ஙனம் எல்லாமாகின்ற முயற்சியைவிட்டுப் புரைபட்ட உணர்வினவர்கள், வருவது இடைத்தாங்காதென்னுஞ் சொல்லான் மடிந்திருப்பின், அவ்விருப்புப் பகைவர்க்கு ஒருதலை எடுப்புப் பெற்றாற் போல இனிதாயிருக்கும். அங்ஙனம் அவர் தலையெடாதபடி எல்லாரும் பொருளைத் தேடுக; தேடினாற் பகைவரைக் கொல்லும் படை அதனை யொழியவில்லை. தான் அவரிடத்திருந்தேயும் பகைவரைக் கொல்லும், அதுவன்றித் தானுளவாக இன்பத்திற்கு ஐயமில்லை ஆதலின், அறத்தோடே முற்கூறியவற்றையும் உண்டாக்கும் மெய்யாகிய பொருளே நன்கு மதிக்கும் பொருள். ஒழிந்த பொருள் நன்கு மதிக்கும் பொருளல்ல. ஆதலின், இப் பொருளைக் கொண்டு தம் குலம் நைகிறவளவிலே ஆலமரத்தின் வீழ்போலத் தீச்சொற் பிறவாமற் றங்குலத்தைத் தாங்கல் அதனுட் பிறந்தவருடைய கடனாகும். தங் குலத்தைத் தாங்காது போதல் பேதையரது கடனாகும். ஆதலால் யானும் முயன்று பொருள்தேடி என் குலத்தைத் தாங்குவேனென்று கூறி எழுந்திருந்து பண்டசாலையேறப் போந்தானென்க." என வகுத்துள்ள நல்லுரையையும் நனி நோக்குக.

இனி, "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்பதுபற்றிச் செல்வம் அலர்ந்த கிளைகள் அழிபசி தீர்க்கும் என்றார். புலம்பில் பொருள் தரப் புன்கண் உண்டோ என்பதனை,

"ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு" —குறள், ௭௬௦

எனவருந் திருக்குறளானும்,

"அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்

புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்''

(கலி - ௧௧)

எனவரும் கலியானுமுணர்க.

இனி இன்பத்தினும் அறமே பெரிதென நந்தமிழகத்து இளைஞர் பண்டைக்காலத்து உயிரன்ன தங் காதலிமாரையும் பிரிந்துபோய் நிலம்பக வெம்பிய நீள்சுரம்போகிப் புலம்பில் பொருள்தரும் வழக்கமுடையராயிருந்தனர் என்பதனை,

''இடுமுள் நெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை யாராற் றறுசுனை முற்றி
யுடங்குநீர் வேட்ட வுடம்புயங் கியானை
கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேருகச் சாரச் சாரலோடி
நெறிமயக் குற்ற நிரப்பாநீ டத்தஞ்
சிறுநனி நீதுஞ்சி யேற்பினு மஞ்சு
நறுநுத னீத்துப் பொருள்வயிற் செல்வோ
யுரனுடை யுள்ளத்தை செய்பொருள் முற்றிய
வளமையா னும் பொருளிது வென்பாய்''

எனவரும் கலியானுமுணர்க; (௧௨). (௪௭)

நட்பு

௪அ. கெட்டே மிதுவெந் நிலையென்று சார்தற்கண்
நட்டவ ரல்லார் நனிமிகு பவர்சுற்றம்
பெட்டது சொல்லிப் பெரிதிகழ்ந் தாற்றவு
மெட்டவந் தோரிடத் தேகி நிற்பவே.

(இ - ள்.) கெட்டேம் இது எம் நிலை என்று சார்தற்கண் - ஒருவர் தம் கைப் பொருளிழந்துழி வறுமையுற்று யாம் பெரிதும் கெட்டொழிந்தேம் இப்பொழுது எம்முடைய நிலைமை பெரிதும் இத்தகைய இன்னாமையுடைய வறுமை நிலை கண்டீர் என்று சொல்லி ஏனையோர்பாற் செல்லுமிடத்தே; நட்டவர் அல்லார் - வாய்மையாக நட்புச் செய்துள்ளவரையன்றி ஏனையராகிய; நனி மிகு சுற்றம்-மிக மிக நெருங்கிய சுற்றத்தார் தாமும்; பெட்டது சொல்லி-தாம் விரும்பிய குறிப்பு மொழி கூறி; ஆற்றவும் எட்டவந்து-மிகவும் தொலைவிலே சென்று; ஓரிடத்தே ஏகி-ஓரிடத்தே தம்முட் கூடி; பெரிது இகழ்ந்து நிற்ப-மிகவும் இகழ்திருப்பர் என்பதாம்.

(வி - ம்.) நட்டவரும் அல்லாரும் சுற்றமும் என எண்ணும்மை கொடுத்து நட்டவரும் எதிலரும் சுற்றத்தாரும் என ஓதினும் ஆம் - நட்டவர் அல்லார் என ஓதி இச் செய்யுள் நட்பின் சிறப்பினைக் கூறுவதாகக் கொள்க.

இனி, இதனை,

"இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு" —குறள், ௭௫௨

என்னும் திருக்குறளானும்,

"உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போற்
றொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த்
திரிதருங் காலத்துந் தீதிலி ரோவென்
றுரைதருவா ரிவ்வுலகத் தில்" —நாலடி, ௨௮௪

எனவரும் நாலடியானும்,

"இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா—என்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற" —நீதிநெறி விளக்கம், ௧௧

எனவரும் குமரகுருபரவடிகளார் மெய்ம்மொழியானும்,

"கல்லானே யானலுங் கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்"

எனவரும் நல்வழியானும் உணர்க. (௬௮)

பேதைமை

௬௯. தெண்ணீர் பரந்து திசைதொறும் போய்க்கெட்ட
எண்ணெய்கொண் டீட்டற் கிவறுத லென்னெக்கும்
பெண்மனம் பேதித் தொருப்படுப்பெ னென்னு
மெண்ணி லொருவ னியல்பெண்ணு மாறே.

(இ - ள்.) பெண்மனம் பேதித்து - பெண்ணினது மனத்திலவ்பினை மாற்றி; ஒருப்படுப்பென் என்னும் - ஒருமைப்படுத்துவேன் என்று கூறுகின்ற; எண் இல் ஒருவன் - ஆராய்ச்சியில்லாத மடவோனுடைய; இயல்பு எண்ணும் ஆறு - தன்மையை நினையுங்கால்; என்னெக்கும் - அம் முயற்சி எதனை ஒக்குமெனின்; தெண்ணீர் பரந்து திசைதொறும் போய்க்கெட்ட - தெளிந்த நீரிலே

வ.—5

பெய்யப்பட்டு நான்கு திசைகளினும் பரவிச் சென்று அழிந்து போன; எண்ணெய் கொண்டு ஈட்டற்கு இவறுதல்-எண்ணெயை மீண்டும் ஒருசேரக் கொண்டுவந்து சேர்த்தற்கு அவாவுதலையே ஒக்கும் என்பதாம்.

(வி - ம்.) பெண்ணின் மனம் இயல்பாகவே பன்முகப்பட்டுச் செல்வதாம். அதனை ஒருமுகப்படுத்த முயலுதல் நீரிற் பெய்யப்பட்டுத் திசையெலாம் சிதறிப்போன எண்ணெயை மீண்டும் ஒருசேரக் கூட்டிக் கைக்கோடற்கு விரும்புவது போன்றதொரு பேதைமைத்து என்றவாறு.

பெண்ணின் மனம் ஒருமுகப் படாதது என்னுமிதனை,

"ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்" —நீதிநெறிவிளக்கம், ௮௨

என்பதனானும்,

"அன்புநா லாக வின்சொ லலர்தொடுத் தமைத்த காத
லின்பஞ்செய் காமச் சாந்திற் கைபுனைந் தேற்ற மாலை
நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினு நங்கை மார்க்குப்
பின்செனும் பிறர்க ணுள்ளம் பிணையனார்க் கடிய தன்றே"

எனவும்,

"பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில
பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடைய வல்ல வோராயிர
மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கையிட்டா லிந்திரன்
மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற்றாற் போன்
மெலிந்துபின் னிற்கு மன்றே"

எனவும் வரும் சிந்தாமணியானும் (௧௫௯௬ - ௭.)

"மாரியுந் திருவு மகளிர் மனமுந்
தக்குழி நில்லாது பட்டுழிப் படும்"
—பெருங்கதை, ௧ - ௩௫ : ௧௯௬ - ௭.

எனவரும் பெருங்கதையானுமுணர்க. இன்னும்,

"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்" —குறள், ௮௨௨

எனத் திருவள்ளுவனாரும் ஓதலும் இத் திருக்குறள் உரையின்கண் ஆசிரியர் பரிமேலழகரும், "அவர் மனம் வேறுபடுதல் பெண்மனம் பேதின் ஒருப்படுப்பெனென்றும் எண்ணிலொருவன் என்பதனானும் உணர்க" என இவ் வளையாபதிச் செய்யுளையே மேற்கோளாக எடுத்துக்காட்டுதலும் காண்க. (௪௯)

போது மகளிரியல்பு

௫௦. நீண்முகை கையாற் கிழித்தது மோக்குறு
மாண்வினைப் பாவை மறைநின்று கேட்குறின்
பேணலு மன்பும் பிறந்துழிப் பேதுசெய்
தாணைப் பெண்ணைய வணைக்குறு மாறே.

(இ-ள்.) நீள் முகை - தலைவனே! நீண்ட எற்றரும்பினைக் கொய்து; கையால் கிழித்து - அஃது அலராமையாலே தன் கையாலதனைக் கிழித்து; அது மோக்குறும் - அதன்கண் மணமில்லாதிருக்கவும் அதனை மணமுடைய மலர்போல மோக்கின்ற; மாண் வினைப் பாவை மறை-மாண்புடைய வினைத்திறமமைந்த பாவை போல்வாளாகிய இவள் செய்கையின் கருத்து யாதெனின்; நின்று கேட்குறின் - அவள் செயலைக் கண்டு நின்று நீ எம்மை வினவுதியாயின் கூறுதும்; பெண் - (அச் செயல்) பெண்ணானவள்; பேணலும் - தகுதியில்லாதாரை விரும்புதலும்; அன்பும் - அவர் விரும்பாத வழியும் அவரை அவாவுதலும், பிறந்துழி-இவ்வாறு பேணலும் அவாவும் தம்பாற் றோன்றியவழி; ஆணை-அவ்வாடவனை; பேது செய்து-மனமாற்றஞ் செய்து; அணைக்குறும் ஆறு-அவனைத் தழுவிக்கொள்ளும் செயற்கு இஃதறிகுறியாம் என்பதாம்.

(வி-ம்.) இஃது அரும்பினைக் கொய்து மோக்குமொரு மகளைக் கண்ட தலைவன் அச் செயலின் குறிப்பு யாது எனப் பாங்கனை வினவியவழி வினவப்பட்டான் தற்குறிப்பேற்றமாக அச் செயலின் குறிப்புக் கூறியபடியாம். இனி வளையாபதி என்னும் காப்பியத்தின்கண் இங்ஙனம் ஒரு நிகழ்ச்சி உளது போலும் என்றூகித்தலும் மிகையன்று.

எற்றரும்பு மணமில்லாததாகவும் நுகர்தற்குத் தகுதியில்லாததாகவும் இருக்க அம் மகள் அதனைக் கிள்ளிக் கிழித்து மோக்குமிது அம் மகளிர் தகுதியில்லாதவரையும் தம்மை விரும்பாதவரையும் காமுற்று அவரைத் தழுவுதற்கு ஏற்ற உபாயங்களைச் செய்து வலிந்து தழுவுவதனைக் குறிக்கின்றது எனத் தீய மகளிரின் இயல்பினைக் கூறியபடியாம்.

தீய மகளிர் இயல்பிங்ஙனமாதலைச் சூர்ப்பநகை முதலியோர்பால் காண்க. (௫௦)

இதுவுமது

௫௧. யாறொடி யாழ்ஞெலி கோனில வார்கொடிப்
பாறொடு பத்தினி மாபோ லொழுகென்று
கூறினள் கூத்தி முதிர்ந்தாள் மகட்கிவை
வேறோ ரிடத்து வெளிப்பட னன்றும்.

(இ - ள்.) முதிர்ந்தாள் கூத்தி - அகவை முதிர்ந்தவளாகிய கணிகை யொருத்தி; மகட்கு - தன் மகளாகிய இளங்கணிகைக்குச் செவியறிவுறுப்பவள்; எடீ! யாறொடு யாழ் ஞெலிகோல் நிலவு ஆர் கொடி - யாறு போலவும் யாழ் போலவும் தீக்கடைகோல் போலவும் மலர் நிரம்பிய பூங்கொடி போலவும்; பாறொடு பத்தினி மா போல - மரக்கலம் போலவும் கற்புடை மகளிர் போலவும் விலங்குகள் போலவும்; ஒழுகு என்று - நின்பால் வருகின்ற காமுகரிடத்திலே நீ ஒழுகுவாயாக என்று; கூறினள் - அறிவுறுத்தினள்; இவை - இவ்வுவமைகளின் பொதுத்தன்மை; நன்று வேறு இடத்து வெளிப்படல் ஆம் - நன்றாக வேறோரிடத்து (விரிவுரையாற் கூறுதும்) ஆங்கு விளக்கமாகும் என்பதாம்.

(வி - ம்.) ஒரு கிழக்கணிகை தன் மகட்கு அறிவுரை கூறுபவள் எடீ! நீ நின்னை விரும்பி வருகின்ற காமுகரிடத்தே யாறுபோலவும் யாழ்போலவும் தீக்கடைகோல்போலவும் நிலவு போலவும் மரக்கலம் போலவும் கற்புடை மகளிர் போலவும் விலங்குகள் போலவும் நடந்துகொள்வாயாக என்று கூறினள்; அவ்வுவமைகளின் பொதுத்தன்மையை யாம் வேறிடத்தில் கூறுவேம்; அங்கு அவை நன்கு விளக்கமாகும் என்றவாறு. மேலே அவ்வுவமைகளை விரித்து விளம்புவர்.

ஞெலிகோல் - தீக்கடைகோல். பாறு - மரக்கலம். பாறு என்னும் சொல் மரக்கலம் என்னும் பொருளுமுடைத்தென்பது இவ்வாசிரியர் இதற்கு அப்பொருளே பிற் கூறுதலாற் பெறும். (௧௧)

பின்னும் இரண்டுவமைகள்

௧௨. ஆய்குரங் கஞ்சிறை வண்டினம் போல்கவென்று
பாயிர மின்றிப் பயிற்றி மொழிந்தனள்
மேவரும் வான்பொருள் தந்துநின் றோள்நம்பி
யாவ ரடைந்தவர்க் கவையும் புரைப.

(இ - ள்.) நின் தோள் நம்பி - என் மகளே! நின்னுடைய தோள்களைப் பெரிதும் விரும்பி; மேவு அரும் வான்பொருள் தந்து - பெறுதற்கரிய சிறந்த பொருள்களையும் வழங்கி; யாவர் - எந்தக் காமுகர்; அடைந்தவர்க்கு - நின்னை எய்தியவர் அவர்கட்கெல்லாம் நீ ஒழுகுதற்கு; ஆர் குரங்கு - மரங்களிலேறி இரையை ஆராய்கின்ற குரங்கும்; அம் சிறை வண்டு இனம் அவையும் புரைப - அழகிய சிறகுகளையுடைய அளிக்கூட்டமுமாகிய இவையும் உவமையாவனவேயாம்; போல்க - ஆதலால் அவற்றைப் போலவும் ஒழுகக் கடவாய்; என்று பாயிரம் இன்றிப் பயிற்றி மொழிந்தனள் - என்று இவற்றைப் பற்றிய முன்னுரை யாதும் கூறாமலே மிகவும் கூறுவாளாயினள் என்பதாம்.

(வி - ம்.) அத் தாயாகிய கூத்தி முற்கூறிய யாறு முதலியனவேயன்றிக் குரங்கும் வண்டினமுங்கூட நின்னொழுக்கத்திற்கு ஒப்பன ஆதலின் அவற்றைப் போலவும் ஒழுகு என்றாள் என்றவாறு.

இவ்வாறு உவமை மாத்திரமே குறிப்பாகக் கூறினள் பிறிதொன்றுங் கூறிற்றிலள் என்பார் பாயிரமின்றிப் பயிற்றி மொழிந்தனள் என்றார். இவற்றிற்கு இனி யாம் விளக்கங் கூறுதும் கேண்மின்! என்பது கருத்து.

இனி, நின்னை நயப்பார் பலருளராயினும் நீயோ பொருள் மிகுதியாக நினக்கு வழங்குவோரை மட்டுமே ஏற்றுக்கொள்க என்று குறிப்பாற் கூறுவாள், "மேவரும் வான்பொருள் தந்து நின் தோள் நம்பியாவர் அடைந்தவர்க்கு" என்று விதந்தோதினள்.

நம்பி—விரும்பி. என்னை? "நம்பு மேவும்நசையா கும்மே" (தொல்-உரி. கக.) என்பதனானும் அதற்கு அப் பொருளுண்மையறிக. தோள்: இடக்கரடக்கு (உ௨)

## கூத்தி கூறிய உவமைகட்கு விளக்கங் கூறல்

### க. ஆறு

௫௩. வாரி பெருகப் பெருகிய காதலை
வாரி சுருங்கச் சுருக்கி விடுதலின்
மாரி பெருகப் பெருகி யறவறும்
வார்புன லாற்றின் வகையும் புரைப.

(இ-ள்.) வாரி பெருகப் பெருகிய காதலை-இனி, கணிகையர் தம்மை விரும்பி வருகின்ற காமுகர் வழங்கும் பொருள் வரவு பெருகுந்துணையும் பெருகிய தம் காதலை; வாரி சுருங்கச் சுருக்கி விடுதலின் - அப் பொருள்வரவு குறையுமளவு குறைத்துப் பின் பொருள் வரவு நின்றவுடன் தங்காதலையும் துவர நீத்துவிடுதலாலே; மாரி பெருகப் பெருகி - மழைநீர் வரவு பெருகுந்துணையும் பெருகி; அற அறும் - அம் மழை நீர்வரவு அறவே அற்று அறுந்து விடுகின்ற; வார்புனல் ஆற்றின் வகையும் புரைப-நெடிய நீர் ஒழுகும் யாற்றினது தன்மையையும் நிகர்ப்பர் என்பதாம்.

(வி-ம்.) அம் முதுகூத்தி யாறுபோல ஒழுகுக என்றதன் கருத்து, யாறானது மழைநீர் வந்து புகுமளவும் பெருகி அது வறத்தலும் வறந்து போவதுபோல நீயும் நின்னை விரும்பும் காமுகர் நினக்குப் பொருள் மிகுதியாக வழங்குந்துணையும் மிகவும் காதலுடையாள் போன்று ஒழுகுக; அவர் பொருள் வழக்கம் குறையின் நீ நின் காதலையும் குறைத்துக்கொள்ளக் கடவை. பொருள் கொடாவிடின் நீயும் காதலியாது முகமாறி யொழுகக்கடவை என்பதாம் என்றவாறு. (௫௩)

### உ. யாழ்

௫௪. எங்ஙன மாகிய திப்பொரு ளப்பொருட்
கங்ஙன மாகிய வன்பின ராதலின்
எங்ஙனம் பட்டனன் பாண்மகன் பாண்மகற்
கங்ஙன மாகிய யாழும் புரைப.

(இ - ள்.) இப்பொருள் எங்ஙனம் ஆயேது-கணிகை மகளிர் தாம் விரும்புகின்ற இந்தப் பொருள் யாரிடத்தினின்றும் தமக்கு வருகின்றதோ?; அப்பொருட்கு - அந்தப் பொருட் பொருட்டாக; அங்ஙனம் ஆமெ அன்பினர் ஆதலின் - அப் பொருள் தருவாரிடத்து அன்பு காட்டும் இயல்பினராதலாலே; பாண்மகன் எங்ஙனம் பட்டனன் - தன்னையுடைய பாணன் எவ்விடத்தே இறந்து பட்டனனோ அப்பொழுதே; பாண்மகற்கு அங்ஙனம் ஆமெ - மற்றொரு பாணனுக்கு அவ்வாறே கருவியாகி விடுகின்ற; யாழும் புரைப-யாழையும் ஒப்பர்வர் என்பதாம்.

(வி - ம்.) யாழானது தன்னையுடையான் இறந்து பட்டுழி அவனோடு அழிந்துபடாமல் பின்னும் தன்பால் இசை தருகின்ற பிறனொரு பாண்மகனிடத்தே சேருதல் போன்று, கணிகையரும் தமக்குப் பொருள் வழங்கியவன் வறியவனாயவிடத்து அவன்பாலன்பு மாறி மற்றுமொரு பொருளுடையான்பாற் சேர்வர் என்றவாறு.

கணிகையாதலின் பாணனையும் யாழையும் உவமையாக எடுத்தனள், என்க. (௬௦)

௬. தீக்கடைகோல்

௫௫. கரணம்பல செய்து கையுற் றவர்கட்
கரண மெனுமில ராற்றிற் கலந்து
திரணி யுபாயத்திற் றிண்பொருள் கோடற்
கரணி ஞெலிகோ லமைவர வொப்ப.

(இ - ள்.) கை உற்றவர்க்கு - கணிகையர் தம்பாலெய்திய காமுகர் திறத்திலே; பல கரணம் செய்து - அவர் இன்புறு மாற்றாலே பல்வேறு செயல்களையும் செய்து, ஆற்றிற் கலந்து - அவர் விரும்பிய வழியிலே இயங்கி; எனும் அரணம் இலர் - அக்காமுகர்க்குச் சிறிதும் பாதுகாவல் ஆகாதவராய்; திண் பொருள் கோடற்கு - அவரது திண்ணிய பொருளைக் கைக்கொள்ளுமாற்றால் அவரை அழித்துவிடுதலாலே; திரணி உபாயத்தில் - சிறிய துய்யாகிய பஞ்சினை மெல்லக் கடைந்து செய்யுமொருபாயத்தாலே அதனகண் திணிந்த தீயினைக் கோடற்கு அப் பஞ்சினையே அழித்து விடுகின்ற; அரணிஞெலிகோல் - தீக்கடை கோலையே; அமைவர - நன்கு பொதுத்தன்மை பொருந்தி வரும்படி; ஒப்ப - ஒப்பாகுவர் என்பதாம்.

(வி - ம்.) திரணி-நொய்ய பொருள். துரும்பு பஞ்சு முதலியன. திரணியுபாயம்-தீப்பிறப்பிப்போர் நொய்ய துரும்பு முதலியவற்றைக் குழிப்பாண்டத்திட்டுக் கடையுமொருசெயல். இவர் கடையுங்கால்அத் துரும்புக்குநன்மைசெய்வார்போற் கடைகுவர். இங்ஙனம் கடையுமாற்றால் அத் துரும்பினுள் நன்னிதாக அடங்கியிருக்கும் தீயினை வெளிப்

படுப்பர். நீ வெளிப்படவே அத் தரும்பு அழிந் தொழியுமென்க. எனவே, கணிகைமகளிர் தம்மை விரும்பும் காமுகர் வழியின்று அவர்க் கிதஞ் செய்வார் போன்று செயல்கள் பலவற்றையும் செய்து அவர் கொண்டுள்ள பொருளனைத்தும் கைக்கொண்டுவிடுவர்; பொருளிழப் பாலே அக் காமுகர் அழிந்துபடுவர்; ஆதலால் கணிகையர் தீக்கடை கோலையே நிகர்ப்பர் என்றவாறு.

அரணம் எனும் இலர் என்றது - பாதுகாவல் சிறிதும் ஆதல் இலராய் என்றவாறு. அரணம் - பாதுகாவல். எனும் - சிறிதும். தின்பொருள் கோடற்கு என்பதனைப் பின்னுங் கூட்டுக.

கணிகையர் காமுகர்க்குப் பெரிதும் அரணமாவார் போன்றொழுகி னும் அங்ஙனம் அரணம் ஆதல் இலர். அவர் அழிவிற்கே காரணம் ஆவர் என்பதாம். தீக்கடைகோலும் கடையுங்கால் அதற்கு அரண மாவது போற்றோன்றி அழிவிற்கே காரணமாதலுணர்க. (௬௫)

## ௪. திங்கள்

௬௬. நாடொறு நாடொறு நந்திய காதலை
நாடொறு நாடொறு நய்ய ஒழுகலின்
நாடொறு நாடொறு நந்தி யுயர்வெய்தி
நாடொறுந் தேயு நகைமதி யொப்ப.

(இ - ள்.) நாள் தொறும் நாள் தொறும் நந்திய காதலை — இனிக் கணிகை மகளிர் தாம் தம்மை விரும்பிய காமுகர் பொரு ளீயுந்துணையும் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்ற காதலுடையார் போற் காட்டி; நாள்தொறும் நாள்தொறும் நய்ய ஒழுகலின் - பின்னர் அக் காமுகர் பொருளீதல் அருகி வருங்காலத்தே நாளுக்கு நாள் அருகிவருகின்ற காதலுடையராய் அக் காமுகர் வருந்தும்படி ஒழுகுதலாலே; நாள்தொறும் நாள்தொறும் நந்தி உயர்வு எய்தி - முதற் பகுதியிலே நாளுக்குநாள் வளர்ச்சிபெற் றுயர்வினை யடைந் தும்; நாள்தொறும் தேயும் - இறுதிப் பகுதியிலே நாளுக்குநாள் ஒளிமழுங்கித் தேய்தலுடைய; நகைமதி ஒப்பர் - ஒளியுடைய திங்கள் மண்டிலத்தையும் ஒப்பர் என்பதாம்.

(வி - ம்.) கணிகையர் தம்மை விரும்பும் காமுகர் பொருளீயுந்துணை யும் நாளுக்குநாள் காதல் மிகுவார் போன்று காட்டி, அவர் பொரு ளீதல் குறையுங் காலத்தே அன்பினையும் நாளுக்குநாள் குறைத்துக் கோடலாலே ஒளிப்பக்கத்தே நாளுக்குநாள் வளர்ந்து இருட்பக்கத்தே நாளுக்குநாள் தேய்ந்தொழியும் திங்கள் மண்டிலத்தையும் ஒப்பர் என்றவாறு. (௬௬)

## ௫. பூங்கோடி

௬௭. வனப்பில ராயினும் வன்மையி லோரை
நினைத்தவர் மேவர நிற்பமைக் கவர்தாம்
கனைத்துடன் வண்டொடு தேனின மார்ப்பப்
புனத்திடைப் பூத்த பூங்கொடி ஒப்ப.

(இ - ள்.) அவர்தாம் - இன்னும் அக்கணிகையர் தாம்; வனப்பு இலராயினும் - அழகில்லாதவராயினும்; வன்மையிலோரை நினைத்து - பொருளுடையவரும் அறிவுவன்மை யிலாதவருமாகிய காமுகக் கயவர்கள் தம்மை விரும்பி வரவேண்டும் என்று கருதி, அவர் மேவர நிற்பமைக்கு - அக்காமுகர் தம்மைப் பெரிதும் விரும்பித் தம்பால் வரும்படி தம்மை ஒப்பனை செய்துகொண்டு அவர் காணும்படி நிற்றலாலே; புனத்திடை - காட்டினூடே; வண்டொடு தேன் இனம் - ஆண்வண்டும் பெடைவண்டுமாகிய அளிக்கூட்டம்; உடன் கனைத்து - ஒருசேர இசை முரன்று; ஆர்ப்ப - தம்பால் தாமே வந்து ஆரவாரித்து மொய்க்கும்படி; பூத்த - அழகாக மலர்ந்து நிற்கும்; பூங்கொடி ஒப்ப - மலர்க்கொடியையும் நிகர்ப்பர் என்பதாம்.

(வி - ம்.) வன்மையிலோர் - நெஞ்சின் திண்மையிலாத நொய்யர். அவர் - அக்காமுகர். நினைத்த என்றது - தம்மை விரும்பித் தம்பால் வருதல் வேண்டும் என்று கருதி என்றவாறு. நிற்பமைக்கு - நிற்றற்கு. கனைத்த - இசைமுரன்று. வண்டு - ஆண் வண்டு. தேன் - பெடைவண்டு என்க.

கணிகை மகளிர் பொருண்மிக்க காமுகக் கயவர் தம்மைக் கண்டு காமுற்றுத் தம்பால் வரும்படி தம்மை மிகவும் ஒப்பனை செய்து கொண்டு அவர் தம்மைக் காணும்படி உலாவி நிற்றலாலே, வண்டுகள் தம்மை விரும்பி வருதற்பொருட்டுக் காட்டின்கண் அழகாக மலர்ந்து அவ் வண்டுகள் காணும்படி அசைந்து நிற்கும் பூங்கொடிகளையும் ஒப்பாவர் என்றவாறு. (௫எ)

௬. மரக்கலம்

ருஅ. தங்கட் பிறந்த கழியன்பி னூர்களை
வன்கண்மை செய்து வலிய விடுதலின்
இன்பொரு ளேற்றி யெழுநின்ற வாணிகர்க்
கங்கண் பரப்பகத் தாழ்கல மொப்ப.

(இ - ள்.) தம்கண் பிறந்த கழி அன்பினூர்களை - இன்னும் கணிகை மகளிர் தம்மிடத்து முதிர்ந்த காமமுடையராகிய ஆடவரை; வன்கண்மை செய்து - அவர் தமக்கீயுமாற்றால் வறியராய பின்னர்ச் சிறிதும் கண்ணோட்டமில்லாத இகழ்ச்சிகளைச் செய்து; வலிய விடுதலின் - வலிந்து போகவிடுதலாலே; இன்பொருள் ஏற்றி - இனிய பல்வேறு பண்டங்களையும் தம்முள் ஏற்றிக்கொண்டு; எழுநின்ற வாணிகர்க்கு - தம்மையே புகலாகக் கருதிக் கடலிலே தம்மைச் செலுத்தி வருகின்ற வணிகமாக்கள்பால் சிறிதும் இரக்கமின்றி அவரிறந்தொழியும்படி; அங்கண் பரப்பகத்து - அழகிய இடத்தாற் பெரிதும் பரந்துகிடக்கும் அக்கடலின் நடுவே; ஆழ் கலம் ஒப்ப - அவர் பொருளையெல்லாம் தன்னோடு கொண்டு நீருள் மூழ்கி விடுகின்ற மரக்கலத்தையும் ஒப்பர் என்பதாம்.

(வி - ம்.) தம் என்றது-கணிகையரை. கழியன்பு என்றது ஈண்டு மிக்க காமம் என்றவாறு. வன்கண்மை-கண்ணோட்ட மின்மை.

கணிகை மகளிர் தம்மை விரும்பிவரும் காமுகக் கயவரின் பொருளெல்லாம் தம்பா லகப்படுத்திக்கொண்டு பின்னர் அவரழிந்தொழியும் படி கண்ணோட்டமின்றித் தள்ளிவிடுதலாலே, வணிகரீட்டிய பொருளையெல்லாம் அகப்படுத்திக்கொண்டு அவரைக் கண்ணோட்டமின்றி அகற்றிவிட்டு அப்பொருளோடு கடலினூடு ஆழ்ந்துவிடுகின்ற மரக்கலத்தையும் ஒப்பர் என்றவாறு. (௫அ)

எ. கற்புடைமகளிர்

௫௯. ஒத்த பொருளா னுறுதிசெய் வார்களை
எத்திறத் தானும் வழிபட் டொழுகலின்
பைத்தர வல்குல்பொற் பாவையி னல்லவர்
பத்தினிப் பெண்டிர் படியும் புரைப.

(இ - ள்.) பைத்துஅரவு அல்குல் பொன் பாவையின் நல்லவர்-நச்சுப் பையினையுடைய பாம்பினது படம்போன்ற அல்குலையுடைய பொன்னாலியன்ற பாவை போலும் அழகையுடைய கணிகைமகளிர்; ஒத்த பொருளால் உறுதி செய்வார்களை - தம் தகுதிக்கேற்ற பொருள் கொடுத்துத் தமது வாழ்க்கையினை நிலைபெறுத்துகின்ற ஆடவர்களை; எத்திறத்தானும் - எல்லா வழியானும்; வழிபட்டு ஒழுகலின்-வழிபட்டு நடத்தலாலே; பத்தினிப் பெண்டிர் படியும் புரைப-கற்புடை மகளிர் தன்மையையும் ஒப்பர் என்பதாம்.

(வி - ம்.) கணிகை மகளிர்-தாம் விரும்புகின்ற பொருளைத் தமது தகுதிக்கேற்ப வழங்குகின்ற ஆடவர்களை எவ்வாற்றானும் வழிபாடு செய்து பேணி யொழுகுதலாலே அவர்கள் கற்புடை மகளிரையும் ஒப்பர் என்றவாறு. (௫௯)

அ. விலங்கு

௬௦. வீபொரு ளானை யகன்று பிறனுமோர்
மாபொரு ளான்பக்க மாண நயத்தலின்
மேய்புலம் புல்லற மற்றோர் புலம்புகு
மாவும் புரைப மலரன்ன கண்ணார்.

(இ - ள்.) மலர் அன்ன கண்ணார் - தாமரை மலர்போன்ற அழகிய கண்ணையுடைய கணிகை மகளிர்; வீ பொருளானை அகன்று-தம்மை நயந்து தமக்கு வழங்கி அழிந்துபோன பொருளையுடைய ஆடவனைக் கைவிட்டுப்போய்; ஓர் பிறன்மா பொருளான் பக்கம்-மற்றோர் ஏதிலனாகிய பெரிய செல்வன்பால் சென்று; மாண நயத்தலின் - மாட்சிமை யுண்டாக விரும்புதலாலே; மேய் புலம் புல்அற - தாம் தொன்று தொட்டு மேய்கின்ற நிலம் புல் அற்று வறிதாய் விடத்தே; மற்று ஓர் புலம்புகு மாவும்-வேறோர்

புன்னிரம்பிய நிலத்தைத் தேடிச் செல்லும் விலங்குகளையும் புரைப - ஒப்பர் என்பதாம்.

(வி - ம்.) வீ பொருளான் - அழிந்த பொருளையுடையோன் - வறுமை யுற்றவன்.

கணிகை மகளிர் பொருள் அழிந்தவனைக் கைவிட்டுப் புதுவதாக வேறொரு பொருளுடையான்பாற் புகுதலாலே, தாம் மேய்கின்ற நிலம் புல்லற்று வறிதாயவுடன் மற்றுமொரு புல் நிரம்பிய நிலத்திற் புகுகின்ற விலங்குகளையும் ஒப்பரென்றவாறு. (௩௦)

## கூ. குரங்கு

௩௧. நுண்பொரு ளானை நுகர்ந்திட்டு வான்பொருள்
நன்குடை யானை நயந்தனர் கோடலின்
வம்பிள மென்முலை வாணெடுங் கண்ணவர்
கொம்பிடை வாழுங் குரங்கும் புரைப.

(இ - ள்.) வம்பு இளமெல்முலை வாள்நெடு கண்ணவர் - கச்சணிந்த இளமையும் மென்மையுமுடைய முலையினையும் வாள் போன்ற நெடிய கண்களையும் உடைய கணிகை மகளிர்; நுண் பொருளானை நுகர்ந்திட்டு-தேய்ந்தழிகின்ற பொருளையுடையவனை அவன் செல்வம் தேயுந்துணையும் அவனோடு கூடி இன்புற்றிருந்து அப் பொருள் அழிந்த பின்னர்; நன்கு வான் பொருள் உடையானை - நன்கு சிறந்த பொருளுடையானுகிய மற்றொருவனை விரும்பிப் போதலாலே; கொம்பிடை வாழுங் குரங்கும் புரைப - மரக் கொம்புகளிலே வாழ்ந்து அவற்றுள் ஒன்றன்கண்ணுள்ள மலர் காய் கனி முதலியவற்றைத் தின்று தீர்த்தபின் மற்றொரு கிளையிற் றாவிச் செல்லுகின்ற குரங்கையும் ஒப்பர் என்பதாம்.

(வி - ம்.) நுண்பொருள் ; தேய்ந்து நுண்ணியதாகிய பொருள் - அஃதாவது அழிந்து குறைவுற்ற சிறு பொருள்.

கணிகையர் ஒருவன்பாலுள்ள பொருளைக் கவர்ந்த பின்னர் அவன் வறியனாக மற்றொரு பொருளுடையானைச் சேர்வதனால் ஒரு கொம்பிலுள்ள இரை தீர்ந்த பின்னர் மற்றொரு கிளைக்குத் தாவுகின்ற குரங்கையும் ஒப்பர் என்றவாறு. (௩௧)

## ௧௦. வண்டு

௩௨. முருக்கலர் போற்சிவந் தொள்ளிய ரேனும்
பருக்கா டில்லவர் பக்க நினையார்
அருப்பிள மென்முலை யஞ்சொ லவர்தாம்
வரிச்சிறை வண்டின் வகையும் புரைப.

(இ - ள்.) அரும்பு இளமேல் முலை அம் சொல் அவர்தாம் - கோங்கரும்பு போன்ற இளமையுடைய மெல்லிய முலையினையும்

அழகிய சொற்களையுடைய அக் கணிகை மகளிர்தாம்; முருக்கு அலர்போல் செந்து ஒள்ளியர் எனும்-முண்முருக்கமலர் போன்று சிவந்து ஒளியுடைய உடம்பினையுடையரேனும்; பருக்காடு இல்லவர் பக்கம் நினைமார்-பொருட் பெருக்கம் இல்லாத வறியவர் பக்கலிலே கருத்து வைத்திலர் ஆதலின், வரிச்சிறை வண்டின் வகையும் புரைப - வரிகளமைந்த சிறகினையுடைய வண்டினங்களையும் ஒப்பாவர்; என்பதாம்.

(வி - ம்.) முருக்கு - முண்முருங்கை. ஒள்ளியர்-ஒளியுடையர். முருக்கலர்-மேனிக்கு நிறவுவமை. பருக்காடு-பருத்தல், பெருக்கம். பருக்காடு என்பதன்கண் காடு, தொழிற்பெயர் விகுதி. சாக்காடு, என்பதன்கண் அவ்விகுதி வந்தமை காண்க.

கணிகை மகளிர் பொருளில்லாரை அவர்தாம் பேரழகுடையரேனும் கருதியும் பாரார் ஆதலால், பூவாத கொடிகளை நோக்காத வண்டுகளையும் ஒப்பாவர் என்றவாறு.

இனி, கணிகை மகளிரைப் பற்றி வருகின்ற யாரொடு என்னும் (௪௯) செய்யுள் முதலாக முருக்கலர் என்னும் (௫௨) இச் செய்யுள் ஈறாகவுள்ள செய்யுள்களோடு,

"ஈற்று மந்தி யிற்றெழு பூங்கொடி
யுற்புல முதிரக நற்றுற விக்கே
போல்வ ரென்னுஞ் சால்வுடை யொழுக்கிற்
கலைதுறை போகிய கணிகா சாரத்துப்
பலதுறை பயின்று பல்லுரைக் கேள்வியொடு
படிவங் குறிக்கும் பாவனை மேற்கொண்
டடிமையிற் பொலிந்த வகன்பரி யாளத்துத்
தலைக்கோற் சிறப்பி னலத்தகு மகளிர்"

—பெருங்கதை, ௫-அ : ௩௦ - அ

எனவும்,

"அரசர்க் காயினும் அடியவர்க் காயினும்
அன்றை வைகல் சென்றோர்ப் பேணி
பள்ளி மருங்கிற் படிறின் றொழுகும்
செல்வ மகளிர் சேரி." —பெருங்கதை, ௧-௩௫ : அஅ-௯௧

எனவும் வரும் பெருங்கதைப் பகுதிகளும்,

"ஆடவர் காண நல்லரங் கேறி
ஆட்டும் பாட்டு மழகுங் காட்டிச்
சுருப்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவச்
செருக்கய னெடுங்கட் சுருக்குவலைப் படுத்துக்
கண்டோர் நெஞ்சங் கொண்டகம் புக்குப்

பண்டேர் மொழியிற் பயன்பல வாங்கி
வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிர்''
—மணிமே. ௧௮ - ௧௦௩ - ௯

எனவும்,

''காதலன் வியக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா உயிரொடு புலந்து
நளியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூஉ முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டி ரல்லேம் பலர்தங்
கைத்தூண் வாழ்க்கை கடவிய மன்றே
பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்
யாழினம் போலும் மியல்பின மன்றியு
நறுந்தா துண்டு நயனில் காலை
வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்
வினையொழி காலைத் திருவின் செல்வி
யனையே மாகி யாடுவர்த் துறப்பேம்'' —௧௮ : ௧௧ - ௨௦.

எனவும் வரும் மணிமேகலைப் பகுதிகளும்,

''பருகு வாரிற் புல்லிப் பயங்கண் மாறத் துறக்கு
முருகு விம்மு குழலார்போல மொய்கொ டும்பி
யுருவப் பூங்கொம் பொசியப் புல்லித் தீந்தேன் பருகி
யருகு வாய்விட் டோர்ப்ப வண்ணன் மெல்லச் சென்றான்''

எனவருஞ் சிந்தாமணிச் செய்யுளும்,

''புண்ணிய முலந்தபின் பொருவி லார்களைக்
கண்ணிலர் துறந்திடுங் கணிகை மார்கள்போல்
எண்ணில விகந்திடு மியாவர் தம்மையும்
நண்ணிய நண்பில ணங்கை வண்ணமே''

எனவருஞ் சூளாமணிச் செய்யுளும் ஒப்புநோக்கற் பாலன. (௬௨)

இதுவுமது

௬௩. மக்கட் பயந்து மனையற மாற்றுதல்
தக்க தறிந்தார் தலைமைக் குணமென்ப
பைத்தர வல்குற் படிற்றுரை யாரொடு
துய்த்துக் கழிப்பது தோற்றமொன் றின்றே.

(இ - ள்.) தக்கது அறிந்தார்-மக்கட் பிறப்பிற்குரிய உறுதிப் பொருளை அறிந்த சான்றோர்; பைத்து அரவு அல்குல் - நச்சுப்

பையையுடைய பாம்பினது படம் போன்ற அல்குலையும்; படிறு உடையாரொடு-பொய்ம்மொழியையும் உடைய கணிகை மகளிரோடு; துய்த்துக் கழிப்பது - இன்பம் நுகர்ந்து வாழ்நாளைக் கழிக்குஞ் செயல்; தோற்றம் ஒன்று இன்று-சிறிதும் மாண்புடைமைதொன்றன்று என்றும்; மக்கட் பயந்து - கற்புடை மகளிரோடு கூடி இன்பம் நுகர்ந்து நன்மக்களையும் பெற்று; மனை அறம் ஆற்றுதல்-விருந்தோம்பல் முதலிய இல்லறங்களைச் செய்தலே; தலைமைக் குணம் என்ப-மக்கட்குத் தலைசிறந்த குணமாம் என்று ஓதுவர் என்பதாம்.

(வி - ரை.) கணிகையர் கூட்டுறவாலே இன்பம் பெறுதலின் அது நீங்காதா தென்பார்க்கு விடையாக வந்தது இச் செய்யுள். இன்பம் நுகர்தல் மட்டுமே மக்கட் பண்பிற்குச் சிறப்பாகாது. அறஞ்செய்தலே மக்கட் பிறப்பின் பயனை நல்குவதாம், ஆகவே பொது மகளிர் கூட்டுறவால் இன்பமுண்டாயினும் அதனாற் புகழுமில்லை பயனுமில்லை. இன்பந் தானும் கற்புடைய மனைவியோடு கூடி நுகர்தல் வேண்டும். மேலும் நன்மக்களையுப்பெற்று விருந்தோம்பல் முதலிய இல்லறங்களைச் செய்தலே மக்கட் குறுதி பயப்பதாம் என்றவாறு. இதனை,

"அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில" —குறள், ௩௯

எனவும்,

"அன்பும் அறனும் உடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனும் அது" —குறள், ௪௫

எனவும்,

"இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை" —குறள், ௪௭

எனவும்,

"தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்" —குறள், ௯௧௬

எனவும்,

"இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு" —குறள், ௯௨௰

எனவும் வருந் திருக்குறள்களானும் உணர்க. (௯௩.)

பண்புடைமை

௯௪. நகைநனி தீது துனிநன் றி யார்க்கும்
பகைநனி தீது பணிந்தியா ரோடு
மிகைமிகு பொருளென் றிறத்த லிலரே
வகைமிகு வானுல கெய்திவாழ் பவரே.

(இ - ள்.) யார்க்கும் - எத்தகையோர்க்கும்; நனி நகை தீது - மிகையாய நகைப்புந் தீங்கே பயப்பதாகும்; துனி நன்று பகை - துனியே பெரும்பகையுமாம்; ஆதலால், வகை மிகுவான் உலகு எய்தி வாழ்பவர் - பல்வேறு வகையானும் மிக்க மேனிலையுலகத்தை எய்திவாழுந் தகுதியுடைய மேன்மக்கள்; பணிந்திலாரோடும் - தம் பகைவரிடத்தும்; மிகுபொருள் மிகை - வரம்பு கடந்தொழுகும் ஒழுக்கம் மிகையாம்; நனி தீது - மிகவும் தீமை பயப்பதாம்; என்று - என்றறிந்து; இறத்தல் இலர் - வரம்பு கடந்து ஒழுகுதலிலர்; என்பதாம்.

(வி - ம்.) நனி நகை தீது எனவும் மிகுபொருள் மிகைநனி தீது என்றும் மாறிக் கூட்டுக. துனி-சிறுபகை. நன்று-பெரிது. பணிந்தியார் - பணியாதார்; திரிசொல். பகைவர் என்றவாறு. இறத்தல்-வரம்பு கடந்தொழுகுதல்.

மிகையாயவழி நகையும் தீதாம், துனியே பெரும்பகையுமாம். ஆதலால் சான்றோர் பகைவர்மாட்டும் வரம்பு கடந்து ஒழுகுதலிலர். யாவரிடத்தும் அடக்கமாகவே ஒழுகுவர் என்பது கருத்து.

மிகை - அடங்காமை. அஃதாவது செருக்குடைமை காரணமாக எச் செயலினும் மிகுதிதோன்றச் செய்தல்.

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்'' —குறள், கஉக

என்பது பற்றி வகைமிகு வானுலகு எய்தி வாழ்பவர் மிகைமிகு பொருளென்றிறத்தலிலர் என்று அடக்கம் புகுமியல்புடைய சான்றோர் மேலிட்டுரைத்தனர். உரைக்கவே மிகை செய்வார் ஆரிருள் என்னும் நிரயம் புகுவர் என்ருருமாயிற்று. (௬௪)

## நல்குரவு

௬௫. பெண்டிர் மதியார் பெருங்கிளை தானது
கொண்ட விரகர் குறிப்பினி னஃகுப
வெண்டறை நின்று வெறுக்கை யிலராயின்
மண்டினர் போவர்தம் மக்களு மொட்டார்.

(இ - ள்.) வெண் தறை நின்று - வறிய நிலத்திலுறைந்து; வெறுக்கை இலர் ஆயின் - கைப்பொருள் இல்லா வறியராயவிடத்து; பெண்டிர் மதியார் - மனைவிமாரும் நன்கு மதிப்பதிலர்; பெருங்கிளை தான் - நெருங்கிய சுற்றத்தாரும்; அது - அங்ஙனமே சிறிதும் மதியார்; கொண்ட விரகர் குறிப்பின் அஃகுப - உறுவது சீர் தூக்கி உபாயமாகக் கேண்மை கொண்டுள்ள நண்பர் தாமும் குறிப்பானுணர்ந்து கேண்மையிற் குறைந்து அயலாராகுவர்; தம் மக்களும் ஒட்டார் மண்டினர் போவர் - தம்முடைய மக்கள் தாமும் ஒருசேர வேறுபட்டகன்று போவர்; என்பதாம்.

(வி - ம்.) இவ்வுலகின்கண் வறுமை வந்துற்றபோது மனைவிமாரும் மதியார்; மக்களும் கைவிட்டுப் போவர்; சுற்றத்தார் மதியார்;

ஏன்பரும் கட்பு நாரற்றுத்தீர்வர்· வறுமை பெரிதும் இன்னாததாம் என்றவாறு. (சஎ)

## இதவுமது

௬௬. சொல்லவை சொல்லார் சுருங்குபு சூழ்ந்துணர்
நல்லவை யாரு நனிமதிப் பாரல்லர்
கல்வியும் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்ணீ.

(இ - ள்.) கைப்பொருள் சுருங்குபு இல்லார் சொல் - தம் கையிற் பொருள் குறைந்து இல்லையான நல்குரவாளர் செயற்கரிய செய்து புகழுடையராயினும் அப் புகழை; அவை சொல்லார் - யாரும் அவையின்கண் பாராட்டிப் பேசார்; சூழ்ந்து உணர் நல் அவையாரும் – பொருளியல்பினை ஆராய்ந்து அறியுமியல்புடைய நல்ல அவையகத்தார் தாமும், நனி மதிப்பாரல்லர்-மிகவும் மதிப் பாரல்லர்; பயிற்றிய கல்வியும் புல் என்று போதலை - அந் நல்குர வாளர் பலகாலும் பயின்ற கல்விதானும் சிறப்புறுமற் பொலிவற் றுப் போமென்பதனை; நீ மெய் என்று கொள் - நீ வாய்மை யென்றே அறிந்து கொள்வாயாக! என்பதாம்.

(வி - ம்.) சொல் - புகழ். கைப்பொருள் சுருங்குபு இல்லார் எனக் கூட்டுக. நல்லவை யாரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. பொருளியல்பினை ஆராய்ந்துணரும் நல்லவையார் தாமும் மதியார் எனவே ஏனையோர் மதியாமை கூறவேண்டுமோ? என்றவாறு.

இனி, 'ஏழை சொல் அம்பல மேறாது' என்னும் பழமொழிக்கிணங்க நல்குரவாளர் கூறுகின்ற மொழியை அவையினர் ஏற்று எடுத்துச் சொல்லார் எனினுமாம்.

இக் கருத்தினை,

"இல்லாரை யெல்லா ரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு" —குறள், எ௫௨.

எனவருந் திருக்குறளானும்,

"நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல்"

எனவரும் நாலடியானும் உணர்க.

இனி நல்கூர்ந்தார் கல்வியும் சிறவாதென்பதனை,

"எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம்—மனைத்தக்காள்

மாண்பில ளாயின் மணமக ளல்லறம்
பூண்ட புலிப்படா போல்'' —நீதிநெறிவிளக்கம், ௪௦

எனவரும் குமரகுருபரவடிகளார் பொன்மொழியானும்,

"நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்'' —குறள், ௧௦௪௬

எனவரும் திருக்குறளானுமுணர்க. (௯௨)

இதுவுமது

௯௩. தொழுமக னாயினுந் துற்றுடை யானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப.

(இ-ள்.) தொழுமகன் ஆயினும் - பிறரைத் தொழுது பிழைக்கும் கீழ்மகனேயாயினும்; துற்று உடையானை - பொருளுடையானை; பழுமரம் சூழ்ந்த பறவையில் சூழ்ப - உலகமாந்தர் பழுத்த மரத்தைச் சூழ்கின்ற பறவைக் கூட்டம் போன்று வந்து சூழ்ந்து கொள்வர்; விழுமியரேனும் - மற்ற அறிவு குணஞ் செயல்களாலே சிறப்புடைய மேன்மக்களாயினும், வெறுக்கை உலந்தால் - செல்வம் அழிந்து நல்குரவுடையராய பொழுது; வீழ்ந்த பழுமரம் பறவையின் போப - (உலக மாந்தர்) விழுந்துபோன பழுமரத்தை விட்டுப் போகின்ற பறவைக் கூட்டம் போன்று அகன்றுபோகாநிற்பர் என்பதாம்.

(வி - ம்.) வீழ்ந்த பழுமரம் என மாறுக.

உலகமாந்தர் கீழ்மகனாயினும் பொருளுடையானைச் சூழ்ந்து கொள்வர். மேன் மக்களாயினும் வறியராயின் அணுகாது விலகிப் போவர் என்றவாறு. துற்று : ஆகுபெயர்.

இதனை,

''இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப—பெரிதுந்தாம்
முற்பக லோவாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.''

எனவரும் (நீதிநெறி விளக்கம்-௧௨) குமரகுருபரர் மொழியானும்,

''ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகின்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதும்

கொடாஅ ரேனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர்''

எனவரும் நாலடியானு முணர்க. (௩௭)

இதுவுமது

௩௮. பொருளில் குலனும் பொறைமையில் நோன்பும்
அருளி லறனு மமைச்சி லரசு
மிருளினு ளிட்ட விருண்மையி தென்றே
மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப.

(இ - ள்.) பொருள் இல் குலனும்-செல்வமில்லாதவருடைய குலப் பெருமையும்; பொறைமை இல் நோன்பும்-பொறுமைப் பண்பில்லாதவன் மேற்கொண்ட தவமும்; அருள் இல் அறனும்-நெஞ்சத்தின்கண் அருட்பண்பில்லாதவன் செய்த அறச்செயலும்; அமைச்சு இல் அரசும்-அமைச்சரில்லாத அரசாட்சியும்; இருளினுள் இட்ட இருள்மையிது என்று - இருளினூடே கண்ணிலெழுதப்பட்ட கரிய மை போல்வனவாம் என்று; மருள் இல் புலவர் மனம் கொண்டு உரைப்ப - மயக்கமில்லாத புலவர்கள் மனத்தினெண்ணிக் கூறுநிற்பர் என்பதாம்.

(வி - ம்.) குலம் - குடிப்பெருமை. நோன்பு - தவம்.

அறத்திற்கு அருளுடைமையே காரணமாகலின், அருளாதான் செய்யும் அறம் அறமாகாதென்பது பற்றி அருளில் அறம் என்றார். இதனை,

''தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்'' —குறள், உ௪௯

எனவருந் திருக்குறளானு முணர்க.

வறுமை குலப்பெருமையை அழித்துவிடும் என்பதனை,

''தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை'' —குறள், ௲௪௩

எனவும்,

''இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்'' —குறள், ௲௪௪

எனவும் வருந் திருக்குறள்களானு முணர்க.

இன்னும்,

''குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ

நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி'' —மணிமே. கக : எரு-அ௦

எனவரும் மணிமேகலையானும் பொருளில்வழிக் குடிப்பிறப்பழியும் என்பது முதலியனவு முணர்க.

இருளிலே கண்ணிலெழுதப்பட்ட மை இருந்தும் இல்லாதது போறலின் வறுமை முதலியன உள்வழி, குல முதலியன இருந்தும் இல்லாதனவாகும் என்பது கருத்து. (௬அ)

நல்லாசிரிய ரல்லாதார் அறமுரைத்தலின் தன்மை

௬௯. அந்தக னந்தகற் காறு சொலலொக்கு
முந்துசெய் குற்றங் கெடுப்பான் முழுவது
நன்கறி வில்லா னஃதறி யாதவற்
கின்புறு வீட்டி னெறிசொல்லு மாறே.

(இ - ள்.) முந்து செய் குற்றம் முழுவதும் கெடுப்பான் - பண்டு செய்த தீவினையை முழுவதும் அழித்தற்குக் காரணமான; இன்பு உறும் வீட்டின் நெறி - இன்பம் நிலையுதலுடைய வீடு பேற்றினை யடையும் நன்னெறியினை ; நன்கு அறிவில்லான் - நன்கு அறிதலில்லாத மடவோன் ஒருவன்; அஃது அறியாதவற்கு - அந் நன்னெறியினை முன்பே அறிந்திலாத மற்றொரு மடவோனுக்கு; சொல்லும் ஆறு-அறிவுறுத்தும் வகை; அந்தகன்-ஒரு குருடன் ; அந்தகற்கு ஆறு சொலல் ஒக்கும்-மற்றொரு குருடனுக்கு நெறி கூறுதலையே ஒக்கும் என்பதாம்.

(வி - ம்.) அறிவிலார் அறிவில்லாதவர்க்கு நன்னெறி கூறுதல் குருடன் குருடனுக்குச் செல்லும் நெறியினைக் கூறுதலையே ஒக்கும் என்றவாறு. எனவே, நல்லறங்களை அறிய முற்படுவோர் நல்லாசிரியர்பாற் சென்று அவர் வாயிலாகவே அறிதல் வேண்டும் என்பது கருத்தாயிற்று. இச்செய்யுளோடு,

"குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடும் குருடும் குழிவிழு மாறே" —திருமந், ௧௬அ௦

என வரும் திருமந்திரச் செய்யுளை ஒப்பு நோக்குக. (௬௯)

நாட்டு வளம்

எ௦. செந்நெற் கரும்பினொ டிகலுந் தீஞ்சுவைக்
கன்னலங் கரும்புதான் கமுகைக் காய்ந்தெழும்

இன்னவை காண்கில னென்று பூகமு
முன்னிய முகில்களான் முகம்பு தைக்குமே.

(இ - ள்.) செந்நெல் கரும்பினொடு இகலும்-இந்நாட்டு மருத நிலப் பரப்பின்கண் சிவந்த நெல்லையுடைய பயிர்கள் கரும்புகளோடு மாறுபட்டு வளரும்; தீம் சுவை கன்னல் அம் கரும்பு கமுகைக் காய்ந்து எழும்-இனிய சுவையினை யுடைய கன்னல் என்னும் அழகிய அக் கரும்போ கமுகினை நீ எம்மை ஒவ்வாய் என வெகுண்டு வளருவதுபோல் வளரும்; பூகமும்-அந்தக் கமுகோ இக்கரும்பின் செருக்கினை யான் காணப் பொறேன் என்று நாணி, முன்னிய முகில்களால் முகம் புதைக்கும்-ஆங்கு முற்பட்டு வருகின்ற முகில்களாகிய ஆடையாலே தன் முகத்தினை மறைத்துக்கொள்ளும் என்பதாம்.

(வி - ம்.) அந்த நாட்டினது மருத நிலத்திலே செந்நெற் பயிர்கள் கருப்பஞ்சோலைபோல வளரும், கரும்புகளோ கமுகந் தோட்டம்போலக் காணப்படும், கமுகந் தோட்டங்களோ முகில்களைத் தீண்டுமளவு வளமுற வளர்ந்திருக்கும் என்றவாறு.

செந்நெலும் கரும்புஞ் சேரக் கூறலின் மருதநிலம் என்பது பெற்றாம். என்னை? மருதநிலம் புனைந்துரைக்கும் புலவர் மரபு அன்னதாகலின். இதனை,

"மோடு கொண்டெழு மூரிக் கழைக்கரும்
பூடு கொண்ட பொதும்பரோ டுள்விராய்த்
தோடு கொண்டபைங் காய்த்துவள் செந்நெலின்
காடு கொண்டுள கண்ணக னாடெலாம்"

எனத் தோலாமொழித் தேவரும்,

"வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி"

எனப் பட்டினப்பாலையும், (௨௦)

"கரும்பொடு செந்நெலுங் கவின்கொண் டோங்கிய"

எனக் கம்பநாடரும் ஓதுதலுணர்க. (௭௦)

பாசண்டச் சாத்தன்

௭௧. பண்ணுற் றிறத்திற் பழுதின்றி மேம்பட்ட
தொண்ணூற் றறுவகைக் கோவையும் வல்லவன்
விண்ணு றியங்கும் விறலவ ராயினுங்
கண்ணுறி நோக்கிக் கடுநகை செய்வான்.

(இ - ள்.) பண்ணால் திறத்தில் பழுது இன்றி மேம்பட்ட - பண் திறம் என்று கூறப்படுகின்ற இசையிலக்கணங்களாலே சிறிதும் குற்றமில்லாமல் மேன்மைபொருந்திய; தொண்ணூற்றறு வகைக் கோவையும் வல்லவன் - தொண்ணூற்றாறுவகைப்பட்ட சமயத் தருக்கநூற்கோவைகளையும் ஐயந்திரிபறக் கற்று வல்லுநன் (ஆகிய சாத்தன் என்னும் தெய்வம்); விண் ஆறு இயங்கும் விறலவர் ஆயினும் - வான்வழியே செல்லும் வெற்றியையுடைய கந்தருவர் முதலிய தேவகணத்தாரேனும்; கண் கூறி நோக்கி - தன் கண்ணொளியை வீசி நோக்கி, அச்சுறுத்தி; கடு நகை செய்வான் - அவர்கள் அஞ்சி நடுங்குதல் கண்டு கடிதாக வெகுளிச் சிரிப்புச் சிரிப்பான் என்பதாம்.

(வி - ம்.) இச் செய்யுளால் வளையாபதி என்னும் பெருங் காப்பியத்தின்கண் மகா சாத்திரன் என்னும் ஐயனாரைப்பற்றிய கதையும் அமைந்திருந்தது என்று ஊகிக்கலாம்.

ஐயனார் என்னும் தெய்வம், தொண்ணூற்றறுவகைச் சமயச் சாத்திரத் தருக்கக் கோவையும் நன்கு கற்றுவல்லதென்பது பெற்றாம். இதனை, சிலப்பதிகாரத்தில் கனாத்திறமுரைத்த காதையில் (கூ) "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" எனவரும் அடிக்கு அடியார்க்கு நல்லார், "பாசண்டம் - தொண்ணூற்றறுவகைச் சமய சாத்திரத் தருக்கக்கோவை. என்னை? 'பண்ணாற்றிறத்தில்......செய்வான்' என்றார் வளையாபதியினும் ஆகலின்" என இச் செய்யுளைக் காட்டி விளக்குவதானு முணர்க.

இனி, அப் பாசண்ட நூல் பண் திறம் என்னும் இசை வகையாலே பாடப்பெற்றிருந்தன என்பது முணர்க. "பண் - நான்கு வகைப்படும். அவையாவன—பாலை குறிஞ்சி மருதம் செவ்வழி என்பன. திறம் - அப் பண்ணின் திறங்கள். அவையாவன— பாலைக்குப் புறம்-தேவாளி; அருகு-சீர்கோடிகம்: பெருகு-நாகராகம். குறிஞ்சிக்குப் புறம் - செந்து; அருகு - மண்டிலம்; பெருகு - அரி. மருதத்திற்குப் புறம் - ஆகரி; அருகு - சாயவேளா கொல்லி; பெருகு - கின்னரம்; செவ்வழிக்குப் புறம் - வேளாவளி; அருகு - சீராகம்; பெருகு - சந்தி. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க" என்பது அடியார்க்கு நல்லார் நல்லுரை. (சிலப் - கச: கசo - கஎ) இன்னும்,

"நால்வகை யாழினும் பிறக்கும் பண்ணுக்கும் இன்றியமையாத மூவேழுதிறத்தையும் குற்ற மின்றாக இசைத்து" (சிலப் - ரு-கூரு-எ) எனவும் அடியார்க்கு நல்லார் ஓதுதலும் காண்க.

விண்ணாறு இயங்கும் விறலவர் என்றது கந்தருவர் முதலாயினாரை. மகாசாத்தன் பண்ணாற்றிறத்தில் பழுதின்றி மேம்பட்ட தொண்ணூற்றறுவகைக் கோவையும் வல்லவன் ஆகலின் யாழோராகிய கந்தருவர் விண்ணாறியங்குங்கால் கூர்ந்து நோக்கி எள்ளி நகைப்பன் என்றவாறு. நகை - எள்ளலிற் பிறந்தது. கடுநகை - பெருஞ் சிரிப்பு. சினச்சிரிப்புமாம். (எச)

## காமுற்று வருந்தும் ஒரு மகள்

எஉ. அன்றைப் பகற்கழிந் தாளின் றிராப்பகற்
கன்றிற் குரலுங் கறவை மணிகறங்கக்
கொன்றைப் பழக்குழற் கோவல ராம்பலு
மொன்றல் சுரும்பு நரம்பென வார்ப்பவும்.

(இ - ள்.) அன்றைப் பகற்கு அழிந்தாள் - அற்றைநாளின் பகற் பொழுதிற்கே (இவ்வாறு) பெரிதும் துன்புற்றவள்; இன்று இராப்பகற்கு-இப்போது எதிரே வருகின்ற அந்தப் பொல்லாத மாலைப்பொழுதிற்கு; அன்றில் குரலும் - அன்றிற் பறவையின் குரலும்; கறவை மணிகறங்க-நல்லான்களின் கழுத்திற் கட்டிய மணிகள் ஒலியாநிற்ப, அவற்றைச் செலுத்தி வருகின்ற; கோவலர் கொன்றைப் பழக்குழல் ஆம்பலும்-கொன்றைப் பழம் போன்ற உருவமுடைய குழலோசையும், ஆம்பற்றண்டுபோன்ற குழலோசையும்; ஒன்றல் சுரும்பு நரம்பென ஆர்ப்பவும் - பலவாகிய வண்டினங்கள் யாழ் நரம்புபோல இனிதாக முரலவும்; என்க.

(வி - ம்.) இதனால் வளையாபதி காதற்சுவை கெழுமிய வரலாறமைந்த பெருங் காப்பியமாம் என்பது ஊகிக்கலாம்.

இனி, கொன்றைப் பழக்குழலும் எனவேண்டிய எண்ணும்மை தொக்கது. கொன்றைப் பழக்குழல் ஆம்பல் என்பன கொன்றைப் பழம் போலவும் ஆம்பற்றண்டு போலவும் உருவமமைந்த குழற் கருவிகள். ஆம்பல் என்பதனை ஒருவகைப் பண் என்பாருமுளர்.

இவற்றை,

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி"

எனவும்,

"பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி"

எனவும் வருந் தாழிசைகளானும், (சிலப் - ஆய்ச்சியர் கக - உ0)

இவற்றிற்கு "ஆம்பல் முதலானவை சில கருவி; ஆம்பல் - பண்ணுமாம். மொழியாம்பல், வாயாம்பல், முத்தாம்பல்" என்று சொல்லுவர் பண்ணுக்கு" எனவரும் அரும்பதவுரையாசிரியர் குறிப்பானும்,

"கொன்றை ஆம்பல் (முல்லை) என்பன சில கருவி. இனி அவற்றைப் பண்ணென்று கூறுபவெனின், அங்ஙனம் கூறுவாரும்

ஆம்பலும் முல்லையுமே பண்ணுதற்குப் பொருந்தக் கூறினல்லது கொன்றையென ஒரு பண் இல்லையாகலானும், கலியுள் முல்லைத் திணைக்கண், ஆரும் பாட்டினுள் 'கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண் இமிழிசை மண்டை யுறியொடு தூக்கி, ஒழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர், வழூஉக் கோவலர் தத்த மினவிரை, பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தர்' (கலி - ௧0௩ : ௧ - ௫) எனக் கருவி கூறினமையானும் அன்றைப் பகற் கழிந்தாள்............ஆர்ப்பவும் என வளையாபதியுள்ளும் கருவிகூறிப் பண் கூறுதலானும், இவை ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வந்த வொத்தாழிசை யாதலானும், இரண்டு பண்ணும் ஒன்று கருவியுமாகக் கூறின், செய்யுட்கும் பொருட்கும் வழூஉச் சேரலானும் அங்ஙனம் கூறுதல் அமையாதென்க'' என வரும் ஆசிரியர் அடியார்க்கு நல்லார் விளக்கவுரையானும் உணர்க. (எஉ)

அகிதிற்கிடைத்த வளையாபதிச் செய்யுள் எஉ ஆம்.

அவற்றிற்குப் பெருமழைப் புலவர்

பொ. வே. சோமசுந்தரனுர் வகுத்த

சொற்பொருள் உரையும், விளக்கவுரையும்

முற்றும்.

———

# அணிந்துரை

சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் இவற்றை ஐம்பெருங்காப்பியங்கள் என்று சான்றோர் போற்றிக் கூறுவர். இவற்றுள் முன்னின்ற மூன்று காப்பியங்களும் முழுவுருவத்துடன் கிடைத்துள்ளன. இம் மூன்று காப்பியங்களானும் நந்தமிழ் மொழி ஒப்பற்ற பெருமையுடையதாகத் திகழ்கின்ற தென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஈற்றினின்ற வளையாபதி குண்டலகேசி என்பவற்றுள் ஒரு சில செய்யுள்கள் ஒழியப் பெரும்பகுதிகளும் அழிந்தொழிந்தன. இம் மாபெருங் காப்பியங்கள் அழிந்தமை தமிழ் மாந்தரின் தவக்குறைவே என்றுதான் கருதவேண்டும். தோன்றியனவெல்லாம் அழிவனவே என்பது வியதியேயன்றோ?

வளையாபதி, குண்டலகேசி என்னும் காப்பியங்கள் இருந்தன என்பதன்கண்ணும் நமக் கையமுண்டாகாதபடி அப் பெரு நூல்களின் செய்யுள்கள் மேற்கோள்களாகப் பண்டைச் சான்றோரால் கையாளப் பட்டமையாலே விலைத்திருந்து அவையிருந்தமைக்குச் சான்றுகித் திகழ்கின்றன. அவற்றுள் வளையாபதியைப்பற்றி இந்நூலின் முற்பகுதியில் எம்மால் எழுதப்பட்ட அணிந்துரை கண்டு தெளிக. இனி இக் குண்டலகேசியைப்பற்றி யாமறிந்தவற்றை ஈண்டுக் கூறுவாம்.

குண்டலகேசி என்பது பௌத்தமதச் சார்புபற்றி அம் மதத்திற்குப் பெரும் பகையாக விருந்த ஆருகத சமயக் கொள்கைகளைக் குற்றங்கூறி அவ்வாருகத மதத்தின் இறுமாப்பையடக்க வெழுந்த வொரு சொற்போர் நூலே என்பது ஆராய்ச்சியாற் புலனாகின்றது.

ஆருகத சமயம்பற்றி, 'நாதகுத்தனார்' என்னும் ஆசிரியரோடு 'ஆவணம்' என்னும் நகரத்திலே 'குண்டலகேசி' என்பவள் சொற்போர் செய்து அவ்வாசிரியரைத் தோற்கச் செய்து பௌத்த சமயத்தை வளர்த்தனள் என்பதும், அவள் வைதிக சமய முதலிய வேறு பல சமயக் கணக்கரோடும் சொற்போர் செய்து வென்று தன் சமயத்தைப் பெருக்கினள் என்பதும் 'நீலகேசி' என்னும் நூலால் இனிது விளங்கும்.

'நீலகேசி' என்னும் நூல்தானும் குண்டலகேசி ஆருகத சமயத்திற்குக் கூறிய குற்றங்களை நீக்குவதனையும் அக் குண்டலகேசியாற் பரப்பப்பட்ட பௌத்த சமயக் கொள்கைகளுக்குக் குற்றங்கூறி மீண்டும் ஆருகத சமயக் கொள்கைகளை நிலைநிறுத்துதற்கும் எழுந்த நூலேயாம் என்பதனை அதனை ஓதுவோர் எளிதின் உணருவர்.

மேற்கூறிய நீலகேசியினின்றும் வேறு சில நூல்களினின்றும் இற்றைநாள் நமக்கு முழுவுருவத்திற் கிடைத்துள்ள செய்யுள் பத்தொன்பது மட்டுமே. இப் பத்தொன்பது செய்யுட்களையல்லாமல் நீலகேசியின் உரையாசிரியராகிய 'சமயதிவாகர வாமன முனிவர்' தமது உரையிற் குறிப்பிட்டுள்ள ௧௧ செய்யுள்களின் முதனினைப்புகளும் உள்ளன. இவர் காட்டும் இக் குண்டலகேசியின் முதனினைப்புடைய செய்யுள்கள் தத்தம் மகத்தே அக் கருத்துகளைக் கொண்டிருந்தன என்பதனையும் அவருரையை ஆழ்ந்து பயில்வோர் உணர்தல் கூடும். அந்த முதனினைவுகளை மட்டும், ஈண்டுக் காட்டுவாம். அவை யாவன :—

௧. "முன்றான்", (இச் செய்யுள் வீரசோழியத்தினின்றும் முழுவுருவத்தோடு கிடைத்துளது), ௨. "தன்புறத்த", ௩. "தலைவைத்த", ௪. "எல்லையுள் விழவினுள்", ௫. "காசமுங் காலமும்", ௬. "கருத்தினாற் பெற்றோபோ", ௭. "உடம்பளவிற்றுயிர்", ௮. "பழுதையாற் பாம்புண்டு", ௯. "கலப்பாடி", ௧௦. "ஒருவகையால்", ௧௧. "எழும் பயிற்றி", ௧௨. "காலினாற் சுமந்துய்ப்பான்", ௧௩. "மக்கட் பண் பழியா", ௧௪. "இயற்றிய வுடம்பிட்டால்", ௧௫. "வினைவிற்கப் பயன்", ௧௬. "தொல்லைக்கட் செய்யப்பட்டது", ௧௭. "அடுப்புத் துடைப்பம்", ௧௮. "துடிக்கும் வண்ணத் தின்மையி லுயிர்களை", ௧௯. "துன்பந் தீவினையின் பயன்", ௨௦. "நின்ற துன்பம்", ௨௧. "ஒப்பல் வேட்கை", ௨௨. "போக வேட்கை", ௨௩. "வாயினல் வேட்கை களைவான்", ௨௪. "தீவினையின் பயன்றுய்ப்பல்", ௨௫. "கொல்லா வேட்கை", ௨௬. "பூமைத்தான்", ௨௭. "காமங்கூர்", ௨௮. "தன்னவூசி", ௨௯. "பொய்யையஞ்சி யுரையாமை", ௩௦. "இவ் விடத்தோ ரகைக்கோட்சிறை", ௩௧. "இங்ஙிலத்துப் புகுந்திலன்", ௩௨. "கோறலையஞ்சி", ௩௩. "கொன்று தின்றான்", ௩௪. "வாவிதினூ ஊான்", ௩௫. "புய்ந்துக்க பீலி", ௩௬. "ஊன் விற்ப கொள்வ", ௩௭. "விலைக்குக் கொள்வானை", ௩௮. "செய்வினை கொடுத்தார் விற்ப", ௩௯. "விலைக்குவிற் பான்செய் வஞ்சமும் வேண்டி, விலைக்குக் கொள் வானே, படவிதியாயோ", ௪௦. "பூவினைக் காட்டல்", ௪௧. "தின்றபுலால் கொலைநேர்விக்கும்", ௪௨. "சுக்கில சோணிதம்", ௪௩. "உள்ளங்கொள்ள", ௪௪. "ஓதின வுண்பராவது நன்றெனின்", ௪௫. "சேவன் பரிணமித்தம்", ௪௬. "ஒழிந்த படை பறித்தலென்", ௪௭. "பேய் பெற்ற தாய்பற்று", ௪௮. "காயந்தன்னை வருத்தல் தவமென்பாய்", ௪௯. "வெயிலுணிற்றலெனவும்", ௫௦. "துன்பம் வேண்டில்", ௫௧. "மற்றமா மரங்களும்", ௫௨. "உறங்குதலான்", ௫௩. "கட்டுச் சோறவாவுறு", ௫௪. "மெய்தீண்ட விலை", ௫௫. "தீயுற்ற கொடிபரும்பு", ௫௬. "தோற்ற", ௫௭. "ஒப்ப வற்றாலே", ௫௮. "சேர்த்திட", ௫௯. "நேரொத்த வாடுறு",

௬௦. "மண்களும் கற்களும்", ௬௧. "வந்திங்கு வைகுங்கள்", ௬௨. "ஓரறிவா முயிர்", ௬௩. "நின்றுகுந் திரிவாகும்", ௬௪. "நின்றுந் பிரகாசமேபோல்", ௬௫. "நித்ய குணங்களால்", ௬௬. "அநித்ய குணங்களால்", ௬௭. "குணங்குணி", ௬௮. "பல குணமாய்", ௬௯. "சொல்லேன் யானென்றியே", ௭௦. "பரிணமிக்கும் பொருள்", ௭௧. "பிறந்த கும்மாயம்", ௭௨. "பயற்றது திரிவாக", ௭௩. "தோன்றினவுங் கெட்டனவும்", ௭௪. "குணியாய்ப் புற்கலம்", ௭௫. "புற்கலமிரண்டின்", ௭௬. "அங்கையுணெல்லிக்காய்", ௭௭. "கந்திடத்துக் காணுதாயின்", ௭௮. "கொல்லேற்றின் கூர்ங்கோடு", ௭௯. "ஒருவகையாற் குழக்கன்று மொருவகையான் முயருாறும்", ௮௦. "இடக்கை வகையால்", ௮௧. "காற்றிறத்தாற் கையில்லை", ௮௨. "நீயன்றென்றுரைப்ப", ௮௩. "உணராமை காரணத்தால்", ௮௪. "ஒன்றின தியற்கையால்", ௮௫. "பிறிதிடத்துள்ள", ௮௬. ஒரு காலத்துள பொருள்", ௮௭. நூலிரும்பாய்": ௮௮. "பிறிதொன்றினியற்கை", ௮௯. "நீயுரைக்கும் வீட்டிடமும்", ௯௦. "போர்த்திங்கு வாரல்", ௯௧. "உணர்வவர்க்குப் பிறக்குமேல்", ௯௨. "கருவியாற் பொருள்கள்", ௯௩. "காரணத்தை யிலனுகி", ௯௪. "முறையுணரானென்றியேல்", ௯௫. "உடனுகப் பொருள்களை யொருங் குணர்ந்தான்", ௯௬. "பொதுவாய குணத்தினுல்", ௯௭. "வரம்பில்லாப் பொருள்களை", ௯௮. "எப்பொழுது மறியானேல்", ௯௯. "யோனிமற்றவர்க்குரை".

எனவருகின்ற இத் தொண்ணூற்றென்பது முதல்களையுடைய தொண்ணூற்றென்பது செய்யுளும் குண்டலகேசி என்னும் பெருங் காப்பியத்துச் செய்யுள்களே என்று ஐயமின்றி அறிகின்றோம். இன்னும் நீலகேசி உரைக்கிடையே வருகின்ற

"சென்றெய்து மவத்தையே, சிலவற்றாற் றரப்படுமோ
வன்றியு மப்பொருள்தோ றவ்வவத் தன்மையோ
நின்றதூஉந் திரிந்ததூஉ மன்றுமி னிகழ்வில்லை
யொன்றிய வொருவகையே லொருவகையாற் கேடுண்டோ"

என்னும் செய்யுளும் (நீலகேசி ௩௭௭ஆஞ் செய்யுளுரை.)

"அளவிலாக் கடைப்பிடி யொருநான்கும் பிறப்பென்னுங்
களையறுந் தன்பத்துக் கற்பநா ளுயிரமும்
விளைவாய போதியை யுறுமளவும் வினைமடியா
தளர்வின்றி யோடிய தாளினு னல்லனே"

என்னும் செய்யுளும் குண்டலகேசி என்னும் அம் மாபெருங் காப்பியத்துச் செய்யுள்களே என்று ஊகிக்கலாம்.

இனி, நீலகேசியாசிரியர் இம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய குண்டலகேசியின்கண், குண்டலகேசி என்பவள் ஆவண நகரத்

தின்கண் நாதகுத்தனார் என்னும் ஆருகதரோடு வாதிட்டு ஆருகத சமயக் கொள்கைகட்கெல்லாம் குற்றம் கூறி ஆருகதர் மெய்க்காட்சி யுடையாரல்லர் என்று நிலைநாட்டி நாதகுத்தனாரை வென்றதாக வருகின்ற பகுதியில், குண்டலகேசி தம் மதத்திற்குக் கூறிய குற்றங் கட்கெல்லாம் விடையிறுத்தற் பொருட்டே மொக்கலவாதச் சருக் கத்தைப் பாடியிருத்தலை அச் சருக்கத்தை ஓதுவோர் எளிதில் உணரலாம். நூலாசிரியர் கருத்துணர்ந்த உரையாசிரியராகிய சமய திவாகர முனிவரும் மொக்கலவாதச் சருக்கத்தின்கண் மொக்கலன் கூற்று ஒவ்வொன்றற்கும் இஃது இன்ன காதை (செய்யுள்) யை வழி மொழிந்தபடியாம் என்று மேலே கூறிய செய்யுள் முதல்களைக் குறிப்பிட்டுப் போகிறார். மற்று நூலாசிரியர் தாமும் "மொக்கலன் நீலகேசியைக் கண்டுழி; நீலகேசி, "யான் இரண்டு பௌத்த சமயக் கணக்கர்களை வென்று வாகை சூடினேன். அவருள் ஒருத்தி குண்டலகேசி என்பவள், மற்றொருவன் அருக்கச்சந்திரன் காண்" என்றாளாக அது கேட்ட மொக்கலன் "ஏடி! பொய்யே புகன்றனை. குண்டலகேசி 'பேராசிரியை' அவளை நீ வெல்லுதல் எங்ஙனம்? நுங்கள் ஆருகத சமயத்துப் பேராசிரியராகிய நாதகுத்தனாரையே அவள் வென்றனள். அவள் உன்பாற் றோல்வி யுறுவளோ? என்றானாக; அதுகேட்ட நீலகேசி, ஏடா! எளியோய் நீ என்னை யறிந்திலை. குண்டலகேசி ஆவண நகரத்துள் நாதகுத்தனாரை வென்றனள் என்று செருக்குறுகின்றனை. ஆவண நகரத்தே குண்டலகேசி நாதகுத்தனாரை வென்ற வகையை அவள் கூறியவாறே நீ எனக்குக் கூறிக்காண்! யான் அவள் கூற்றெல் லாம் குற்றமுடையன என்பதனையும் நாதகுத்தனார் கூறியவையெல் லாம் குற்றமற்ற வாய்மைகளே யாதலையும் கூறி எமது ஆருகத சமயச் சிறப்பை இவ்வவையோரறிய நிலைநிறுத்துவல் என' அதுகேட்ட மொக்கலனும் அவ்வாறே குண்டலகேசி கூற்றினையே எடுத்து ஒவ்வொன்றாகக் கூறி வந்தான். அவற்றிற்கெல்லாம் நீலகேசி விடை கூறி மொக்கலனைத் தோற்பித்தாள் என்றே கூறக் காண்கின்றோம். இவ்வுண்மையைச் சிறப்பாக நீலகேசி ௨௮௪, ௫, ௬, ௭, ௮ ஆகிய ஐந்து செய்யுளாலும் பொதுவாக மொக்கலவாதச் சருக்கத்தில் எஞ்சிய செய்யுள்களாலும் நன்குணரலாம். எனவே, மேற்காட்டப் பட்ட செய்யுள் முதற்குறிப்பனைத்தும் குண்டலகேசியினின்றும் எடுத்து உரையாசிரியரால் நீலகேசியுரையிற் குறிக்கப்பட்டவையே என்பது துணிவாம்.

இனி, நீலகேசியாசிரியர் தம் நூலில் புத்தமதம் முதலாகப் பூதவாத மதம் ஈறாக ஒன்பது சமயங்களை மறுத்துள்ளாராயினும் பௌத்த சமயத்தை மறுப்பதே அவருடைய முதன்மையான குறிக் கோள் என்பதனை அச் சமயத்திற்காக அவர் நான்கு சருக்கங்களை வகுத்துக்கொண்டமையானும், குண்டலகேசிக் காப்பியத்தை மறுப் பதன் பொருட்டே அவர் குண்டலகேசியையும் அவட்கு ஆசிரியனை

அருக்கச் சந்திரனையும் அவனுக்கு ஆசிரியனான மொக்கலனையும் அவனுக்கு ஆசிரியனான புத்தனையும் தம் நூலில் வலிந்திழுத்துப் பாத்திரமாக்கிக் கொண்டிருக்கின்றனர் என்பதையும் இங்ஙனம் மற்றையோரையும் பாத்திரமாக்கியது நூலின்கண் ஒரு சருக்கம் பெரும் பகுதியைக் கவர்ந்துகொள்ளாமைப் பொருட்டும் பயில்வோர்க்குச் சுவைமிகுதற் பொருட்டுமேயாம் என்பதனையும் நீலகேசியை ஓதும் நுண்ணுணர்வுடையோர் எளிதில் உணர்வார் என்க.

இனிக் குண்டலகேசி என்பவள் குண்டலகேசி என்னும் காப்பியத் தலைவியாவாள். இவளுடைய வரலாற்றையும் யாம் நீலகேசியுரையாலேதான் ஒரு சிறிது உணர முடிகின்றது. இக் குண்டலகேசியின் வரலாறாக நீலகேசியுரையாசிரியரான சமய திவாகரர் கூறுவது வருமாறு :—

"குண்டலகேசி" யென்பாளொரு வைசிய கன்னிகை. இவள் ஒரு நாள் பிரசாதத் தலத்து (மாளிகையில்) விளையாடுகின்றாளாக, ஒரு இதவப வைசிய வைசிய புத்திரன் (குற்றவாளியாகிய செட்டி மகன்) 'காளன்' என்பான், இவன் பௌத்த தரிசனங்கொண்டு பல வழியும் சோரவிருத்தி (களவுத் தொழில்) பண்ணிச் செல்வானை அரசன் வதிக்க (கொல்ல) வென்றேவச் சிறைப்பட்டுச் செல்வானை, முன்சொன்ன குண்டலகேசி கண்டு காமப் பரவசையாக (காமுற்றவளாக :), அதனை அறிந்து அவளுடைய பிதா (தந்தை) ராசாவைக் கண்டு யாதானு மோருபாயத்தால் மீட்டு இவனுக்குக் குண்டலகேசி யென்னும் கன்னிகையினை விவாகவிதியாற் கொடுத்தினிது செல்கின்ற காலத்து ஒருநாள் பிரணய கலகத்து நர்மோக்தி காலத்து (ஊடல் மிகுதியால் சினந்திருந்தபொழுது) "நீ கள்வனன்றோ?" என்று குண்டலகேசி சொல்லக் காளனும் தன்னுள்ளத்தே சினங்கொண்டு பின்பொருநாள் வித்தியாசாதன வியாசத்தால் (வித்தை பயிற்றுவல் என்னுமொரு காரணங் காட்டி) இவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத்தேறி நீ என்னை யிவ்வாறு சொல்லுதலின் யானுன்னைக் கொல்லத் துணிந்தேன் என்னக் குண்டலகேசியும் "தற்கொல்லியை முற்கொல்லிய' என்பதற்கே இவனை யான் கொல்வேனென நினைந்து "யான் சாகிறேனாகி லும்மை வலங்கொண்டுசாவல்" என, அதற்கியைந்த காளனை வலங்கொள் கின்றாள். வரையினின்றும் விழ நூக்கினள் (உந்தினள்). நூக்கன் காள னும் புத்த ஸ்மரணத்தால் (நினைவால்) மோக்ஷித்தான் (வீடுபெற்றான்) குண்டலகேசியும் பர்த்ரு (கணவன்) விரஹ துக்கிதையாகித் துறப் பேனென நினைந்துப் பரசமயங்களெல்லாம் நாவல் நட்டுச் சயித்துப் பௌத்த தரிசனம் கொண்டு முத்தி பெற்றனள்" என்பதாம்.

உயிர்களுக்கு வருகின்ற துன்பங்களுக்குக் காரணம் காம வெகுளி மயக்கங்களே என்னும் கோட்பாட்டையுடைய பௌத்த நூலாசிரியர்

அக் குற்றங்களைத் தமது இலக்கியத் தலைவர்பாலே வைத்துக் காட்டு வதனை, யாம் மணிமேகலையினும் காணலாம். மணிமேகலையைப் பின்பற்றி எழுந்த இக் குண்டலகேசியின் வரலாறும் ஓரளவு மணிமேகலை வரலாற்றினையே ஒத்திருத்தல் இயல்பே.

இனி, நீலகேசியினின்றும் எடுத்து மேலே குறிக்கப்பட்டுள்ள குண்டலகேசிச் செய்யுள் முதனினைவுக் குறிப்புகளுக்குரிய அச் செய்யுட்கள் ஒவ்வொன்றும் தத்தமக்குள் கொண்டிருந்த பொருள்கள் இன்னின்னவை என்பதனையும் அந் நூலின்கண் மொக்கலன் கூற்றாக வருகின்ற செய்யுட்களாலும் சிறந்த உரையாசிரியராகிய சமய திவாகரர் உரை விளக்கங்களானும் யாம் நன்குணரலாம். குண்டல கேசிச் செய்யுட்களின் அம் முதற்குறிப்புகளின் சொல்லமைதியைக் காணும்பொழுதே அவையிற்றின் முழுவுருவங்களையும், ஏன்? அப் பெருங்காப்பியத்தின் முழுவுருவத்தையும் காணப் பெற்றிலேமே! என்று தீந்தமிழ்ச் சுவையுணர்வார் நெஞ்சகம் வருந்துதல் ஒருதலை. கழிந்தது கருதலிற் பயனென்னை? இற்றைநாள் நம் கைக்கெட்டிய அப் பத்தொன்பது செய்யுட்களையேனும் அக் குண்டலகேசியின் நினைவுச் சின்னமாகப் போற்றி வைப்பது நங்கடமை என்றுணர்ந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் அவையிற்றிற்கு உரையும் வரைவித்து அழகிய நாலுருவந் தந்து இப்பொழுது வெளியிடு கின்றனர். இதற்குத் தமிழுலகம் அக் கழகத்தார்க்கு நன்றிக் கடன் உடையதாக அச் செய்யுட்கு உரை எழுதும் பணியை எம்பாற் றந்தமைக்கு யாமும் பொதுவாக அக் கழகத்தார்க்கும் சிறப்பாக அக் கழகப் பொறுப்பாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை யவர் கட்கும் பெரிதும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேம். வாழ்க குண்டலகேசி வண்புகழ்! வாழிய செந்தமிழ்.

இங்ஙனம் :
உரையாசிரியன்,
பொ. வே. சோமசுந்தரன்

# (உ) குண்டலகேசி

---

## கடவுள் வாழ்த்து

"முன்றான் பெருமைக்க ணின்றான்முடி
வெய்து காறு
நன்றே நினைந்தான் குணமேமொழிந்
தான்றனக்கென்
றொன்றானு முள்ளான் பிறர்க்கேயுறு
திக்கு ழந்தான்
அன்றே யிறைவ னவன்றாள்சர
ணாங்க ளன்றே.

(இதன் பொருள்) முன் தான் பெருமைக்கண் நின்றான் - உலகின்கண் பிறர் யாரும் மெய்யுணர்ந்து வீடுபேற்று நெறியின்கண் நிற்றற்கு முன்பே தான் அம் மெய்யுணர்வினை யெய்தித் துறவின்கண் நிலைபெற்று நின்றானாகி; முடிவு எய்துகாறும் - தான் பரிநிருவாணம் என்னும் அவ் வீடுபேற்றினை எய்துமளவும்; நன்றே நினைந்தான் - பிறவுயிர்கட்கெல்லாம் நன்மையுண்டாகும் நெறியினையே ஆராய்ந்துணர்ந்தான்; அன்றே-அந்நாளே; குணமே மொழிந்தான் - அங்ஙனம் தான் ஆராய்ந்துணர்ந்த நல்லறங்களையே மக்கட்குச் செவியறிவுறுத்தினான்; தனக்கு என்று ஒன்றானும் உள்ளான்-தான் தனக்கென்று யாதொரு நன்மையையும் வேண்டுகிலனாய்; பிறர்க்கே உறுதிக்கு உழந்தான்-பிறருடைய நன்மையின் பொருட்டே முயன்றனன்; அவன் இறைவன் - அத்தகைய சான்றோனாகிய புத்த பெருமானே எமக்குக் கடவுள் ஆவான்; நாங்கள் சரண் - ஆதலால் அவ்விறைவன் திருவடிகளுக்கே அடியேங்கள் அடைக்கலமாகி வணங்குவேம் என்பதாம்.

(விளக்கம்) உலகின்கண் முதன்முதலாக மெய்க்காட்சி பெற்று அக் காட்சிவழி நின்றொழுகியவன் எங்கள் புத்தபெருமானே ! என்பாள் முன்றான் பெருமைக்கண் நின்றான் என்றாள். பெருமை, ஈண்டுத் துறவொழுக்கம். என்னை?

''ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு'' —குறள், உக

என்பவாகலான். நிற்றலாவது - அவ்வொழுக்கத்திற் பிறழாது ஒழுகுதல். முடிவு - என்றது, பரிநிருவாணத்தை (வீடுபேற்றினை).

நன்று - நன்மை தரும் அறம். குணம் - ஈண்டு - நன்மைமேற்று. தனக்கு என்று - தான் இன்புறுதற் பொருட்டு. ஒன்றுனும் - யாதொரு பொருளையும்,

"இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து" —குறள், ௩௪௪

எனவும், "வீடல்வேண்டும் வேண்டியவெல்லாம் ஒருங்கு" எனவும், "பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை" எனவும், "தலைப்பட்டார் தீரத் துறந்தார்" எனவும், ஓதுபவாகலான் "தனக்கென்று ஒன்றுனும் உள்ளான்" எனல் வேண்டிற்று. அன்று, ஏ : அசைகள்.

இனி, துறந்தோர் சிலர் காடுபற்றியும் கனவரை பற்றியும் மலை முழைஞ்சு புக்கிருந்தும் தனித் துறைதலும் ஒருவகையாற் றன்னலமே கருதிப் பிறர் நலம் பேணுப் பிழையுடைத்து; எம் மிறைவனே தான் மெய்யுணர்ந்த நன்றுன்கண் நிலைபெற்றுழியும் அவ்வாறு தனித்திராமல் மன்னுயிரின் துன்பமெல்லாம் போக்குதல் வேண்டும் என்னும் பேரருள் காரணமாகப் பெரிதும் முயல்வானுயினன் என்பாள் பிறர்க்கு உறுதிக் குழந்தான் என்றுள். அவன் என்றது அத்தகைய சான்றோனுகிய எங்கள் புத்தபெருமான் என்பதுபட நின்றது. அவன் இறைவன், அவன் தான் சரண் என அவன் என்பதனை மூன்றுங் கூட்டுக. சரண் - அடைக்கலம். அடைக்கலம் புகுதலாவது அவன் கூறிய அறநெறியிலே உறுதியாக நின்றொழுகுதல். இனி இக் குண்டலகேசிச் செய்யுளை வழிமொழிந்து வருகின்ற நீலகேசிச் செய்யுளும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது; அது வருமாறு :

"ஆதிதான் பெரியனு யறக்கெடு மளவெல்லா
மூதியமே யுணர்ந்தவ னுறுதரும மேயுரைத்தான்
யாதனையுந் தான்வேண்டா னயலர்க்கே துன்புற்றன்
போதியா னெம்மிறைவன் பொருந்திறு ருயக்கொள்வான்."
—நீலகேசி, குண்டல, உஎ

எனவரும்.

அவையடக்கம்

உ. நோய்க்குற்ற மாந்தர் மருந்தின் சுவை நோக்க கில்லார்
தீக்குற்ற காத லுடையார் புகைத் தீமை யோரார்
போய்க்குற்ற மூன்று மறுத்தான்புகழ் கூறு வேற்கென்
வாய்க்குற்ற சொல்லின் வழுவுப்வழு வல்ல வன்றே.

(இ - ள்.) நோய்க்கு உற்ற மாந்தர்-பிணிகட்கு உறைவிடமாகப் பொருந்திய மக்கள்; மருந்தின் சுவை நோக்ககில்லார் - அப்பிணி தீர்தற்குக் காரணமான மருந்தினது சுவை இனிதோ? இன்னுதோ? என்று ஆராய்வாரல்லர், தம் பிணி தீர்தல் ஒன்றே குறிக்கொள்வர்; தீக்கு உற்ற காதல் உடையார்-குளிரால் வருந்தித் தீக்காயும் அவாவுடையோர்; புகைத்தீமை ஓரார் - அத் தீயின் கண்ணதாகிய புகை தாக்குச் செய்யும் தீமையை ஒரு பொருளாகக் கொள்ளார்; போய்க் குற்றம் மூன்றும் அறுத்தான் - அரசவின்

பத்தையும் துறந்துபோய் மனமொழி மெய்களால் விளையும் மூவகைக் குற்றங்களையும் அறுத்தவனுமே புத்ததேவனுடைய; புகழ் கூறுவேற்கு - புகழைப் பாடுகின்ற என்பால்; வாய்க்கு உற்ற சொல்லின் வழுவும் - அறியாமை காரணமாக என் வாய்க்கு இயல்பாகவமைந்த சொற்களின் குற்றங்களும்; வழு அல்ல - அப் புத்தன்பால் அன்புடையாராய் அவனறங் கொண்டுய்ய வெண்ணும் சான்றோருக்குக் குற்றங்களாகமாட்டா; என்பதாம்.

(வி - ம்.) நோய்க்குற்றமுடைய பாந்தர் எனினுமாம். நோயுடையோர் தம் நோய்தீரக் கருதுவதல்லது அந்நோயின் தீர்வுகருதித் தாமுண்ணும் மருந்து இனிதோ? இன்னாதோ? என்று ஆராய்வதிலர். எனவே, பிறவிப்பிணிக்கு மருந்தாகிய புத்ததேவருடைய அறத்தையேகூறுகின்ற எமது நூலின்கண் அவ்வறத்தையே நோக்குவதல்லது என் அறியாமை காரணமாகவுண்டாகிய குற்றங்களை நோக்கி இந்நூலை இகழ்வாரல்லர். ஆதலால் யானுமிந்நூலைச் செய்யத்துணிந்தேன் என்பது கருத்து. தீக்குற்ற காதல்......ஓரார் என்பதற்கும் இங்ஙனங் கூறிக்கொள்க.

தீக்குற்ற காதலுடையார் என்றது குளிரால் வருந்தித் தீக்காய அவாவுவோரை. புகைத்திமை-புகையாலுண்டாகுந் துன்பம். அவை மூச்சு முட்டுதல்; கண்கரித்தல் முதலியன.

போய் என்றது அரசவின்பத்தைத் துறந்துபோய் என்றவாறு.

மூன்று குற்றம் - மெய் மொழி மனம் என்னும் மூன்றிடத்தும் தோன்றுகின்ற மூவகைக் குற்றங்கள். இவற்றுள் மெய்யிற்றோன்றுங் குற்றங்கள் கொலை களவு காமம் என்பன. மொழியிற்றோன்றுவன பொய் குறளை கடுஞ்சொல் பயனில்சொல் என்பன. மனத்திற்றோன்றுவன வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சி என்பனவாம். என்னை?

"தீவினை என்பது யாதென வினவின்
ஆய்தொடி நல்லாய் ஆங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழைவு
உலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
உள்ளந் தன்னில் உறுப்பன மூன்றும்"

எனவரும் மணிமேகலையானும் உணர்க.

இனிக் குற்றம் மூன்றும் என்பதற்கு "காமம் வெகுளி மயக்கம்" என்னும் மூன்று குற்றங்களையும் எனினுமாம். என்னை?

"யாமே லுரைத்த பொருள்கட் கெல்லாம்
காமம் வெகுளி மயக்கங் காரணம்"—மணி, ௩௦ - ௫ - ௬௨

எனப் பௌத்தநூல் கூறுதலும் காண்க. இனி, திருவள்ளுவனாரும்,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்" —குறள், ௩௬௦

எனறோதுதலும் காண்க.

இனி மூன்று குற்றம் என்பதற்குப் பௌத்தர் துறவோர்க்குப் மட்டுமே உரிய குற்றங்களாகக் கூறுகின்ற அவாவும் பற்றும் பேதைமையும் ஆகிய மூன்றும் எனினுமாம். என்னை?

"குலவிய குற்றமெனக் கூறப் படுமே
அவாவே பற்றே பேதைமை யென்றிவை"
—மணி, ௩௦ : ௧௬௬ - ௭௦

என்றும் ஓதுபவாகலான்.

இது பேதைமை முதல் பன்னிரண்டாக விரித்துக் கூறியதனை மூன்றாகத் தொகுத்தோதியபடியாம். இவற்றை ஆசிரவம் என்றும் கூறுப. என் வாய்க்குற்ற சொல்லின் வழு என்றது, அறியாமை காரணமாக இயல்பாகவே என் வாய்க்குப் பொருந்திய சொற்குற்றம் என்றவாறு. (௨)

மனந்தூயோர்க்கே இன்பமுளவாகும் எனல்

௩. வாயுவினை நோக்கியுள மாண்டவய நாவாய்
ஆயுவினை நோக்கியுள வாழ்க்கையது வேபோல்
தீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்
தூயவனை நோக்கியுள துப்புரவு மெல்லாம்.

(இ - ள்.) மாண்டவய நாவாய் - மாண்புடைய வலிமை மிக்க மரக்கலங்கள்; வாயுவினை நோக்கி உள - தமது இயக்கத்திற்குக் காற்றினையே பெரிதும் அவாவியிருப்பனவாகும்; வாழ்க்கை - உயிர்களின் வாழ்வு தானும்; ஆயுவினை நோக்கி உள - தமக்கென ஊழ் வகுத்த அகவையையே குறிக்கொண்டிருப்பனவாம்; அது போல் - அங்ஙனமே; துப்புரவும் எல்லாம் - பொறிகளானுகரப்படும் நுகர்ச்சிகளும் பிறவுமாகிய நன்மைகளெல்லாம்; தீயவினை நோக்கும் - தீவினையை நயந்து நோக்கும் நோக்கமும்; இயல்சிந்தனையும் - அத் தீவினை செய்தற்குரிய நெறிகளிலே செல்கின்ற நினைவும்; இல்லாத் தூயவனை - தன்பாற் சிறிதுமில்லாத தூய்மையுடைய சான்றோனையே; நோக்கி உள - தாம் எய்துதற்குரிய இடமாக எதிர்பார்த்திருப்பனவாம் என்பதாம்.

(வி - ம்.) மரக்கலங்கள் தமக்கு ஆதாரமாகக் காற்றை எதிர்பார்த்திருப்பதுபோலவும், உயிரினங்களின் வாழ்வுகளெல்லாம் தத்தமக்கு ஊழ் வரைந்துள்ள வாழ்நாளையே ஆதாரமாகக் குறிக்கொண்டிருப்பது போலவும், இவ்வுலகத்துள்ள இன்பங்களும் புகழ்களும் தீவினை செய்தற்கண் ஆர்வமும் அவ்வழியியங்கும் எண்ணங்களும் சிறிதுமின்றி மனந்தூயனாகிய நல்லோனையே தமக்கு ஆதாரமாகக் கொண்டுள்ளன என்றவாறு.

எனவே மனந்தூயரல்லாதார்க்கு இவ்வுலகத்து இன்பமும் பிறநலங்களும் உளவாகா என்பது கருத்தாயிற்று. ஆகவே இம்மையின்பங்

களையும் புகழ் முதலியவற்றையும் விரும்புவோர் மனநலம் உடைய ராகவே அவை யெல்லாந் தாமே வந்தெய்தும். மனந்தூயரல்லார்க்கு இவை எய்தா; ஆதலின் மனந்தூயராய்த் தீவினையை என்றும் அஞ்ச வேண்டும் என்றறிவுறுத்தவாறாயிற்று. இதனோடு,

"மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை" —குறள், ௪௫௬

எனவும்,

"மனநலம் மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்" —குறள், ௪௫௭

எனவும்,

"மனநலத்தின் ஆகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து" —குறள், ௪௫௯

எனவும், வரும் அருமைத் திருக்குறள்களையும்,

"பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து—மெய்யில்
புலமைந்துங் காத்து மனமா சகற்று
நலமன்றே நல்லா றெனல்" —நீதிநெறி விளக்கம், ௬௦

எனவும்,

"மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தீயவே யாகும்—எனைத்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்" —நீதிநெறி விளக்கம், ௫௮

எனவும் வரும் குமரகுருபரவடிகளார் பொன்மொழிகளையும் ஒப்பு நோக்குக. (௩)

மெய்த்தவம்

௪. போர்த்தலுடை நீக்குதல் பொடித்துகண் மெய்பூசல்
கூர்த்தபனி யாற்றுதல் குளித்தழலு ணிற்றல்
சார்த்தரிடு பிச்சையர் சடைத்தலைய ராதல்
வார்த்தையிவை செய்தவ மடிந்தொழுக லென்றான்.

(இ - ள்) உடைபோர்த்தல் - காவி ஆடை முதலியவற்றால் உடம்பினைப் போர்த்துக் கோடலும்; நீக்குதல் - ஆடையுடாது விட்டுவிடுதலும்; பொடித் துகள் மெய்பூசல் - சாம்பல் முதலிய வற்றை உடல் நிரம்பப் பூசிக் கோடலும்; கூர்த்த பனி குளித்து ஆற்றுதல் - மிக்கபனியினும் (மழையினும்) நீருட்குளித்துநின்று

அவற்றாலுண்டாகும் துன்பங்களைப் பொறுத்துக் கோடலும்; அழலுள் நிற்றல் - கோடையின்கண் தீயினுள் நிற்றலும்; சார்ந்தார் இடு பிச்சையர் ஆதல் - தம் சமயத்தைச் சார்ந்துள்ள இல்லறத்தார் இடுகின்ற பிச்சையை ஏற்றுண்டு திரிதலும்; சடைதலையர் ஆதல் - சடை வளர்த்துக் கட்டிய தலையினையுடையராதலும் (அன்றி மழித்த தலையையுடையராதலும்), இவை வார்த்தை - இன்னோரன்ன செயலெல்லாம் வறிய சொல்லளவேயன்றித் தவவொழுக்கமாகமாட்டா; செய்தவம் மடிந்து ஒழுகல் என்றான் - இனி வாய்மையாகச் செய்கின்ற தவவொழுக்கம் யாதெனின் மனம் பொறிகள் வழியாகப் புலன்களிடத்தே செல்லாமல் அடங்கி ஒழுகும் ஒழுக்கமேயாம் என்று கூறினான்; என்பதாம்.

(வி - ம்.) உடை போர்த்தல் - காவியாடை துவராடை முதலியவற்றால் உடம்பு முழுதும் போர்த்தல். காவியாடை போர்ப்பவர் வேதவாதியர். துவராடை போர்ப்போர் பௌத்தர். பல்வேறு ஆடைகள் போர்க்கும் பல்வேறு சமயங்களும் அடங்குதற்கு உடை போர்த்தல் எனப் பொதுவினையோதினர். பொடியும் துகளும் என உம்மை விரித்துப் பொடி பூசுவோர் சைவசமயத்தினர் என்றும், துகள் பூசுவோர் வைணவ சமயத்தினர் என்றுங் கொள்ளலாம். ஈண்டுத் துகள்: மண்ணும், சூரணமும் என்க. கூர்த்தல் - மிகுதல். பனி கூறியதனால் மழையும் கொள்க. சடை கூறியதனால் மழித்தலும் கொள்க. பிச்சை கூறியதனால் கிழங்கு தழை காய்கனி சருகு முதலியன உண்ணலும் கொள்க. வார்த்தை - ஈண்டுப் பொய்யாய புகழ் என்பதுபட நின்றது.

இனி இதனோடு,

"வீடு வேண்டி விழுச்சடை நீட்டன்மெய்ம்
மூடு கூறையின் மூடுதல் வெண்டலை
ஓடு கோடலு டுத்தலென் றின்னவை
பீடி லாப்பிற விக்குவித் தென்பவே" —சீவக, ௧௪௩௭

எனவும்,

"ஏம நன்னெறி யெந்நெறி யன்னெறி
தூய்மை யின்னெறி யாமுந் துணிகுவம்" —சீவக, ௧௪௩௮

எனவும்,

"தூங்குறிக் கிடந்து காயும் பழங்களுந் துய்ப்ப நில்லா
பாங்கலா வினைகள் என்றார் பகவனு ரெங்கட் கென்னின்
ஓங்குநீண் மரத்திற் றூங்கு மொண்சிறை யொடுங்கல் வாவல்
பாங்கரிற் பழங்க டுய்ப்பப் பழவினை பரியு மன்றே"

—சீவக, ௧௪௩௯

எனவும்,

"அல்லியும் புல்லும் உண்டாங் காரழ லைந்து னின்று
சொல்லிய வகையி னேற்பத் துணியும்வெவ் வினைக ளென்னிற்

கல்லுண்டு கடிய வெம்புங் கானுறை புறவ மெல்லாம்
புல்லிய வினையை வென்று புறக்கொடை காணு மன்றே''
—சீவக, கசஙௐ

எனவும்,

''நீட்டிய சடைய மாகி நீர்மூழ்கி நிலத்திற் சேர்ந்து
வாட்டிய வுடம்பின் யாங்கள் வரகதி விளைத்து மென்னிற்
காட்டிடைக் கரடி போகிக் கயமூழ்கிக் காட்டி னின்று
விட்டினை விளைக்க வேண்டும் வெளிற்றுரை விடுமி னென்றான்''
—சீவக, கசஙக

எனவும் வரும் சீவகன் மொழிகளும்,

''மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்'' —குறள், உஅ௦

எனவும்,

''மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்'' —குறள், உஎஅ

எனவும்,

''புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து'' —குறள், உஎஎ

எனவும் வரும் திருவள்ளுவர் பொன்மொழிகளும்,

''நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே—கஞ்சுகம்
எப்புலமும் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது'' —நீதிநெறி விளக்கம், கூ௩

எனவருங் குமரகுருபரவடிகளார் மணிமொழியும் ஒப்புநோக்கற் பாலன. (௭)

நகர்வினுல் அவாவறுத்தல் கூடாதெனல்

௮. வகையெழிற் றோள்க ளென்றும்
மணிநிறக் குஞ்சி யென்றும்
புகழெழ விகற்பிக் கின்ற
பொருளில் காமத்தை மற்றோர்
தொகையெழுங் காத றன்னாற்
றுய்த்தியாந் துடைத்து மென்பா
ரகையழ லழுவந் தன்னை
நெய்யினு லவிக்க லாமோ.

(இ - ள்) வகை எழில் தோள்கள் என்றும் - இலக்கண வகுப்பிற்கிணைந்த தோள்கள் இவனுடைய தோள்கள் என்றும்; மணி நிறம் குஞ்சி என்றும் - இவனுடைய மயிர்க்குடுமி நீல மணியினது நிறம் போன்ற நிறமுடைய குடுமி என்றும்; புகழ் எழ விகற்பிக்கின்ற - அவற்றிற்கில்லாத புகழ் உண்டாகும்படி பலபடப் பாரித்துக் கூறுதற்குக் காரணமான; பொருள் இல் காமத்தை - வாய்மையினோக்குவார்க்கு ஒருசிறிதும் பொருள் இல்லாததாகிய காமவின்பங்களை; மற்று ஓர் தொகை எழும் காதல் தன்னால் - ஒரு தொகுதியாகத் தம்பால் தோன்றுகின்ற காமக் கிளர்ச்சியாலே; துய்த்து -(அவற்றையெல்லாம் எய்தி) நுகர்ந்து; நாம் துடைத்தும் என்பார் - அக் காமக்குணத்தை அழிக்கக் கடவேம் என்று ஒரு சிலர் கூறுகிற்பர், அங்ஙனம் கூறுவது மடமையேயாம்; என்னை ?, அகை அழல் அழுவந்தன்னை - எரிகின்ற தீப் பற்றிக் கொண்ட காட்டினை; நெய்யினால் அவிக்கலாமோ - நெய் பெய்து அவித்தல் சாலுமோ என்பதாம்.

(வி - ம்.) அவாவினை நுகர்ந்து அவித்தல் கூடும் என்று சிலர் கூறுகின்றனர். இவர் கூற்று நெய்யினால் எரி நுதுப்பேம் என்பார் கூற்றுப்போலப் பேதைமையுடைத் தென்றவாறு.

'என்பினை நரம்பிற் பின்னி உதிரந்தோய்த்து இறைச்சி மெத்திப், புன்புறந் தோலைப் போர்த்து மயிர் புறம் பொலிய வேய்ந்திட்டு, ஒன்பது வாயிலாக்கி ஊன்பயில் குரம்பை'' என இவ்வுடம்பினியல்பினை உள்ளபடியே உணராமல் காமத்தான் மதிமயங்கி வகை எழிற்றோள்கள் என்றும், மணிநிறக் குஞ்சி என்றும் புகழ்எழ விகற்பிக்கின்ற என்றாள். இங்ஙனம் விகற்பித்தற்குக் காமமே காரணமாகலின் விகற்பிக்கின்ற காமம் என்றாள்; காமம் - காமவின்பம். காதல் - காமக் கிளர்ச்சி. அகைதல் - எரிதல். அழுவம் - காடு.

அவிக்கலாமோ என்னும் வினா அவிக்கவொண்ணாது என்னும் அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்தி நின்றது. காமத்தை நுகர்ச்சியால் அவித்தல் கூடாது. நுகர்தற்குரிய பொருள்களின் பொல்லாங்கினை இடையறாது நினைந்து காணுமாற்றால் அவற்றின் இழிதகவுணரின் அவற்றின்பாற் செல்லும் அவா அறும் என்பது பௌத்தர் கொள்கை. இதனை, அசுபபாவனை என்பர். அஃதாமாறு:— துறவியானவன் உடம்பானது பலவகை இழிந்த பொருளால் ஆக்கப் பட்டதென்றும், சாணியின் குவியலில் தோன்றி வளரும் புழுக்கள் போல் கருப்பையிலுண்டாகின்றதென்றும், மலங்கழிக்குமிடம் போல் வாலாமையின் உறைவிடமாயிருப்பதென்றும், அருவருப்பான அழுக்கின் கசிவுகள் இதன்கண் அமைந்த ஒன்பது வாயிலினும் இடையறாது பெருகுகின்றன என்றும், அங்ஙனம் போலே வெறுத்தற்குரிய நாற்றத்தையே வெளிப்படுத்துகின்றது என்றும் மறவாது நினைத்திருத்தல் என்ப. இவ்வாறு, இவ்வுடம்பின் இழிதகவினை நினைவூட்டுமிடங்கள் மணிமேகலையிற் பலவிடங்களினும் காணப்படுதலும் நினைக.

இனி, இவ்வுடம்பின் அகவை நாளும் மிகமிகக் குறுகியது என்று நினைதலும் இதன்பாற்படும் என்க.

"அநித்தம் துக்கம் அநான்மா அசுசியெனத்
தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்"

—மணி. ௨௦ : ௨௫௪ : ௫௫

என்பதுமது. (௫)

இதுவுமது

௬. அனலென நினைப்பிற் பொத்தி
யகந்தலைக் கொண்ட காமக்
கனலினை யுவர்ப்பு நீராற்
கடையற வவித்து மென்னார்
நினைவிலாப் புணர்ச்சி தன்னா
னீக்குது மென்று நிற்பார்
புனலினைப் புனலி னாலே
யாவர்போ காமை வைப்பார்.

(இ - ள்.) அனல் என நினைப்பிற் பொத்தி - கொம்மை விறகினில் தீக்கதுவுமாறு போல நினைவின்கண் கதுவிக்கொண்டு; அகந்தலைக் கொண்ட காமக் கனலினை - நெஞ்சத்தை யிடமாகக் கொண்டு வளருகின்ற காமமாகிய பெரு நெருப்பை; உவர்ப்பு என்னும் நீரால் - வெறுப்பு என்னும் நீர் பெய்து; கடையற அவித்தும் என்னார் - எச்சமின்றி அவித்துவிடுவேம் என்று கருதாராய்; நினைவிலாப் புணர்ச்சிதன்னால் நீக்குதும் என்று நிற்பார் - நினைவிழந்து அதுவேயாகி அழுந்துதற்குக் காரணமான புணர்ச்சியினாலேயே அக் காமத்தை அகற்றுவேம் என்று முனைந்து நிற்கின்றனர் மடவோர்; புனலினைப் புனலினாலே யாவர் போகாமை வைப்பார் — மிக்குப் பெருகுகின்ற வெள்ளத்தை மற்றுமொரு வெள்ளத்தாலே அணையிட்டுத் தடுத்துவைக்கும் ஆற்றலுடையோர் யாவரே உளர் என்பதாம்.

(வி - ம்.) பொத்துதல்-மூடிக்கோடல். அகம்-நெஞ்சு. உவர்ப்பு நீர் : பண்புத்தொகை. உவர்ப்பு - வெறுப்பு.

காமத்தீ மெய்யுணர்வால் அவிவதன்றி நுகர்ச்சியால் அவியாது என்பதனையும், காமத்தாற் கதுவப்பட்டார் அதனிடத்தே அழுந்தி உலகினையே மறப்பர் என்பதனையும்,

"சிற்றிடைச் சீதை யென்னு நாமமுஞ் சிந்தை தானும்
உற்றிரண் டொன்றா நின்றா லொன்றெறிந் தொன்றை யுன்ன
மற்றொரு மனமு முண்டோ மறக்கலாம் வழிமற் றியாதோ
கற்றவர் ஞான மின்றேற் காமத்தைக் கடக்க லாமோ"

எனவரும் கம்பநாடர் மொழியானும் உணர்க. (௬)

### யாக்கை நிலையாமை

எ. போதர வுயிர்த்த வாவி
புகவுயிர்க் கின்ற தேனு
மூதிய மென்று கொள்வ
ருணர்வினன் மிக்க நீரா
ராதலா லழிதன் மாலைப்
பொருள்களுக் கழிதல் வேண்டா
காதலா னழுது மென்பார்
கண்ணனி களைய லுற்றார்.

(இ - ள்.) போதர உயிர்த்த ஆவி - உடம்பினின்றும் வெளியேறுவதற்கு விடுகின்ற மூச்சானது; புக உயிர்க்கின்ற தேனும்-மீண்டும் காற்று உட்புகுதற் பொருட்டே விடப்படுகின்றதாயினும்; உணர்வினன் மிக்க நீரார் ஊதியம் என்று கொள்வர்-அங்ஙனம் அக் காற்று மீண்டும் உட்புகுவதனை மெய்யுணர்வினின் மிக்க பெரியோர் ஒரு பேறாகவே கருதா நிற்பர்; ஆதலால் அழிதன்மாலைப் பொருள்களுக்கு அழிதல் வேண்டா - அங்ஙனமாதலால் அழியுமியல்புடைய உடம்பு முதலியவற்றின் அழிவிற்கு நெஞ்சழிந்து வருந்துதல் வேண்டா; காதலால் அழுதும் என்பார்-இவ்வுடம்பின்கண் பற்றுடைமையாலே அதன் அழிவிற்கு ஆற்றாது அழுவேம் என்று கருதுபவர், கண் கனி களையல் உற்றார்-தம் கண்களை வாளா வருத்துபவரே யாவர் என்பதாம்.

(வி - ம்.) வெளியேறிய மூச்சு மீண்டும் உட்புகாமற் போயே விடுதலும் கூடும். ஆதலால். மெய்யுணர்வுடையோர் தாம் உள் வாங்கும் ஒவ்வொரு மூச்சும் தமக்கு ஊதியமாகவே கருதுகின்றனர். அத்துணை நிலையாமையுடையது இவ்வுடம்பு. இதன் அழிவுக்கு வருந்துதல் வேண்டா. இதன் அழிவு கருதி அழுபவர் வீணே தம்மை வருத்துபவரேயாவர் என்றவாறு.

சான்றோர் உயிர்க்கும் மூச்சு உட்புகுவதனை ஊதியமாகக் கருதற்குக் காரணம் பின்னும் பிழைத்திருந்து அதனாலாய பயன் கோடல் கருதியேயாம். பின்னும் வாழ்வேம் என்னும் அவாவாலன்று என்க.

இனி இச் செய்யுளோடு,

"நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை" —குறள், ௩௩௧

எனவும்,

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு" —குறள், ௩௩௬

எனவும்,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்பொ டுயிரிடை நட்பு" —குறள், ௩௩௮

எனவும் வரும் அருமைத் திருக்குறள்களும்,

"சாதலும் பிறத்த லுனுந் தம்வினைப் பயத்தி னாகும்
ஆதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவு மெல்லாம் நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோழி யென்றான்"

எனவும்,

"பிரிந்தவர்க் கிரங்கிப் பேதுற் றழுதநங் கண்ணி னீர்கள்
சொரிந்தவை தொகுத்து நோக்கிற் றொடுகடல் வெள்ள மாற்றா
முரிந்தநம் பிறவி மேலு முற்றிழை யின்னு நோக்காய்
பரிந்தழு வதற்குப் பாவா யடியிட்ட வாறு கண்டாய்"

எனவும்,

"அன்பினி னவலித் தாற்றா தழுவது மெளிது நங்கள்
என்பினி னுவி நீங்க விறுவது மெளிது சேர்ந்த
துன்பத்தாற் றுகைக்கப் பட்டார் துகைத்தவத் துன்பந் தாங்கி
இன்பமென் றிருத்தல் போலு மரியதிவ் வுலகி லென்றான்"

எனவும்,

"மயற்கையிம் மக்கள் யோனிப் பிறத்தலும் பிறந்து வந்தீங்
கியற்கையே பிரிவு சாத லிமைப்பிடைப் படாத தொன்றாற்
கயற்கணி னளவுங் கொள்ளார் கவற்சியுட் கவற்சி கொண்டார்
செயற்கையம் பிறவி நச்சுக் கடலகத் தழுந்து கின்றார்"

எனவும்,

"இளமையின் முப்புஞ் செல்வத்
திடும்பையும் புணர்ச்சிப் போதிற்
கிளைநரிற் பிரிவு நோயில்
காலத்து நோயு நோக்கி
விளைமதுக் கமழுங் கோதை
வேலினும் வெய்ய கண்ணாய்
களைதுய ரவலம் வேண்டா
கண்ணிமைப் பளவு மென்றான்"

எனவும் வரும் சீவக சிந்தாமணிச் செய்யுள்களும் ஒப்பு நோக்கி யின்புறுக.

"நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்

எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று'' —நீதிநெறி விளக்கம், ௪

என்பது குமரகுருபரவடிகளார் திருமொழி. (௭)

கூற்றுவன் கொடுமை

அ. அரவின மரக்க ராளி
யவைகளுஞ் சிறிது தம்மை
மருவினுற் றீய வாகா
வரம்பில்கா லத்து ளென்றும்
பிரிவில மாகித் தன்சொற்
பேணியே யொழுகு நங்கட்
கொருபொழு திரங்க மாட்டாக்
கூற்றின்யா ருய்த்து மென்பார்.

(இ - ள்.) அரவு இனம் – கொடிய நச்சுப் பாம்பினங்களும்; அரக்கர் - இரக்கமென்றொரு பொருளிலாத அரக்கரும்; ஆளி - யாளி முதலிய வல்விலங்குகளும்; சிறிது தம்மை மருவினுல் தீய ஆகா - சிறிதுகாலம் தம்மோடு யாரும் பழகுமிடத்தே அவர்பால் அன்புடையவாய்த் தீமை செய்வன ஆகாவாம்; வரம்பு இல் காலத்துள் என்றும் - எல்லையில்லாததாய் இறந்தகாலத்திலெல்லாம் நாள்தோறும்; பிரிவு இலம் ஆகி-தன்னேடு பிரிதலிலமாய்; தன் சொற்பேணி ஒழுகும் நங்கட்கு - தன் கட்டளையை மேற்கொண்டு ஒழுகி வருகின்ற மாந்தராகிய நம்பொருட்டு; ஒருபொழுது இரங்க மாட்டா - ஒரு சிறிது பொழுதேனும் இரங்கு மியல்பில்லாத, கூற்றின்-கூற்றுவனுக்குத் தப்பி; உய்தும் என்பார்-யாங்கள் உய்ந் திருக்கவல்லேம் என்று கூறவல்லார்; யார் – யாவரேயுளர்; ஒருவருமிலர் என்பதாம்.

(வி - ம்.) அரவினம் அரக்கர் ஆளி எனத் திணை விரவி வந்தது, மிகுதிபற்றி அஃறிணை முடிபேற்றது.

அரவினம் முதலியன கொல்லுந்தொழிலினையுடையன வாயினும் தம்மோடு சிறிதுகாலம் பழகுவோர்பால் அன்புகொண்டு அவரைக் கொல்லாமல் விடுதலுமுண்டு. கூற்றுவனேடு யாம் எல்லையற்ற காலமெல்லாம் கூடியிருப்பேமாயினும் அவன் நம்பால் சிறிதும் இரக்கம் கொள்வானலன். ஆதலால், அவனுக்குத் தப்பி உயிர்வாழ்வோர் யாருமிலர் என்றவாறு.

கூற்றுவன் கணம் கணமாக நம் அகவை நாளை நம்மோடிருந்துண் கின்றான் ஆதலால், வரம்பில் காலத்துள் என்றும் பிரிவிலமாகி என்றார். அவன் சொற் பேணுதலாவது, அவன் கட்டளைப்படி கணந்தோறு மிறந்திறந்து வருதல். சிறிதேனும் இரங்குதலிலன் என்பாள், ஒரு பொழுது இரங்கமாட்டாக் கூற்று என்றாள். உய்துமென்பார் யார் என்னும் வினா ஒருவருமிலர் என்பதுபட நின்றது. இனி இதனோடு,

"தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர்
முதியோ ரென்னான் இளையோ ரென்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ"

எனவரும் மணிமேகலைப் பகுதியும்,

"கூற்றுவன் கொடிய னாகிக் கொலைத்தொழிற் கருவி சூழ்ந்து
மாற்றரும் வலையை வைத்தான் வைத்ததை யறிந்து நாமும்
நோற்றவன் வலையை நீங்கி நுகர்ச்சியி னுலக நோக்கி
ஆற்றுறப் போத றேற்றா மளியமோ பெரிய மேகாண்"

எனவரும் சிந்தாமணிச் செய்யுளும், ஒப்பு நோக்குக. (௮)

இதுவுமது

௯. பாளையாந் தன்மை செத்தும்
பாலனாந் தன்மை செத்துங்
காளையாந் தன்மை செத்துங்
காமுறு மிளமை செத்தும்
மீளுமிவ் வியல்பு மின்னே
மேல்வரு மூப்பு மாகி
நாளுநாட் சாகின் றாமா
னமக்குநா மழாத தென்னே.

(இ - ள்.) பாளை ஆம் தன்மை செத்தும் - யாம் எம்முடைய உடம்பு எம் தாய்மாரின் வயிற்றின்கண் கருவாகியிருந்த நிலைமையிலிருந்து இறந்தும்; பாலன் ஆம் தன்மை செத்தும் - பின்னர் எய்திய குழவிப் பருவம் இறந்தும்; காளை ஆம் தன்மை செத்தும் - அப் பருவத்தின் பின் வந்தெய்திய காளைப்பருவம் இறந்தும்; காமுறும் இளமை செத்தும்-அதன்பின்னர் வந்ததும் காமுற்று மகளிரை மருவுதற் கென்றதும் ஆகிய இளமைப்பருவமும் இறந்தும் வந்துள்ளோம்; மீளும் இவ்வியல்பும் - இவ்வாறு மீண்டு மீண்டும் இறக்கின்ற இந்த இயல்பினையே; இன்னே மேல் வரும் மூப்பும் ஆகி - இப்பொழுதே இதற்கு மேலே வருகின்ற முதுமைப் பருவமும் எய்தாநிற்ப; நாளும் நாள் சாகின்றாமால் - இவ்வாறே யாம் ஒவ்வொரு நாளும் இறப்பினை எய்துகின்றோ மல்லமோ?; நமக்கு நாம் அழாதது என்னே?-பிறர் சாகின்றதற்கு

அழுகின்ற யாம் நமது சாவிற்கு நாமே அழாததற்குக் காரணந் தான் என்னையோ ? என்பதாம்.

(வி - ரை.) யாம் நஞ் சுற்றத்தார் இறந்துழிக் கண்கனிந்து அழுகின்றேம்; ஆனால், யாமோ யாம் கருவிருந்த பருவத்தினின்றும் இறந்தோம். பின்வந்த குழவிப் பருவத்தினின்று மிறந்தொழிந்தோம். அதன்பின் வந்த காளைப் பருவத்தினின்றும் இறந்தோம். அதன் பின்னர் மகளிரைக் காமுற்றுக் களிக்குமத் தனியிளம்பருவத்தினின்றும் இறந்தொழிந்தோம். இப்போது வந்தெய்துகின்ற இம் மூப்புப் பருவத்தினின்றும் இறத்தல் ஒருதலை. இவ்வாறு நாள்தோறு மிறக்கின்ற நாம் நமது இறப்பிற்கு அழாமைக்குக் காரணம் யாதோ? என்றவாறு. (௯)

இதுவுமது

௧௦. கோள்வலைப்பட்டுச் சாவாங்
        கொலைக்களங் குறித்துச் சென்றே
மீளினு மீளக் காண்டு
        மீட்சியொன் றானு மில்லா
நாளடி யிடுத றோன்று
        நம்முயிர் பருகுங் கூற்றின்
வாளின்வாய்த் தலைவைப் பாக்குச்
        செல்கின்றேம் வாழ்கின் றேமோ.

(இ - ள்.) கோள்வலைப்பட்டு - பகைவரால் சிறையாகப் பிடிக்கப்பட்டு; கொலைக்களம் குறித்துச் சென்றே - கொலைக்களத்திற் கொடுபோய்க் கொல்லுதலைக் குறித்துச் சென்று; மீளினும் மீளக்காண்டும் - ஒரோவழிக் கொலையுண்ணாமல் மீண்டும் வருபவரையும் யாம் காணலாம்; மீட்சி ஒன்றானும் இல்லா - ஆனால் எவ்வாற்றானும் மீள்வதென்பது இல்லாத; நம் உயிர் பருகும் கூற்றின் நாள் அடியிடுதல் தோன்றும் - நம்முடைய உயிரைக் குடித்தொழிதற்குக் காலகோள் செய்தல் தோன்றுகின்ற; வாளின் வாய் - நாளாகிய அவ் வாளின்கண்; தலை வைப்பாக்கு - நமது தலையை வைத்தற்கு; செல்கின்றேம் - யாம் நாடோறும் செல்வதல்லது; வாழ்கின்றேமோ - யாம் வாய்மையாக வாழ்கின்றேமில்லை என்பதாம்.

(வி - ரை.) யாம் நாள்தோறும் நாள்கள் வருதல் கண்டு அறியாமையால் வாழ்கின்றேமென்று மகிழ்கின்றேம். ஆராய்ந்து பார்க்குமிடத்து யாம் ஒருநாளும் வாழுகின்றேமில்லை. நாள்தோறும் நமது வாழ்நாளை ஈர்கின்ற கூற்றுவன் வாளின்கண் நமது தலையை வைப்பது நன்கு விளங்கும் என்பதாம். ஈண்டு,

"நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்" —குறள், ௩௩௪

என்னுந் திருக்குறளை நினைவுகூர்க. (௧௦)

## யாக்கையின் இழிதகைமை

கக. நன்கன நாறுமி தென்றிவ்
வுடம்பு நயக்கின்ற தாயி
னொன்பது வாயில்கடோறு
மூண்ணின் றழுக்குச் சொரியத்
தின்பதோர் நாயு மிழுப்பத்
திசைதொறுஞ் சீப்பில்கு போழ்தி
னின்பநன் றாற்ற மிதன்க
ணெவ்வகை யாற்கொள்ள லாமே.

(இ - ள்.) இது நன்கனம் நாறும் என்று - இது நன்றாக நறுமணம் கமழ்கின்றது என்று பாராட்டி; இவ்வுடம்பு நயக்கின்றது ஆயின் - இந்த உடம்பு நம்மாற் பெரிதும் விரும்பப்படுமாறல்; ஒன்பது வாயில்கள்தோறும் உள்நின்று அழுக்குச் சொரிய - மற்றிவ்வுடம்பே அதன்கண் அமைந்த கண் முதலிய ஒன்பது தொளைகளின் வழிகளானும் அதனகத்தினின்றும் தீநாற்றமிக்க அழுக்குகள் ஒழுகாநிற்பவும்; தின்பது ஓர் நாயும் - அதனைத் தின்னுமியல்புடைய நாய்கள்; திசைதொறும் இழுப்ப - தம்முள் கலாம் கொண்டு வரமாற் கௌவி நாற்றிசைகளினும் இழுத்தலாலே; சீ பில்கு போழ்தின் - இவ்வுடம்பினின்றும் சீழ் வடிகின்ற பொழுது; இதன்கண் இன்பநல் நாற்றம் எவ்வகையால் கொள்ளலாம்-இவ்வுடம்பின்கண் மனமின்புறுதற்குக் காரணமான நறுமணத்தை எவ்வாற்றால் நாம் எய்துதல் கூடும்? கூறுமின்! என்பதாம்.

(வி - ம்.) இவ்வுடம்பு இயற்கையாகவே அருவருக்கத்தக்க தீநாற்றம் உடையதேயாம்; இதன்கண் செயற்கையாலுண்டாகிய நறுமணத்தை அதன் மணமாகவே கருதி அறிவிலிகளாற் பாராட்டப்படுகின்றது. அதனியற்கை தீ நாற்றமே என்பதனை அதன்கண் அமைந்த ஒன்பது தொளைகளும் சொரிகின்ற அழுக்காலும் உயிர் போயவழி நாய் முதலியன பற்றியிழுக்க அவ்வுடம்பினின்றும் ஒழுகும் சீ முதலியவற்றாலும் உணரலாம். ஆதலால் இவ்வுடம்பு விரும்புதற்குத் தகுந்த சிறப்பொன்று மில்லாதது என்பதாம்.

இதனோடு,

"எழுந்து றுப்பி பெருகு காதை வள்ளை யென்ப ரிகழ்கரும்
புழுவ டர்ந்த குழலி ருண்ட புயல தென்பர் பூளைநீ
ரொழுகு கண்கள் குவளை யென்பர் தரள மென்ப ருயிரொடும்
பழுது றும்பல் லென்பை யின்ன பகர்வ தென்ன பாவமே"

எனவும்,

''எச்சி றங்கு வாய்வி விம்பு பவள மென்ப ரெழுமிரண்
டச்சி லந்தி கொங்கை யானை யாகு மென்ப ரதுபெருங்
கச்சி லங்கி ருந்து மாவி கவரு கின்ற தென்பராற்
பிச்சி லங்க வர்க்கு நேர்பி ராந்தர் யாவர் பேசிலே''

எனவும்,

''நாசி யூறல் கோழை பெச்சி னுறு மாமு கத்தையே
மாசு ருத பூர்ண சந்த்ர வட்ட மென்ப ரொட்டுவைத்
தேசு ருத ரம்பி னைக்கொ டென்பு கட்ட மைத்தநோன்
விச விச நெஞ்ச ழிந்து வேணு வென்பர் காணுமே''

எனவும்,

''குட்ர்ந ரம்பு தசைவ ழும்பு குருதி யென்பு சுக்கில
முடைகி டந்த பொந்தின் மேலோர் தோல்வி ரித்து மூடியே
யட்ர்வு றும்பஃ றுளைக டோறு மருவ ருப்ப ருமலம்
பட்ர்தல் கண்டு மதனை யேகொன் மகவிரென்று பகர்வதே''

எனவும்,

''கூராரும் வேல்விழியார் கோலாக லங்களெல்லாந்
தேராத சிந்தையரைச் சிங்கிகொள்ளு மல்லாமல்
நேராயு ணிற்கு நிலையுணர்ந்து நற்கரும
மாராய் பவருக் கருவருப்ப தாய்விடுமே''

எனவும்,

''வால வயதின் மயக்கு மடந்தையருங்
கால மகன்றதற்பின் கண்டெவரு மேயிகழ
நீல நறுங்குழலு நீடழகு நீங்கியவர்
கோலதொரு கையூன்றிக் கொக்குப்போ லாயினரே''

எனவும்,

''கிட்டா தகன்மின் கிடப்பதிற் பொல்லாங்கென்
றிட்டா ரலரே யிலங்கிழையார் தம்முடம்பிற்
பட்டாடை மேல்விரித்துப் பாதாதி கேசாந்த
மட்டாய் மறைத்துவரு மார்க்கமது வென்கொண்டோ''

எனவும்,

''வீசியதுர்க் கந்தம் வெளிப்படுந்தம் மெய்யிலெனக்
கூசி மறைப்பதன்றேற் கோற்றொடியா ரங்குமெங்கு
நாசி மணக்க நறுங்குங் குமசுகந்தம்
பூசி முடித்தல்பசி போக்கும் பொருட்டேயோ''

எனவும்,

"மாற்றரிய தம்முத்தை வாய்திறக்கு முன்னமெமு
நாற்ற மறைக்கவன்றே ஓவழித்துப் பல்விளக்கிக்
கோற்றெடியார் நன்னீருங் கொப்புளித்துப் பாகுகூ
டேற்றுவது மென்குதலை தீர்க்கு மருந்தென்றோ"

எனவும்,

"பட்டாடை சாத்திப் பணிமே கலைதிருத்தி
மட்டா யவயவங்கள் மற்றவைக்கு மேற்கும்வண்ணம்
கட்டாணி முத்தங் கனகமணிப் பூடணங்க
ளிட்டா லலதவருக் கென்னோ வியலழகே"

—மெஞ்ஞான விளக்கம், ௧௦ - ௧௧.

எனவும் வரும் செய்யுள்கள் ஒப்புநோக்கற்பாலன. (௧௧)

இதுவுமது

௧௨. மாறுகொள் மந்தர மென்று
மரகத வீங்கெழு வென்றும்
தேறிடத் தோள்க டிறத்தே
திறத்துளிக் காமுற்ற தாயிற்
பாறொடு நாய்க ளசிப்பப்
பறிப்பறிப் பற்றிய போழ்தி
னேறிய வித்தசை தன்மாட்
டின்புற லாவதிங் கென்னோ ?

(இ - ள்.) மாறுகொள் மந்தரம் என்றும் - ஒன்றனோடு ஒன்று வலிமையாக மாறுபட்டிருக்கின்ற இரண்டு மந்தர மலைகளே இவை என்றும்; மரகத வீங்கு எழு என்றும் - பருத்த மரகத மணியாலியன்ற தூண்களே இவைகள் என்றும்; தேறிட - கேட்போர் உணரும்படி; தோள்கள் திறத்தே - ஆடவர்களுடைய தோள்களைக் குறித்து; திறத்துளிக் காமுற்றது ஆயின் - மகளிர் முறையே அளாவுவதானால்; பாறொடு நாய்கள் அசிப்ப - பருந்துகளும் நாய்களும் இவற்றை இரையாகத் தின்னுதற் பொருட்டு; பறிப்பறிப் பற்றிய போழ்தின் - வாயாற் கௌவிக் கௌவி இழுத்த காலத்திலே; ஏறிய இத் தசை தன் மாட்டு - பருத்துத் திரண்ட இந்த வறுந்தசையின்கண்; இங்கு இன்புறல் ஆவது என்னோ - இவ்வுலகத்து அம் மகளிர் இன்புறுதற்கேற்ற பண்பு யாதோ? கூறுமின் என்பதாம்.

(வி - ம்.) இஃது ஆடவர்பாற் காமங்கொண்டு வருந்தும் மகளிர்க்குக் கூறியபடியாம். ஆடவர் உறுப்புகளுள் வைத்து மகளிர் நெஞ்சைப் பெரிதும் கவர்வது அவர்தம் தோள்களேயாம். ஆதலால் அத்தோள்

களையே கூறினர். மகளிரை ஆடவர் தோள்களே பெரிதும் கவரும் இயல்புடையன என்பதனை,

"நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் றோளி லாழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவ டனத்திற் றைத்தவே." —மிதிலைக், ௩௯

எனவரும் இராமாவதாரத்தானும் உணர்க.

வலத்தோளும் இடத்தோளுமாய் வேறுபட்டிருத்தலின் மாறுகொள் மந்தரம் என்றார். மந்தரம் - மந்தரமலை. மரகதம் - ஒரு மணி; மரகதத்தாலியன்ற எழு, வீங்கெழு என்று தனித்தனிக் கொள்க. எழு - தூண். மாறு - சமுகுமாம். உளி: ஏழாவதன் சொல்லுருபு. பறிப்பறி - பிடுங்கிப் பிடுங்கி என்றவாறு. பறித்தல் - பிடுங்குதல். என்னே என்னும் வினா ஒன்றுமில்லை என்பதுபட நின்றது. (௧௨)

## இதுவுமது

௧௩. உறுப்புக் கடாமுடன் கூடி
யொன்று யிருந்த பெரும்பை
மறைப்பில் விழைவிற்குச் சார்வாய்
மயக்குவ தேலிவ் வுறுப்புக்
குறைத்தன போல வழுகிக்
குறைந்து குறைந்து சொரிய
வெறுப்பிற் கிடந்த பொழுதின்
வேண்டப் படுவது முண்டோ.

(இ - ள்.) உறுப்புகள் தாம் உடன்கூடி ஒன்றும் இருந்த பெரும்பை - கால் கை முதலிய புறத்துறுப்புகளும் குடர் காற்றும்பை முதலிய உள்ளுறுப்புகளும் ஒருசேர ஒருடம்பாக இருந்த இந்தத் தோலாலியன்ற பெரிய பையானது; மறைப்பில் - மேலே தோல் போர்த்துள்ள மறைப்பினாலே; விழைவிற்குச் சார்வாய் மயக்குவதேல் - நந்தம் அவாவிற்குச் சார்பிடமாகி நம்மை மயக்குமியல்புடையதென்னின்; உறுப்புக் குறைத்தனபோல் - மற்றிவ்வுடம்பே உயிர் பிரிந்துழித் தன்னுறுப்புகள் துணிக்கப்பட்டன போல்வனவாக; அழுகிக் குறைந்து குறைந்து சொரிய - அழுகி நாளுக்கு நாள் தேய்ந்து தேய்ந்து விழாநிற்ப; வெறுப்பிற் கிடந்த பொழுதின் - கண்டோர் வெறுப்பிற் கிடனாகிக் கிடந்தகாலத்து; வேண்டப்படுவதும் உண்டோ - இவ்வுடம்பின்கண் நாம் அவாவுதற்கியன்ற தன்மையும் உண்டாகுமோ? கூறுதிர் என்பதாம்.

(வி - ம்.) "உறுப்பு - கண் முதலிய புறவுறுப்புகளும் குடர் முதலிய உள்ளுறுப்புகளுமாம். தோலாற் போர்த்து மறைக்கப்பட்

டிருத்தலால் இது விழைவிற்குச் சார்வாய் மயக்குவது; அங்ஙனம் போர்க்கப் படாவிடின் அருவருக்கத் தக்கதேயாம் என்பாள் மறைப்பில் விழைவிற்குச் சார்வாய் மயக்குவது என்றாள். அங்ஙனம் மயக்குமேனும் இஃது அழுகிக் குறைந்துகுறைந்து சொரியக் கிடந்த பொழுதின் இதன் கண் மயங்குவதற்குரிய தன்மை சிறிதும் இல்லையாம் என்றவாறு.

"என்புந் தடியும் உதிரமும் யாக்கை என்று
அன்புறு மாக்கட்கு அறியச் சாற்றி
வழுவொடு கிடந்த புழுவின் பிண்டம்"

என்றார் மணிமேகலையினும். இன்னும், இவ் வுடம்பியல்பினை :—

"காலி ரண்டுநி றுத்தி மேலிரு கைபி ணைத்தொரு புறவெலும்
பாலி ணக்கிமு கட்டு மேல்வளை யடர்ந ரம்பெனு மாக்கையாற்
கோலி யிட்டப மூக்க றிக்கொரு குறைவு றாமல் வரிந்துமேற்
றோலி ணக்கிய கற்றை வேய்ந்துயர் சுவர்பு லால்கொ டியற்றியே"

"வந்து போகவி ரண்டு வாசல் வகுத்து மற்றெழு சாளரந்
தந்த சாக்கிர மாதி யிரிரு தளமெ டுத்ததன் மேன்மலர்க்
கொந்து லாவிய மாமு டிக்கன கும்பம் வைத்தவிர் கூந்தலா
முந்து நீள்கொடி மாட நாலு முகக்கண் மாவிகை முற்றினுன்"

எனவரும் மெய்ஞ்ஞானவிளக்கச் செய்யுள்களும் (அவித்தியா-கக.-௧௨.)

"என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப்
புன்புறந் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட்
டொன்பது வாயி லாக்கி யூன்பயில் குரம்பை செய்தான்
மன்பெருந் தச்ச னல்லன் மயங்கினுர் மருள வென்றான்"

எனவரும் சீவக சிந்தாமணிச் செய்யுளும் (க௩௭௭) அறிவுறுத்து தலையும் ஈண்டு நினைக. (க௩)

இதுவுமது

க௪. எனதெனச் சிந்தித்த லான்மற்
றிவ்வுடம் பின்பத்துக் காமேற்
றினைப்பெய்த புன்கத்தைப் போலச்
சிறியவு மூத்தவு மாகி
நுனைய புழுக்குலந் தம்மா
லுகரவும் வாழவும் பட்ட
வினைய வுடம்பினைப் பாவி
யானென தென்னலு மாமே.

(இ - ள்.) பாவி-தீவினையாளனே!; எனது எனச் சிந்தித்த லால்-எனனுடையது என்று யான் உரிமை கொண்டாடுதற்

கொண்டிருத்தலாலே; இவ்வுடம்பு இன்பத்துக்கு ஆமேல் - இந்த உடம்பு யான் இன்புறுதற்குரியதாகும் என்பாராயின்; இஃது உன்னுடையதாதல்தான் எங்ஙனம்?; தினைப்பெய்த புன்கத்தைப் போல - தினையரிசி பெய்து சமைக்கப்பட்ட சோறு போன்று; சிறியவும் மூத்தவும் ஆகி - உருவத்தாற் சிறியனவும் பெரியனவுமாய்; நுனைய - கூர்த்த வாயினையுடையனவாகிய; புழுக்குலந் தம்மால் - புழுக் கூட்டங்களாலே; நுகரவும் வாழவும் பட்ட - தம்முடையதாகவே கொண்டு உண்ணவும் உறையுளாகக் கொண்டு வாழவும் படுகின்ற; இனைய உடம்பினை - இத் தன்மையான இந்த உடம்பினை; யான் எனது என்னல் ஆமோ - யான் என்றுதல் என்னுடையது என்றுதல் கூறுதல் கூடுமோ? கூடாதுகாண் என்பதாம்.

(வி - ம்.) தினையரிசியாலாய சோறு உடலிலுண்டாகும் சிறியவும் பெரியவும் ஆகிய புழுக்களுக்குவமை. புன்கம் — சோறு.

இதனை,

"நன்னாள் வருபத நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பருஉக்குரற் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதி துண்மார்
மரையான் கறந்த நுரைகொ டீம்பால்
மான்றடி புழுக்கிய புலவுநாறு குழிசி
வான்கேழ் இரும்புடை கழாஅ தேற்றிச்
சாந்த விறகி னுவித்த புன்கம்" —புறநானூறு, ௧௬௮.

எனவரும் செய்யுளினும் காண்க.

இந்த வுடலை யாம் எமதென்று கொள்வேம், இதன்கண் வாழுகின்ற புழுக்குலங்களும் தமதாகவே கொண்டு இதனை உண்டு இதனிடத்தேயே வாழ்கின்றன. ஆதலால் இத்தகைய வுடம்பினை யான் எனது என்று யாம் உரிமை கோடல் பேதைமையேயாம் என்றவாறு.

இன்னும்,

"சடமிது கிருமிப்பை தானென்றன் மலமோ
டிடர்மேவு புண்ணே டெழக்கண்ட துண்டே
யுடன்மீதிவ் வுடல்போலு திக்கின்ற புழுவைத்
திடமான மகவென்று சீராட லென்னே"

எனவும்,

"ஊறுதுய ருஞ்சுகமு முற்றனுப விக்கும்
பேறுபெறு தன்னுடலு மாவிபிரி யுங்காற்
கூறுசிறு புன்னொழு குடம்பையென வப்பால்
வேறுபடு மென்னிலினி மெய்யுறவு யாதே"

எனவும் வரும் மெய்ஞ்ஞான விளக்கச் செய்யுள்களும் நினையற் பாலவாம். (கச)

## இறைமாட்சி

கரு. இறந்த நற்குண மெய்தற் கரியவா
யுறைந்த தம்மையெல் லாமுட னாக்குவான்
பிறந்த மூர்த்தியொத் தான்றிங்கள் வெண்குடை
யறங்கொள் கோலண்ணன் மும்மத யானையான்.

(இ - ள்.) மும்மத யானையான் - மூன்று மதங்களையும் பொழிகின்ற களிற்றியானையையுடையவனும்; திங்கள் வெள்குடை - நிறைத்திங்கள் மண்டிலம் போன்ற வெள்ளிய தன் குடையினாலே; அறங்கொள் கோல் - அறத்தையே குறிக்கோளாகக் கொண்ட செங்கோன் முறைமையினையுடைய; அண்ணல் - இவ் வேந்தன் இவ்வாற்றால்; இறந்த நற்குணம் - இவ்வுலகத்தை விட்டகன்று போய்விட்ட நல்ல மக்கட் பண்புகள்; எய்தற்கு அரியவாய் - மீண்டும் மாந்தர் எய்துதற்கரியனவாகி; உறைந்த தம்மை எல்லாம் - இருந்தவற்றை யெல்லாம்; உடன் ஆக்குவான் - மீண்டும் இவ்வுலகத்து மக்களோடே சேர்த்து அவரை யுய்விக்கும் பொருட்டு; பிறந்த மூர்த்தி ஒத்தான் - துடித விமானத்தி னின்றும் போந்து இவ்வுலகத்திற் றோன்றிவருளிய புத்த பெருமானையே ஒத்தவனும்த் திகழ்ந்தான் என்பதாம்.

(வி - ம்.) இச் செய்யுள் தொடங்கி வருகின்ற செய்யுள்கள் குண்டலகேசி என்னும் பெருங்காப்பியத்திற் பேசப்படுகின்ற அரசன் மாண்புகள். இந்த அரசனுடைய பிற மாண்புகள் இச் செய்யுளின்முன் பல செய்யுட்களிற் பேசப்பட்டிருத்தல் வேண்டும் என்று நினைத்தற் கிடனுளது. அவையெல்லாம் கிடைத்தில. இச் செய்யுளின் முற் போந்த செய்யுட்களில் அந்த அரசனுடைய அறமாண்புகளை வருணித்து இச் செய்யுளில் இவ்வாற்றால் இம் மன்னவன் புத்தபெரு மானையும் ஒப்பாவான் என்று கூறுகின்றார் போலும்.

புத்தபெருமான் உலகின்கண் அறங்கள்கெட்டு மக்கட் பண்பு அழிந்த காலத்தே உலகிற்றோன்றி அவ்வறங்களை மீண்டும் உலகில் நிறுவினன் என்பவாகலின் "இறந்த நற்குணம் எய்தற்கரியவா யுறைந்த தம்மையெல்லாம் உடனாக்குவான் பிறந்த மூர்த்தி" என்று புத்தரைச் சுட்டினார். மக்கள் மேற்கொள்ளாவிடினும் அறம் அழிந் தொழியாமையின் எய்தற்கரியவாய் உறைந்த தம்மையெல்லாம் என்றார். உறைந்த தம்மையெல்லாம் என்றது உறைந்தவற்றை யெல்லாம் என்றவாறு. புத்தர் உலகில் அறமுதலியன நிலைகுலைந்துழி வந்து தோன்றுவர் என்பதனை,

"பூமகனே முதலாகப் புகுந்தமரர் எண்டிசையும்
தூமலரா லடிமலரைத் தொழுதிரந்து வினவியநாள்
காமமும் கடுஞ்சினமுங் கழிப்பரிய மயக்கமுமாய்த்

தீமைசால் கட்டினுக்குத் திறற்கருவி யாய்க் கிடந்த
நாமஞ்சார் நமர்களுக்கு நயப்படுமா றினிதுரைத்துச்
சேமஞ்சார் நன்னெறிக்குச் செல்லுமா றருளினையே
எண்ணிறந்த குணத்தோய்நீ யாவர்க்கு மரியோய்நீ
உண்ணிறைந்த வருளோய்நீ யுயர்பார நிறைத்தோய்நீ
மெய்ப்பொருளை யறிந்தோய்நீ மெய்யறமிங் களித்தோய்நீ
செப்பரிய தவத்தோய்நீ சேர்வார்க்குச் சார்வுநீ
நன்மைநீ தின்மைநீ நனவுநீ கனவுநீ
வன்மைநீ மென்மைநீ மதியுநீ விதியுநீ
இம்மைநீ மறுமைநீ இரவுநீ பகலுநீ
செம்மைநீ கருமைநீ சேர்வுநீ சார்வுநீ
அருளாழி நயந்தோய்நீ அறவாழி பயந்தோய்நீ
மருளாழி துரந்தோய்நீ மறையாழி புரந்தோய்நீ
மாதவரின் மாதவனீ வானவருள் வானவனீ
போதனருட் போதனனீ புண்ணியருட் புண்ணியனீ
ஆதிநீ யமலனீ யயனுநீ யரியுநீ
சோதிநீ நாதனீ துறைவனீ யிறைவனீ
அருளுநீ பொருளுநீ அறவனீ யநகனீ
தெருளுநீ திருவுநீ செறிவுநீ செம்மனீ''

எனவரும் பழம் பாடலானும் (வீரசோழியம்: யாப்புப் படலம் கக-ஆம் கலித்துறையின் உரையிற்கண்டவை) இன்னும்,

''தரும தலைவன் றலைமையி னுரைத்த
பெருமைசால் நல்லறம் பெருகா தாகி
இறுதியில் நற்கதி செல்லும் பெருவழி
அறுகையு நெருஞ்சியு மடர்ந்துகண் ணடைத்தாங்குச்
செயிர்வழங்கு தீக்கதி திறந்து கல்லென்
றுயிர்வழங்கு பெருநெறி யொருதிறம் பட்டது
தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டிலம்
உண்டெனு வுணர்தலல்ல தியாவதுங்
கண்டினிது விளங்காக் காட்சி போன்றது
சலாகை நுழைந்த மணித்துளை யகவையின்
உலாநீர்ப் பெருங்கட லோடா தாயினு
மாங்கத் துளைவழி யுகுநீர் போல
வீங்கு நல்லற மெய்தலு முண்டெனச்

"சொல்லு முண்டியான் சொல்லுத றேற்ருர்
மல்லன்மா ஞாலத்து மக்களே யாதலின்
சக்கர வாளத்துத் தேவ ரெல்லாம்
தொக்கொருங் கீண்டித் துடித லோகத்து
மிக்கோன் பாதம் விழுந்தன ரிரப்ப
விருள்பரந்து கிடந்த மலர்தலை யுலகத்து
விரிகதிர்ச் செல்வன் ருேன்றின னென்ன
.............................. .........
புத்த ஞாயிறு தோன்றுங் காலை''

எனவரும் மணிமேகலையானும், (கஉ : இஅ – அ௯) உணர்க.

இன்னும்,

"துடித விமானத்தினின்றும் போந்து குயிலாலபுரத்துத் தோன்றி உலும்பினி வனத்துப் பிறந்து கபிலபுரத்துப் புத்தத்துவம் பெற்றுத் தர்மோப தேசம் பண்ணி மகாபோதிப் பிரதேசத்துப் பொன்றக் கெடுதல் புத்தனுக்கு நியதி'' (மொக்கலவாதச் சருக்கம் கக0 ஆம் பாட்டுரை) எனவரும் நீலகேசி யுரையாசிரியர் கூற்றும் ஈண்டு நினைக. (கஞ)

இதுவுமது

கசு. சீற்றஞ் செற்றுப்பொய் நீக்கிச்செங் கோலினுற்
கூற்றங் காய்ந்து கொடுக்க வெனுந்துணை
மாற்ற மோனின் ருன்றடு மாற்றத்துத்
தோற்றந் தன்னையுங் காமுறத் தோன்றினுன்.

(இ – ள்.) சீற்றம் செற்று-அம் மன்னவன் இப் பேருலகத்தின்கண் ஒருயிர் மற்றோருயிரைச் சினந்து வருத்தாதபடி உயிரினங்களின் சினத்தையும் அகற்றி ; பொய் நீக்கி - மாந்தர் பொய் பேசாவண்ணம் செய்து ; செங்கோலினுல் கூற்றம் காய்ந்து - தனது செங்கோல் முறைமையாலேயே தனது ஆட்சியின்கண் முறைபிறழ்ந்து மறலியும் புகுந்துயிரைக் கவராதபடி அவனையும் தடுத்து; கொடுக்க எனுந்துணைமாற்றமே கவின்ருன் - தான் தன் குடிமக்களுக்கு ஆணை பிறப்பிப்பதாயின் உடையோர் எல்லாம் இல்லோர்க்கு வழங்குமின் ! என்னும் இந் நல்லறத்தையே ஆணையாகப் பிறப்பிக்குமளவேயன்றி அவர் வருந்தும்படி பிறிதோர் ஆணையும் இடானுயினுன், தடுமாற்றத்துத் தோற்றந் தன்னையும் காமுறத் தோன்றினுன் - இங்ஙனமிருந்தவாற்ருல் இவன் ஆட்சியில் இன்புற்றிருந்தோரெல்லாம் வீடு வேண்டாராய்த் தடுமாற்றத்திற்குக் காரணமான பிறப்பினையும் விரும்புவாராகும்படி தோன்றித் திகழ்வானுயினன் என்பதாம்.

(வி - ம்.) செங்கோன் முறை பிறழாத வேந்தர் ஆளும் நாட்டில் உயிரினங்கள் சினந்தவிர்ந்து அருட்குணமுடையவாய் ஒன்றந் கொன்று தீமைசெய்யாவாகலின், "செங்கோலினால் சீற்றம் செற்றுப் போய் நீங்கினன்" என்றார்.

இதனை,

"………பரல் வெங்கானத்துக்
கோல்வ லுளியமுங் கொடும்புற் றகழா
வாள்வரி வேங்கையு மான்கண மறலா
அரவுஞ் சூரு மிரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோற் றென்னவர் காக்கும் நாடு"

எனவரும் இளங்கோவடிகளார் மொழியானும் (கங : ௪)

"அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேற் றிரையற் படர்குவி ராயின்
கேள்வன் நிலையே கெடுகநின் னவலம்
அத்தஞ் செல்வோர் அலறத் தாக்கிக்
கைப்பொருள் வௌவும் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்
உருமும் உரறு தரவுந் தப்பா
காட்டு மாவும் உறுகண் செய்யா வேட்டாங்கு
அசைவுழி அசைஇ நசைவுழித் தங்கிச்
சென்மோ இரவல!"

எனவரும் பெரும்பாணாற்றுப்படையானும் (௩௬ - ௪௫) உணர்க.

"கருதலரும் பெருங்குணத்தோ ரிவர்முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவன முழுதாண்டு சுடர்நேமி செலநின்றோர்
பெருதுறைசேர் வேலினுய் புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையி னீருண்ண வுலகாண்டோ னுளனொருவன்"

எனவரும் இராமாவதாரத்தினும் (குலமுறை, ௪) இக் கருத்து வருத லுணர்க.

இனிச் செங்கோலரசர் நாட்டில் உயிரினங்கள் தத்தமக்கியன்ற அகவை நாளெல்லாம் வாழ்ந்து இயல்பாக இறத்தலன்றி இளம் பருவ முதலிய காலத்தே இறத்தல் இல்லையாகலின், செங்கோலினாற் கூற்றங் காய்ந்து என்றார். இக் கருத்தினை :—

"கூற்ற மில்லையோர் குற்ற மிலாமையால்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செய்கையால்

ஆற்ற னல்லற மல்ல திலாமையால்
ஏற்ற மல்ல திறிதக வில்லையே''

எனவரும் இராமாவதாரத்தானும் (நாட்டுப். கக)

''மன்னவன் செங்கோன் மறுத்தலஞ்சிப் பல்லுயிர் பருகும் பகு வாய்க் கூற்றம் ஆண்மையிற் றிரிந்து'' எனவரும் (கு : உகஅ - உ0) சிலப்பதிகாரத்தாலும்,

''மாறழிந்தோடி மறலியொளிப்ப முதுமக்கட் சாடிவகுத்த தரா பதியும்'' எனவரும் விக்கிரம சோழனுலாவாலும் (எ - அ),

''மறனி னெருங்கி நெறிமையி னேரிக்
கூற்றுயிர் கோடலு மாற்ரு தாக
வுட்குறு செங்கோ லோறின்று நடப்ப'' (ச. உ : ருச - சு)

எனவரும் பெருங்கதையானும் உணர்க.

இனி, செங்கோன்மை முறையினின்று அருளாட்சி செய்கின்ற வேந்தன் குடை நீழலில் வாழ்பவர் மீண்டும் மீண்டும் அந் நாட்டிற் பிறத்தற் கவாவுதலின் தடுமாற்றத்துத் தோற்றந் தன்மையும் காமுறத் தோன்றினன் என்ருர். இனி இவ்வறவேந்தனைக் கண்டோர் இத்தகைய அறவோனைப் பிறத்தல் வீடுபேற்றினும் சிறப்புடைத்து ஆதலால் பனித்தப் பிறப்பும் வேண்டுவதே என்று தடுமாற்றத்துத் தோற்றந் தன்மையும் காமுறத் தோன்றினன் எனினுமாம். (கசு)

குற்றங் கடிதல்

கஎ. மண்ணுளார் தம்மைப் போல்வார்
மாட்டதே யன்று வாய்மை
நண்ணினர் திறத்துங் குற்றங்
குற்றமே நல்ல வாகா
விண்ணுளார் புகழ்தற் கொத்த
விழுமியோ னெற்றி போழ்ந்த
கண்ணுளான் கண்டந் தன்மேற்
கறையையார் கறையன் றென்பார்.

(இ - ள்) விண்ணுளார் புகழ்தற்கு ஒத்த - வானுலகத்தே வாழுகின்ற தேவர்களும் புகழ்ந்து பாராட்டுதற் கேற்ற; விழுமியோன் - சிறப்பினையுடையவனும்; நெற்றிபோழ்ந்த கண் உளான்- நெற்றியைப் பிளந்து தோன்றிய நெருப்புக் கண்ணை யுடையவனும் ஆகிய சிவபெருமானுடைய; கண்டம் தன்மேல் கறையை-மிடற்றின் கண்ணமைந்த களங்கத்தை ; யார் கறை அன்று என்பார் - யார் தாம் களங்கம் அன்று என்று கூறுவார் ? அங்ஙனமே ; குற்றம் மண்ணுளார் தம்மைப் போல்வார் மாட்டதே அன்று – குற்றம்

என்பது இந் நிலவுலகத்தே வாழும் மக்கள் போல்வாரிடத்து மட்டும் உண்டாவதொன்றன்று; குற்றம் வாய்மை நண்ணினர் திறத்தும் - குற்றமானது மெய்யுணர்வு பெற்ற மேலோரிடத்துத் தோன்றினும்; குற்றமே - குற்றமாகவே கொள்ளப்படுவதன்றி; நல்ல ஆகா - அவர் மேலோர் என்பதற்காக நல்லனவாகி விடா; ஆதலால் எத்தகையோரும் தம்பாற் குற்றம் நிகழாதபடி விழிப்புடனிருத்தல் வேண்டும் என்பதாம்.

(வி - ம்.) ஆதலால் எத்தகையோரும் தம்பாற் குற்றம் நிகழாதபடி விழிப்புடன் இருத்தல் வேண்டும் என்பது குறிப்பெச்சம்.

கந்தருவர் அரக்கர் முதலியோரையும் கருதி மண்ணுளார் தம்மைப் போல்வார் என்றார். வாய்மை நண்ணினர் என்றது மெய்யுணர்வு கைவரப் பெற்ற மேலோரை!

"தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்" —குறள், ௪௩௩

எனவும்,

"குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை" —குறள், ௪௩௪

எனவும் வரும் அருமைத் திருக்குறள்களையும் நோக்குக. (௧எ)

இடுக்கணழியாமை

௧அ. மறிப மறியு மலிர்ப மலிரும்
பெறுப பெரும்பெற் றிழப்ப விழக்கும்
அறிவ தறிவா ரழுங்கா ருவவா
ருறுவ துறுமென் றுரைப்பது நன்று.

(இ - ள்.) மறிப மறியும் - அழியும் பொருளெல்லாம் அழிந்தே தீரும்; (அவற்றை மழியாமற் பாதுகாத்த லியலாது) மலிர்ப மலிரும் - அங்ஙனமே வளரும் ஊழுடையன வெல்லாம் வளர்ந்தே தீரும்; (அவற்றை வளராமற் றடுக்கவுமியலாது) பெறுப பெறும்-பயன் பெறுமூழ்ற ஆகூழுடையன பெற்றே தீரும்; (அப் பயனைப் பெறுவண்ணம் செய்தலுமியலாது); பெற்று இழப்ப இழக்கும் - அங்ஙனமே, பெற்ற பயனை இழக்கும் போகூழுடையன அவற்றை இழந்தே தீரும்; (இழவாதபடி செய்ய வியலாது) அறிவது அறிவார்—ஆகலால் அறிதற்குரிய பொருளியல்பினை அறிந்த மேலோர்; அழுங்கார் - தமக்குப் பொருளிழவு நேர்ந்துழி இது பொருளியல்பென் றுணர்ந்து அவ் விழவின் பொருட்டு வருந்துதலிலர், உவவார் - அங்ஙனமே தாம் சிறந்த பேறுகளைப் பெற்ற வழியும் இஃது ஊழின் செயலென் றுணர்ந்து அப்பேறு கருதியும் பெரி

துங் களிப்பதுமில ராவர்; உறுவது உறுமென்று உரைப்பது நன்று - ஆதலால் 'வருவது வந்தே தீரும்' என்று உலகோர் கூறும் பழமொழி மிகவும் வாய்மையுடையதென்று கொண்மின் என்பதாம்.

(வி - ம்.) உறுவதுறும் என்பது ஒரு பழமொழி.

மறிப, மலிர்ப, பெறுப, இழப்ப என்பன பலவறிசொல்.

மெய்யுணர்வுடையோர் யாது நிகழ்ந்தாலும் எல்லாம் ஊழின் செயலென்று கருதி அமைதியுடனிருப்பர். செல்வம் வந்துழிக் களிப்பதிலர். வறுமை வந்துழி வருந்துவதுமில்லை என்றவாறு. இக் கருத்தோடு,

"யாதும் ஊரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே"

எனவரும் கணியன் பூங்குன்றனார் பொன்மொழியும், (புறநா-௧௯௨)

"மெய்த்தி ருப்பத மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்
சித்தி ரத்தி னலர்ந்தசெந் தாமரை
யொத்தி ருந்த முகத்தினை யுன்னுவாள்"

எனவரும் கம்பநாடர் கவின்மொழியும் ஒப்புநோக்கற்பாலன. (௧௭)

இதுவுமது

௧௮. வேரிக் கமழ்தா ரரசன்விடு
கென்ற போழ்தும்
தாரித்த லாகா வகையாற்கொலை
சூழ்ந்த பின்னும்

பூரித்தல் வாடுதலென் றிவற்ருற்பொலி
வின்றிநின்ருன்
பாரித்த தெல்லாம் வினையின்பய
னென்ன வல்லான்.

(இ - ள்.) வேரி கமழ் தார் அரசன்-மணங்கமழ்கின்ற மலர் மாலையணிந்த மன்னவன்; விடுக என்ற போழ்தும் - சிறைவீடு செய்க என்று கட்டளையிட்ட காலத்தும்; தாரித்தல் ஆகா வகை யால் - இவன்பால் எழுந்த சீற்றம் பொறுக்கலாகாமையாலே; கொலை சூழ்ந்த பின்னும் - கொலை செய்யும்படி கட்டளையிட்ட பின்னரும்; பூரித்தல் வாடுதல் என்று இவற்ருல் - உவகையாலே தோன்றும் பூரிப்பாகிய மெய்ப்பாட்டினுலாதல் அல்லது துன் புற்று வாடுதல் என்னும் மெய்ப்பாட்டினுலாதல்; பொலிவு இன்றி - தன் உடம்பின்கண் யாதொரு தோற்றமும் காணப்படுதலின்றி; நின்ருன்-அமைதியாக நின்றனன், அஃதெற்ருலெனின்; பாரித்த தெல்லாம் - தனக்கு நுகர்ச்சியாக விரிந்து வருகின்ற நிகழ்ச்சிகள் எல்லாம்; வினையின் பயன் என்ன வல்லான் - தான் முன் செய்த பழவினையின் பயன்களே யன்றிப் பிறவில்லை என்னும் மெய்யுணர் வினுல் வன்மையுடையோன் ஆகலின் என்பதாம்.

(வி - ம்.) இதனுல் குறிக்கப்படுகின்ற மெய்யுணர்வாளன் யார் என்றும் அவன் சிறைப்படுதற்கும் சிறைவீடு பெறுதற்கும் பின்னர்க் கொலை செய்க என்று மன்னன் கட்டளை யிடுதற்கும் உற்ற வரலாறு சிறிதும் அறிகின்றிலேம். இதனுல் குண்டலகேசி என்னும் பெருங்காப்பியத்தில் இன்னேரன்ன வரலாறுகள் இருந்தன என்று மட்டும் அறிகின்ருேம்.

இனி இச் செய்யுளால் ஒரு மன்னன் ஒருவனைச் சிறைப்பிடித்து ஒருகால் சிறைவீடு செய்க என்றும் பின்னும் (அமைச்சர் முதலியோர் அறிவுரை கேட்டமையாற் போலும்) கொன்று விடுக! என்றும் கட்டளையிட்டான் என்றும்; இதற்கு ஆளாகியவன் தன் மெய்யுணர்வு காரணமாகச் சிறைவீடு செய்க என்றபோது மகிழாமலும் கொலை செய்க என்றபோது வருந்தாமலும் அமைதியுடனிருந்தான் என்றுணரு கின்ருேம். இச் செய்யுள் இராமகாதையுள் தயரதன் இராமனை அழைத்து இனி நீ இவ்வரசாட்சியை ஏற்றுக் கொள்க என்று வேண்டிய பொழுது,

"தாமரைக் கண்ணன்
காதலுற்றிலன் இகழ்ந்திலன்" —கம்ப - மந்திர - எ௦

எனவரும் கம்பநாடர் பொழியும்; யசோதர காவியத்துள் மாரிதத்தன் என்னும் மன்னவன் மாரி என்னுந் தெய்வத்திற்குப் பலியிடுதற்குப் பிடித்து வந்த அபயருசி அபயமதி என்னும் அண்ணனும் தங்கையும் தம்மைப் பலியிடப் போதலறிந்தும் அமைதியுடனிருத்தல் கண்டு அவ் விளந் துறவியை நோக்கி அவ் வேந்தன் :

"இடுக்கண் வந்துறவு மெண்ணு
தெரிசுடர் விளக்கி னென்கொல் ?
நடுக்கமொன் றின்றி நம்பால்
நகுபொருள் கூறு கென்ன,"

அது கேட்ட அவ்விளந்துறவி, வேந்தே!

"அடுக்குவ தடுக்குமாஅல் அஞ்சுதல் பயனின் றென்றே
நடுக்கம தின்றி நின்றும் நல்லறத் தெளிவு சென்றும்"

என விடை யிறுத்தமையும் நம் நினைவிற்கு வருகின்றன.

இன்னும்,

"இடுக்கண்வந் துற்ற காலை யெரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானு மின்றி நகுகதா நக்க போழ்தவ்
விடுக்கணை யரியு மெஃகா மிருந்தழுதி யாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறுங்க ளன்றே"

என வரும் சீவகசிந்தாமணியும் (௫0௧),

"பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம" —குறள், ௩௭௬

எனவும்,

"நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்" —குறள், ௩௭௯

எனவும் வரும் திருக்குறள்களும் ஈண்டு நினையற் பாலனவாம். (௧௧)

குண்டலகேசி என்னும் பெருங்காப்பியத்தின்கண் பெரும்பாலும்
அழிந்தனபோக எஞ்சி நின்று
இற்றைநாள் கிடைத்துள்ள செய்யுள் பத்தொன்பதிற்கும்
பெருமழைப்புலவர். பொ. வே. சோமசுந்தரனார் வகுத்த
சொற்பொருள் உரைகளும் விளக்கவுரையும்
ஒப்புமைப் பகுதிகளும்

முற்றும்.

———

## வினாயர்பதி

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]



---

## குண்டலகேசி

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]



---

## வளையாபதி

## அருஞ்சொல் அகரவரிசை

[எண் : செய்யுள் எண்]

# காப்பிய நூல்கள்

சிலப்பதிகாரம் :

பெருமழைப் புலவர் விளக்க உரை

மணிமேகலை :

ந. மு. வேங்கடசாமி நட்டார்,
ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை உரை

சீவக சிந்தாமணி : (இரண்டு பகுதிகள்)
—புலவர், அரசு உரையுடனும்
பொ. வே. சோமசுந்தரனார்
விளக்க உரையுடனும் (கலிக்கா)

சூளாமணி : (இரண்டு பகுதிகள்)
பெருமழைப் புலவர் விளக்க உரை

யசோதர காவியம் :
ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை உரை

நீலகேசி :
பெருமழைப் புலவர் விளக்க உரை

பெருங்கதை : (பொ. வே. சோமசுந்தரனார் உரை)

க. உஞ்சைக் காண்டம்
உ. இலாவாண காண்டம்
ங. மகத காண்டம்
ச, ரு. வத்தவ காண்டமும்
நரவாண காண்டமும்

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
சென்னை-1
திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

